

# மதுரை காமராசர் பல்கலைக் கழகம்

(ஆற்றல்சால் பல்கலைக்கழகம்)



## தொலைநிலைக் கல்வி

## பி.லிட். (தமிழ்)
## மூன்றாமாண்டு

## தாள் - 5
## இலக்கணம் - 7

# தொல்காப்பியம் பொருளதிகாரம்

DEC அங்கீகாரம் பெற்றது

w.w.w.mkudde.org

**S 2816**

அன்புள்ள மாணவச் செல்வங்களே!

வணக்கம்!

பி.லிட் மூன்றாமாண்டில் அடியெடுத்து வைக்கும் உங்களை, மதுரை காமராசர் பல்கலைக்கழகத்தின் தொலைநிலைக்கல்வித் தமிழ்த்துறை அன்போடு வரவேற்கிறது. மூன்றாமாண்டில் 'சுற்றுச்சூழலியல்' என்னும் பாடம் அனைத்துப் பட்ட வகுப்பு மாணவர்களுக்கும் பொதுவான பாடமாகும்.

முதலாமாண்டில் ஆறு தாள்களும், இரண்டாமாண்டில் ஏழு தாள்களும் பயின்ற நீங்கள் இந்த ஆண்டில் கற்க உள்ள பாடங்கள் மொத்தம் ஏழு. அவை பின்வருமாறு

தாள் : 1 பண்டை இலக்கியம்

தாள் : 2 நீதி இலக்கியம்

தாள் : 3 இலக்கணம் - 5 - தொல்காப்பியம் - எழுத்ததிகாரம்

தாள் : 4 இலக்கணம் - 6 - தொல்காப்பியம் - சொல்லதிகாரம்

தாள் : 5 இலக்கணம் - 7 - தொல்காப்பியம் - பொருளதிகாரம்

தாள் : 6 மொழி பெயர்ப்பியல்

தாள் : 7 சுற்றுச் சூழலியல்

உங்களுக்குக் கொடுக்கப்பட்டுள்ள பாடங்களை நன்கு படியுங்கள். நீங்கள் தானாகவே படித்துப் புரிந்து கொள்ளும் வகையிலேயே பாடங்கள் எளிமையாகத் தயாரிக்கப்பட்டுள்ளன. பாடங்களில் உள்ள தன் மதிப்பீட்டு வினாக்களுக்கும், பயிற்சி வினாக்களுக்கும் விடை எழுதிப் பயிலுங்கள். படிக்கும் போது ஐயங்கள் தோன்றின் ஐயத்தைத் தொடர்பு வகுப்புகளில் உங்களுக்குப் பாடம் நடத்த வரும் ஆசிரியர்களிடம் கேட்டுத் தெளிவு பெறலாம். நன்கு படித்துத் தேர்வில் வெற்றி பெற வாழ்த்துகிறோம். தொடர்பு வகுப்புகளுக்குத் தவறாது வந்து படித்துப் பயன் பெறுக.

# பி.லிட். மூன்றாமாண்டு

## தாள் : 5 இலக்கணம் - 7 தொல்காப்பியம் - பொருளதிகாரம்

### பாடத்திட்டம்

| தாள் : 7 | இலக்கணம் | பொருள் | நூற்பா |
|---|---|---|---|
| கூறு - 1 | தொல்காப்பியம் | அகத்திணையியல | 58 |
| | | புறத்திணையியல் | 30 |
| கூறு - 2 | தொல்காப்பியம் | களவியல் | 51 |
| | | கற்பியல் | 53 |
| | | பொருளியல் | 52 |
| கூறு - 3 | தொல்காப்பியம் | மெய்ப்பாட்டியல் | 27 |
| | | உவமவியல் | 38 |
| கூறு - 4 | தொல்காப்பியம் | செய்யுளியல் | 235 |
| கூறு - 5 | தொல்காப்பியம் | மரபியல் | 112 |

## பாடங்களின் அமைப்பு

## அறிமுகம்

(முன்னுரை - தொல்காப்பியப் பெருமை - பொருளதிகாரச் சிறப்பு - பாடப்பகுதி - அகத்திணையியல் - புறத்திணையியல் - களவியல் - கற்பியல் - பொருளியல் - மெய்ப்பாட்டியல் - உவமவியல் - செய்யுளியல் - மரபியல் - முடிவுரை)

## முன்னுரை :

தமிழ் மொழியின் இலக்கண மரபில் தொன்மையானதும் முதன்மையானதும் தொல்காப்பியமே. இந் நூல் எழுத்து, சொல், பொருள் என்ற மூன்றையும் அடிப்படையாகக் கொண்டுள்ளது. அவற்றுள் பொருளதிகாரத்தைப் பற்றி விளக்குவதே இதன் நோக்கமாகும்.

## தொல்காப்பியப் பெருமை :

வடமொழியின் பழம்பெருமையை நிலைநாட்ட வேத சாத்திரங்கள் சிறந்து விளங்குவன போலத் தென்மொழியின் பழம் பெருமையைப் பறை சாற்றுவது தொல்காப்பியம். இது தமிழ் மக்களது பேரறிவின் கருவூலமாகத் திகழ்கிறது. இந்நூல் காலத்தால் முந்தியதோடன்றிச் சிறப்பினாலும், தமிழர்தம் மொழிச்சீர்மை, அறம், மானம் சிறப்பும் அறிதற்கு உதவுகிறது. மேலும் பின் வந்த இலக்கணுங்களுக்கெல்லாம் ஒரு கலங்கரை விளக்கமாகத் திகழ்வது தொல்காப்பியம் ஆகும்.

## பொருளதிகாரச் சிறப்பு :

அகம், புறம் என இரண்டும் பொருள் எனப் பேசப்படும். பொருளினது இலக்கணம் உணர்த்தும் அதிகாரம் பொருளதிகாரம். அப்பொருளாவது மாந்தர்க்கு உறுதி பயத்தற்பால என உயர்ந்தோரால் ஓதப்பெற்ற அறம், பொருள், இன்பம், வீடு என்பன. இந்நான்கினையும் வடநூலார் 'தர்மார்த்த காம மோட்சம் என்பர். உற்று நோக்கின் இந்நான்கின் அடங்காது புறம்பாகிய பொருள் இவ்வுலகில் ஒன்றுமின்று என்பது அனைவரும் அறிந்ததே. பொருள் இலக்கியத்திற்கு உயிர் போன்றது.

அகம், புறம் என்னும் இருதிணை வடிவமைந்த பொருளிலக்கியம் இன்றும் அறிவுலகிற்குப் புதியது. தமிழ்மொழி ஒன்றின் கண்ணேதான் காணப்படுவது என்று பன்மொழியறிஞர்கள் மொழிகுவர்' என்பார் வ,சுப, மாணிக்கனார். அதனைப் பறைசாற்றும் தொல்காப்பியப் பொருளதிகாரத்தில் 1,3,4,5 ஆவது பகுதிகளில் காதல் பற்றிய கவிதையியல் அறிவியலும் 2வது பகுதியில் காதல் நீங்கலாக அரசு, போர் முதலானவையும் விளக்கப்படுகிறது. இப்பொருளதிகாரத்தில் இடம்பெற்றுள்ள ஒன்பது இயல்களும் தனித்தனி நூலாகக் கருப்படக்கூடியதாகும். இது தமிழர்தம் அறிவுக் கருவூலம். தமிழக வாழ்க்கை நெறிகாட்டி, மக்களை மாக்களினின்றும் பிரித்துக் காட்டுவது தமிழர் நாகரீகம், போர், படை, குடி, செல்வம், காதல், வாழ்வு, அன்பு, முறை, நாடு, நகர், வளம் இவை போன்ற பிறவும் சுரக்கும் அறிவு வேட்கை ஆற்றும் வற்றாத ஊற்று எனில் மிகையில்லை.

## பாடப்பகுதி

இத்தகு தொல்காப்பியப் பொருளதிகாரத்தில் ஒவ்வொரு உரையாசிரியர்களின் உரைகளிலும் நூற்பாக்களின் எண்ணிக்கையில் மாறுபாடுகள் காணப்படுகின்றன. இருப்பின் நாம் எடுத்துக் கொண்ட இளம்பூரணரின் உரையின்படி மொத்தம் 656 நூற்பாக்கள் உள்ளன. இஃது அகத்திணையியல் தொடங்கி மரபியல் வரையிலான 9 இயல்களைக் கொண்டுள்ளது.

## அகத்திணையியல்

'திணை' என்பதற்கு 'ஒழுக்கம்' என்றும் 'நிலம்' என்றும் பொருள். திணையில் நிகழும் உயிர்களின் இன்ப வாழ்வே காதல். காதலே உலகத்தின் உயிர். உலகப் பெருக்கத்திற்கும் வளத்திற்கும் காதலே அடிப்படை, காதல் காதல் காதல்; காதல் போயிற் சாதல் சாதல் சாதல் என்பார் பாரதியார். காதல் வாழ்வே இலக்கியத் தோற்றத்திற்கு உரிய விளைநிலம். ஆதலின் அதுபற்றி இலக்கியத்தில் கூறும் மரபுகளைத் தொகுத்துரைப்பதே அகத்திணையியலாகும். காதலை அகம் என்றது ஏன்? எந்த அன்பால் ஒருவனும் ஒருத்தியும் கூடுகின்ற காலத்துப் பிறந்த பேரின்பம். அக்கூட்டத்தின் பின்னர் அவ்விருவரும் ஒருவருக்கொருவர் தத்தமக்குப் புலனாக இவ்வாறு இருந்ததெனக் கூறப்படாததாய் யாண்டும் உள்ளத்துணர்வே நுகர்ந்து இன்பமுறுவதோர் பொருளாதலின் அதனை அகம் என்றார்.

இவ் அகவொழுக்கம் ஏழு வகைப்படும். அவை கைக்கிளை, முல்லை, குறிஞ்சி, பாலை, மருதம், நெய்தல், பெருந்திணை என்பன. இவைபற்றிக் கூறும் அகத்திணையியல் 58 நூற்பாக்களைக் கொண்டுள்ளது.

## புறத்திணையியல்

புறம் என்பதும் அகத்திற்கு மறுதலையானது. அதாவது காதலுக்குத் துணையாக வீட்டிற்கு வெளியே நிகழக் கூடிய போரும், பொருளீட்டலும், அரசியலும், அறப்பணிகளும் என்று கூறலாம். அகத்திணை ஏழு என்பதைப் போல் புறத்திணையும் ஏழு ஆகும்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| குறிஞ்சி | - | வெட்சி | முல்லை | - | வஞ்சி |
| மருதம் | - | உழிஞை | நெய்தல் | - | தும்பை |
| பாலை | - | வாகை | பெருந்திணை | - | காஞ்சி |

கைக்கிளை - பாடாண்

இவ்வாறு ஒவ்வோர் அகத்திணைக்கும் ஒவ்வொரு புறத்திணை புறனாக அமைந்துள்ளது. இப்பகுதி மொத்தம் 30 நூற்பாக்களைக் கொண்டுள்ளது.

## களவியல்

களவொழுக்கத்தினை உணர்த்துவதால் இவ்வியல் களவியல் ஆனது. ஒத்தத் தலைமகனும் தலைமகளும் கொடுப்பாரும் கொள்வாரும் இன்றி ஊழ்வினையால் தாமே எதிப்பட்டுக் கூறுவது. இக்களவு அன்பொடு புணர்தலின் 'காமக் கூட்டம்' என்றும் வழங்கப்படும். மேலும் இதனை 'மறைந்த ஒழுக்கம், அருமறை என்ற சொற்களாலும் தொல்காப்பியர் குறிப்பர். இஃது எண்வகை மணங்களுள் காந்திருவத்தின் பாற்படும். காந்திருவமாவது காந்தர்வ குமாரரும் அவர் மகளிரும் தம்முன் எதிர்ப்பட்டு மணமியைந்து கூடுதல். அதுபோலத் தலைவனும் தலைவியும் எதிர்ப்பட்டு மணமியைந்து கூடுவது. இவ்வொழுக்கம் தமிழ் வழக்கே என்பர் மு.இராகவையங்கார். இக்களவியல் 51 நூற்பாக்களைக் கொண்டுள்ளது.

## கற்பியல்

கற்புக்கு இலக்கணம் உணர்த்தும் இயல் 'கற்பியல்' ஆகும். களவில் கூடி இன்புற்றத் தலைவனும் தலைவியும் பலர் அறியத் திருமணம் புரிந்து கொண்டு வாழும் வாழ்க்கையைக் குறிப்பிடுவதே கற்பாகும். இதற்குத் தொல்காப்பியர் 'கற்பென்று சொல்லப்படுவது திருமணச் சடங்கோடு பொருத்திக் கொள்வதற்குரிய மரபினையுடைய தலைவன் கொடுப்பதற்குரிய மரபினையுடைய தந்தை, தாய் முதலியோர் தலைவியைக் கொடுப்பக் கொள்வது என்பர். தமர் அறியாமல் தலைவி, தலைவனுடன் சென்று அவன் ஊரில் மணந்து கொள்வதையும் கற்பென்று கொள்ளலாம். இவ்வியல் மொத்தம் 53 நூற்பாக்களைக் கொண்டுள்ளது.

## பொருளியல்

பொருளியல்பு உணர்த்தும் இயலாதலின் 'பொருளியல்' ஆனது. அகத்திணையியல் முதலான 4 இயல்களிலும் பின்னர்ச் சொல்லப்படும் மெய்பாட்டியல் முதலான 4 இயல்களிலும் வரும் பொருளினது தன்மையை உணர்த்துவதால் 'பொருளியல்' ஆயிற்று என்பர் உரையாசிரியர். இதனை 'ஒழிபியல்' என்று சொன்னாலும் இழுக்காகாது. அகப்பொருள், புறப்பொருள் ஆகிய இவ்விரண்டிலும் சொல்லாதனவெல்லாம் இவ்வியல் உணர்த்துகிறது.

## மெய்ப்பாட்டியல்

மெய்யில் தோன்றும் எண்வகையான உணர்வு வேறுபாடுகளை விளக்குவதால் இது மெய்ப்பாட்டியல் ஆனது. மெய்யிற்படுதல் மெய்ப்பாடு ஆகும். மெய் என்பது உடம்பையும் உண்மையையும் குறிக்கும். மெய்ப்பாடு என்பது அவ்வுணர்வுகளை ஆழ்ந்து ஆராயாமலே யாரும் இனிதறியப் புலப்படுத்தும். இயற்புறவுடற்குறியாம். இதனைப் புலவர் செய்யுளில் புலப்பட அமைத்தல் வேண்டுமாதலின் செய்யுள் உறுப்புகளுக்குள் மெய்ப்பாடு சிறப்பிடம் பெற்றது. தொல்காப்பியர் உள்ளத்தில் தோன்றும்

உணர்ச்சிகளை மெய்ப்பாடுகளாகத் தொகுத்து 8 வகை என்றும் நிலைக்கலன்கள் 32 என்றும் குறிப்பிடுகின்றார். இவ்வியல் மொத்தம் 27 நூற்பாக்களைக் கொண்டுள்ளது.

**உவமவியல்**

ஒரு பொருளோடு ஒரு பொருளை ஒப்புமைக் கூறுதல் பற்றி விளக்குவதால் இஃது உவமவியல் என்னும் பெயர் பெற்றது. மனிதனிடம் என்று எண்ணம் தோன்றியதோ அன்றே மொழியும் தோன்றியிருக்கும். காணப்பட்ட பொருள்களை ஒப்பிட்டுப் பார்க்கும் இயல்பு மனிதனிடம் இயற்கையாக அமைந்துள்ள தன்மையாகும். மனிதனால் படைக்கப்படுகின்ற கவிதையில் இவ்வொப்பு நோக்கு மிகுதியும் பயன்படுவதாகும். அதாவது பொருள்களைத் தொழில், பயன், வடிவு, திறன் என்பவற்றால் ஒப்புமைப் படுத்திக் கூறுவதாகும். இவ்வியலே 35 அணிகளை உள்ளடக்கிய தண்டியலங்காரம் தோன்றக் காரணமானது. இவ்வியல் 38 நூற்பாக்களைக் கொண்டுள்ளது.

**செய்யுளியல்**

செய்யுள் எவ்வாறு அமைய வேண்டும் என்பதனை விளக்குவதனால் இவ்வியல் செய்யுளியல் ஆனது. பாட்டு, உரைநடை இரண்டும் செய்யுள் என்னும் பெயரால் வழங்கி வந்தது. இது கேட்போருக்கு இன்பம் பயப்பது ஆகும். செய்யுள் உறுப்புகளால் கட்டப்படுவதே யாப்பு. இவ் யாப்பு உறுப்புகள் 26 உடன் இணைந்த செய்யுள் உறுப்புகள் மொத்தம் 34 என்று குறிப்பிடப்படுகின்றன. இவ்வியல் மொத்த 235 நூற்பாக்களைக் கொண்டுள்ளது.

**மரபியல்**

மரபு என்பது தொன்று தொட்டு வழிவழியாக வழங்கி வருவதாகும்.

*மரபே தானும்*
*நாற்சொல் வியலான் யாப்புவழிப் பட்டன்று"*

என்கிறது தொல்காப்பியம்.

மரபாவதுதான் இயற்சொல், திரிசொல், திசைச்சொல், வடசொல் என்னும் நாற்சொல்லின் இயற்கையானே யாப்பின் வழிப்பட்டது என்பர் இளம்பூரணர். இலக்கியத்திலும் மரபு என்பது இன்றியமையாததாகும். மரபு நிலைத் திரியா மாட்சியதாகப் பொருள்களை வழங்க வேண்டும். இத்தகு செய்திகளை உள்ளடக்கியமையால் இவ்வியல் மரபியல் ஆனது. இவ்வியல் 112 நூற்பாக்களைக் கொண்டுள்ளது.

**முடிவுரை**

தொல்காப்பியப் பொருளதிகாரம் கவிதையியலின் இயல்பும், இயங்கு முறையும் ஆகியன பற்றி விளக்குகின்றது. தமிழ்ச் செய்யுளின் இரண்டு

பிரிவுகளாகிய அகம்-புறம் என்பனவற்றின் இலக்கணங்களை இயம்புகிறது. நில அமைப்பு, பருவகாலம், ஒவ்வொரு திணைக்கும் ஏற்ற பொழுது, மரங்கள், பல்வேறு நிலத்தற்கு ஏற்றவாறு அமையும் மலர்கள் ஆகியன பற்றி இவை கூறுவன. சுருங்கச் சொன்னால் மனித நடத்தைக்கு இயற்கை எத்துணை அடிப்படையாக அமைந்துள்ளது என்பதை இதனால் அறிய முடிகின்றது.

திணைச் செய்யுட்கள் பற்றிய கொள்கைகள், விதிகள், நடைமுறைகள் ஆகியன தொல்காப்பியரால் விரிவாக எடுத்துரைக்கப்பட்டுள்ளன. மேலைநாட்டு மொழிகளில் இல்லாத தனித்தன்மை (அகம்,புறம்,யாப்பு) நம் மரபில் பொதிந்துள்ளமையினைத் தொல்காப்பியத்தின் வழி அறிய முடிகின்றது.

# அலகு - 1

# அகத்திணையியல்

### அறிமுகம்

அகம் என்பது மனித வாழ்வின் அடிப்படை நாதமாக விளங்குவது. அதன் பொருட்டே சங்க இலக்கியங்களில் பெரும்பான்மை அகப்பாடல்களாகவே காணப்படுகின்றன. 2381 சங்கப்பாடல்களுள் 1862 அகப்பாடல்களாகும். அகத்திணையியல் என்னும் இப்பகுதியும் அதனைப் பற்றியே குறிப்பிடுகின்றது. இப்பகுதியில் திணை, நிலம், பொருள், பிரிவு பற்றியும் நற்றாய், தோழி, கண்டோர், தலைவன் கூற்று பற்றியும் உவமை, கைக்கிளை, பெருந்திணை பற்றியும் விளக்கப்படுகின்றன.

### நோக்கம்

அகத்திணையின் கூறுகளையும், பாகுபாடுகளையும் விளக்குவதே இப்பகுதியின் நோக்கமாகும். இதன் வாயிலாக மாணவர்கள் நம் பண்டைய வாழ்க்கை முறையின் இயல்புகளை அறிந்து கொள்ள வாய்ப்பாக அமையும்.

**பாடம் - 1 அகத்திணையியல்**

**பொருளடக்கம்**

# பாடம் - 1

# அகத்திணையியல்

தொல்காப்பியப் பொருளதிகாரத்தில் அகத்திணையியல், களவியல், கற்பியல், பொருளியல் என்னும் நான்கும் அகவாழ்வின் இலக்கணங்களைச் சுட்டுகின்றன. இவ்வகம் என்பது தலைவன் தலைவியரின் களவு மற்றும் கற்பு வாழ்வைச் சுட்டுகின்றது. இதனையே பொருள் என்று குறிப்பிடுவர். சொல்லால் உணரப்படுவது பொருள். அப்பொருள் மூன்று வகைப்படும். அவை முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் ஆகும். இவைபற்றியும், அகவாழ்வில் இடம்பெறும் மாந்தர்களின் கூற்றுகள் பற்றியும் பிரிவு பற்றியும் உவமம், கைக்கிளை, பெருந்திணை பற்றியும் விளக்கப்படுகிறது.

## 1.1 அகத்திணைப் பாகுபாடுகள்

1. இன்ப ஒழுக்கம் எத்தனை வகையாகப் பாகுபாடு செய்யப் படுகின்றன?

அகப்பொருள் பற்றிய இன்ப ஒழுக்கங்கள் மூன்று வகையாகப் பாகுபாடு செய்யப்படுகின்றன. அவை

*"கைக்கிளை முதலாப் பெருந்திணை இறுவாய்*
*முற்படக் கிளந்த எழுதிணை என்ப"*
*(1)*

ஆகும். 1. கைக்கிளை 2. அன்பின் ஐந்திணை 3. பெருந்திணை

2. கைகிளை என்றால் என்ன?

கைக்கிணை என்று சொல்லப்படும் பொருள் முதலாகப் பெருந்திணை என்று சொல்லப்படும். பொருள் ஈறாக ஏழு திணை முற்படக் கூறப்பட்டன என்று சொல்வர். முற்படக்கிளந்த எழுதிணை என்றதனால் பிற்படக் கிளக்கப்படுவன எழுதிணையும் உள என்பதாம். அவை வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை, வாகை, காஞ்சி பாடாண் என்பவவாம்.

3. ஐந்திணைகள் யாவை?

**கைக்கிளை :** கை + கிளை = கை - சிறுமை; கிளை - உறவு பெருமையில்லாத தலைமக்கள் உறவு.

**ஐந்திணை :** 'ஒத்த காமம்'. அன்பொத்து விளங்கும் இவ்வொழுக்கம் 5 பிரிவுகளை உடையது. அவை, முல்லை, குறிஞ்சி, பாலை, மருதம், நெய்தல் ஆகும். திணை எனில் ஒழுக்கம் ஆகும்.

4. பெருந்திணை என்றால் என்ன?

**பெருந்திணை :** காதல் உணர்வு எல்லை கடத்தலைக் குறிக்கும். தலைவன் தலைவியர்க்குள் எல்லை கடந்து இழிவான செய்கைகட்கு ஏதுவாகிய காதல் என்றும் குறிப்பர். இஃது ஒவ்வாக் காமம் எனப்படும்.

### 1.1.1 நிலம் உடையவை

5. உலகத்தை எங்ஙனம் பகுத்துக் கொண்டனர்?

மேற்கொள்ளப்பட்ட எழுதிணையுள் நடுவில் நின்ற முல்லை, குறிஞ்சி, பாலை, மருதம், நெய்தல் எனும் ஐந்திணையுள் (கைக்கிளைக்கும் பெருந்திணைக்கும் நடுவில் உள்ளது) நடுவில் உள்ள பாலை நீங்கக் கடலால் சூழப்பட்ட இந்த உலகத்தை முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என்று நான்காகப் பகுத்துக் கொண்டனர். (2)

### 1.2 முதல், கரு, உரி

உலகத்துப் பொருட்களை எல்லாம் முதல், கரு, உரி என்ற மூன்று வகையில் அடக்கி விடலாம்.

6. 'பொருள்' எத்தனை வகைப்படும்?

*"முதல் கரு உரிப்பொருள் என்ற மூன்றே*
*நுவலுங் காலை முறைசிறந் தனவே*
*பாடலுட் பயின்றவை நாடுங் காலை"* (3)

சான்றோர் செய்யுளகத்துப் பயின்ற பொருளை ஆராயும் காலத்து முதற்பொருள், கருபொருள், உரிப்பொருள் என சொல்லப்பட்ட மூன்று பொருண்மையும். அவை சொல்லுங் காலத்து முறைமையால் சிறந்து வருவனவாம்.

#### 1.2.1 முதற்பொருள்

*"முதல் எனப்படுவது நிலம்பொழு திரண்டின்*
*இயல்பென மொழிப இயல்புணர்ந் தோரே"* (4)

7. முதல் பொருள் யாவை?

முதல் என்று சொல்லப்படுவது நிலம், காலம் என இரண்டு வகைப்படும் என்று உலகின் இயல்பினை உணர்ந்தவர்கள் கூறுவர். (19)

**நிலம் :**

8. சேயோன் மேய ________ உலகமும்

*"மாயோன் மேய காடுறை உலகமும்*
*சேயோன் மேய மைவரை உலகமும்*
*வேந்தன் மேய தீம்புனல் உலகமும்*
*வருணன் மேய பெருமணவ் உலகமும்*
*முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் எனச்*
*சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே"* (5)

9. ________ மேய பெருமணல் உலகமும்

மாயவன் (திருமால்) மேவிய காடு பொருந்திய உலகமும், முருகன் பொருந்திய மைவரை உலகமும், இந்திரன் மேவிய தீம்புனல் உலகமும், வருணன் மேவிய பெருமணல் உலகமும் முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் எனச் சொல்லிய முறையினால் சொல்லவும்படும்.

10. பாலைக் கான நிலம்?

முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என்ற நான்கிற்கும் நிலத்தைப் பாகுபாடு செய்த தொல்காப்பியர் 'பாலை' க்குரிய நிலத்திணை வரையறை செய்யவில்லை. இதற்கான வரையறையினை இளங்கோவடிகளே குறிப்பிடுகின்றார்.

*"முல்லையும் குறிஞ்சியும் முறைமையின் திரிந்து*
*நல்லியல்பு இழந்து நடுங்குதுயர் உறுத்தப்*
*பாலை என்பதோர் 'படிவம்' கொள்ளும்"*

*(சிலம்பு. காடுகாண் : 64 - 66)*

11. பொழுது எத்தனை வகைப்படும்?

**பொழுது :**

பொழிதினை பெரும்பொழுது, சிறு பொழுது என இரண்டாகப்

பகுக்கலாம். பெரும்பொழுது என்பது ஓராண்டிற்குள் ஏற்படும் கால மாற்றங்கள் ஆகும். சிறு பொழுது என்பது ஒரு நாளுக்குள் ஏற்படும் மாற்றங்கள் ஆகும்.

12 முல்லைக் குரிய பெரும் பொழுது யாது?

*"காரும் மாலையும் முல்லை: குறிஞ்சி*
*கூதிர் யாமம் என்மனார் புலவர்"* (6,7)

கார்காலமும் மாலைப்பொழுதும் முல்லைத் திணைக்குரிய பெரும்பொழுதும், சிறுபொழுதும் ஆகும்.

13. குறிஞ்சிக் குரிய சிறுபொழுது யாது?

குறிஞ்சித்திணைக்குரிய பெரும்பொழுது கூதிர்காலம். சிறுபொழுது யாமம் ஆகும்.

குறிஞ்சித் திணைக்கு முன்பனிக் காலமும் உரித்தென்று சொல்லுவர் புலவர் (8)

*"வைகறை : விடியல் மருதம்"* (9)

14. ________ ________ மருதம்.

மருதத்திணைக்குரிய சிறுபொழுது வைகறையும், விடியலும் ஆகும்.

பெரும்பொழுது அறுவகைப்பருவமும் உரித்தாகும்.

*"எற்பாடு*
*நெய்தல் ஆதல் மெய்பெறத் தோன்றும்"* (10)

15. ________ நெய்தல்

நெய்தல் திணைக்குரிய சிறுபொழுது எற்பாடு ஆகும். இது பகற்பொழுதின் பிற்கூறு.

நெய்தலுக்கும் அறுவகைப்பருவமும் பெரும் பொழுதாகக் கொள்ளப்படும்.

16. நடுவு நிலைத் திண்ண யாது?

நடுவுநிலைத் திணையாகிய பாலையாவது நண்பகற்பொழுது (சிறுபொழுது) வேனிற் காலம் (பெரும்பொழுது) என்பனவற்றோடு புணர்ந்து நின்றவழிக் கருதிய நெறியை உடைத்து. (11)

பின்பனிக் காலமும் பாலைக்கு உரியதாகும் என்று கூறுவர். (12)

| திணை | பெரும்பொழுது | சிறுபொழுது |
|---|---|---|
| முல்லை | கார்காலம் (ஆவணி, புரட்டாசி) | மாலை (6-10) |
| குறிஞ்சி | கூதிர்காலம் (ஐப்பசி, கார்த்திகை)<br>முன்பனி (மார்கழி, தை) | யாமம் (10-2) |
| பாலை | இளவேனில் (சித்திரை, வைகாசி)<br>முதுவேனில் (ஆனி, ஆடி)<br>பின்பனி (மாசி, பங்குனி) | நண்பகல் (10-2) |
| மருதம் | அறுவகைப்பருவமும் | வைகறை (2-6)<br>விடியல் (6-10) |
| நெய்தல் | அறுவகைப்பருவமும் | எற்பாடு (2-6) |

பாலைக்குரிய பொருள் :

இருவகைப் பிரிவான தலைமகளைப் பிரிதலும் தலைமகளை உடன்கொண்டு தமர்வரைப் பிரிதலும் நிலை பெறத் தோன்றலும் பாலைக்கு உரிய பொருளாகும் என்று கூறுவர் புலவர் (13)

17. மயங்காத பொருள் எது?

## 1.3 திணை மயக்கம்

ஒரு திணைக்குரிய முதற்பொருள் மற்றோர் திணைக்குரிய முதற்பொருளோடு சேரநிற்றலும் நீக்கப்பட முடியாது. அங்கு நிலம் சேர்வது இல்லை என்று இலக்கணக் கோட்பாட்டை அறிந்தவர்கள் கூறுவர் (14)

18. ________ அல்லன மயங்கவும் பெறுமே.

*"உரிப்பொருள் அல்லன மயங்கவும் பெறுமே"* (15)

உரிப்பொருள் அல்லாத கருப்பொருளும், முதற்பொருளும் மற்றொரு திணையொடு மயங்கி வரலாம்.

(எ.கா)

*"ஒண் செங்கழுநீர்க் கண்போல் ஆயிதழ்*
*ஊசி போகிய சூழ்செய் மாலையன்*
*பக்கம் சேர்த்திய செச்சைக் கண்ணியன்*
*குயமண் டாகம் செஞ்சாந்து நீவி* (அகநா.48)

இக் குறிஞ்சித் திணைப்பாடலில் குறிஞ்சிக்குரிய வெட்சிப்பூவும் மருதத்திற்குரிய செங்கழுநீர்ப் பூவும் மயங்கின.

19. குறிஞ்சிக் குரிய உரிப் பொருள் யாது?

அது மட்டுமன்றி யாதானும் ஒரு நிலத்திற்குரிய பூவும் புள்ளும் (பறவை) அந்நிலத்தொடும் பொழுதோடும் வராமல் வேறு நிலத்தோடும் பொழுதோடும் வருமானால் அவைகளை வந்த நிலத்தின் கருப்பொருளாகக் கருதலாம். (21)

## 1.4 உரிப்பொருள்

ஒவ்வொரு திணைக்குரிய மக்களின் ஒழுக்கங்கள் உரிப்பொருள்களாகும்.

*"புணர்தல் பிரிதல் இருத்தல் இரங்கல்*
*ஊடல் அவற்றின் நிமித்தம் என்றிவை*
*தேருங்காலைத் திணைக்குரிப் பொருளே"* (16)

20.நெய்தலுக் குரிய உரிப் பொருள் யாது?

குறிஞ்சி - புணர்தல், புணர்தல் நிமித்தம்

பாலை - பிரிதல், பிரிதல் நிமித்தம்

முல்லை - இருத்தல், இருத்தல் நிமித்தம்

நெய்தல் - இரங்கல், இரங்கல் நிமித்தம்

மருதம் - ஊடல், ஊடல் நிமித்தம்

என்பன ஐந்து திணைகளுக்குரிய உரிப்பொருள்கள் (ஒழுக்கங்கள்) ஆகும்.

மேல் சொல்லப்பட்ட உரிப்பொருள்கள் தவிரக் 'கொண்டுதலைக்

கழிதலும்', பிரிந்தவண் இரங்கலும்' என்ற இரண்டும் ஒரே இடத்தில் உரிப்பொருளாக வருதலும் உண்டு என்பர். (17)

தலைவன் தலைவியைக் கண்ணுற்ற வழி மனநெகிழ்ச்சி உண்டாகும் காலமும் அதன் பின்னர்க் குறிப்பறியும் வரையில் நிகழும் நிகழ்ச்சியும் தலைவியை எதிர்ப்படுதலும் ஒரிடத்து நிகழும் உரிப்பொருள். (18)

21. கருப் பொருள்கள் எவையேனும் நான்கினைச் சுட்டுக.

### 1.5 கருப்பொருள்

ஒவ்வொரு நிலத்திலும் உள்ள இயற்கை சார்ந்த பொருள்களும் தொழிலும் கருப்பொருள்களாகக் கருதப்படும்.

*"தெய்வம் உணாவே மாமரம் புட்பறை*
*செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ*
*அவ்வகை பிறவும் கருவென மொழிப"* (20)

தெய்வம், உணவு, விலங்கு, மரம், பறவை, பறை, தொழில், பண் முதலானவையும் இவை போல்வன பிறவும் கருப்பொருள்கள் என்று கூறுவர்.

| கருப்பொருள் | முல்லை | குறிஞ்சி | பாலை | மருதம் | நெய்தல் |
|---|---|---|---|---|---|
| 1. தெய்வம் | மாயோன் | சேயோன் | கொற்றவை | இந்திரன் | வருணன் |
| 2. உணவு | வரகு, முதிரை | திணை, ஐவனம் வெதிர் நெல் | வழிப்பறிப்பொருள் | நெல் | உப்பு, மீன் விற்றதால் கிடைப்பது. |
| 3. விலங்கு | மான், முயல் | யானை, புலி பன்றி, கரடி | எலி, வலி அழித்த யானை, புலி, செந்நாய் | எருமை, நீர்நாய் | சுரா, கறவு |
| 4. மரம் | கொன்றை, குருந்து, புதல் | வேங்கை, கோங்கு | பாலை, இருப்பை, கன்னி, குதிரை | மருது காஞ்சி | புன்னை தாழை |
| 5. பறவை | காட்டுக்கோழி | மயில், கிளி | எருவை, பருந்து | அன்னம், அன்றில் | கடற்காக்கை |
| 6. பறை | ஏறுகோட்பறை | வெளியாட்டுப்பறை, தொண்டகப் பறை | வழிப்பறிபறை சூறை கொண்டபறை | நெல்லறி பறை | நாவாய்ப் பறை |
| 7. செயல் | நிரை மேய்த்தல் | தேன் அழித்தல் | வழிப்பறி செய்தல் | உழவு | மீன்பிடித்தல் உப்பு விளைத்தல் |
| 8. பண் | சாதாரி | குறிஞ்சி | பாலை | மருதம் | செவ்வழி |
| 9. பிற பூ | முல்லை, பிடவம் | வேங்கை, காந்தள் குறிஞ்சி | மராம்பூ | தாமரை கழுநீர் | நெய்தல் |
| நீர் | கான்யாறு | சுணைநீர், அருவி நீர் | அறுநீர்க் கிணறும், சுனையும் | ஆற்றுநீர் பொய்கை நீர் | கேணிநீர் கடல் நீர் |

22. முல்லைத் திணைக்குரிய ஆண்மக்கள் பெயர்கள் யாவை?

### 1.6 எழுதிணை மக்கள்

ஒவ்வொரு திணையிலும் குலப்பெயர், தொழிற்பெயர் என இரண்டு வகைப் பெயர்கள் உண்டு. அவை திணைநிலைப் பெயர்கள் ஆகும்.(22)

### 1.6.1 முல்லைக்குரிய மக்கட் பெயர்

*"ஆயர் வேட்டுவர் ஆடூஉத் திணைப்பெயர்*
*ஆவயின் வருஉம் கிழவரும் உளரே"* (23)

23. குறிஞ்சித் திணையின் தலைமக்கள் பெயர்கள் யாவை?

ஆண்மக்களைப் பற்றிவரும் முல்லைத் திணைப்பெயர் ஆயர், வேட்டுவர் ஆகும். அவ்விடத்து தலைவராக வரும் கிழமை உடையோரும் உளர்.

### 1.6.2 பிறதிணை மக்கட்பெயர்

ஏனை நிலத்துள்ள மக்கள் மாட்டும் ஆராயுங்காலத்து அவ்விடத்து அவ்வகைய திணைநிலைப் பெயர்கள் உள. (24)

24. மருத் திணையின் மக்கள் பெயர்களைச் சுட்டுக.

| திணை | மக்கட்பெயர் | தலைமக்கள் |
|---|---|---|
| குறிஞ்சி | குறவன், குறத்தி | மலைநாடன், வெற்பன் |
| பாலை | எயினர், எயிற்றியர் | மீறு, விடலை |
| மருதம் | உழவன், உழத்தியர் | ஊரன், மகிழ்நன் |
| நெய்தல் | நுளையர், நுளைச்சியர் | சேர்ப்பன், துறைவன் |

### 1.6.3 கைக்கிளை, பெருந்திணைக்குரிய மக்கள்

25. கைக் கிளை, பெருந் திணைக்குரிய மக்கள் யார்?

*"அடியோர் பாங்கினும் வினைவலர் பாங்கினும்*
*கடிவரை இலபுறத் தென்மனார் புலவர்"* (25)

ஐந்திணைப் புறத்தவாகிய கைக்கிளை, பெருந்திணைக்கண் அடித்தொழில் செய்வார். பக்கத்தினும் வினைசெய்வார் பக்கத்தினும் புணர்தல் முதலான பொருளைக் கூறதல். கடிந்து நீக்கும் நிலைமை இல்லை. அடியோரும் வினைவலரும் கைக்கிளை, பெருந்திணைக்குரிய மக்கள் ஆவர். இவர்கட்கும் புணர்தல் முதலியன உண்டு. இவருள் 'அடியோர்' என்பவர் குற்றேவல் செய்பவர். வினைவலர் என்பவர் தொழில் செய்பவர்.

### 1.7 பிரிவின் வகைகள்

26. ________ ________ ______ பிரிவே.

ஐந்திணைக்கான உரிப்பொருள்களுள் பாலைக்கான உரிப்பொருள் பிரிதல் ஆகும். அதன் பொருட்டே 1.2 இல் பாலைக்குரிய இருவகைப் பிரிவு விளக்கப்பட்டது. இவை போகவும் பிரிவு என்பது உண்டு.

*"ஓதல் பகையே தூதிவை பிரிவே (27)*

ஓதல் - தம் நாட்டில் வழங்கும் நூல்கள் அல்லாது பிறநாட்டகத்து வழங்கும் நூல்களைக் கற்கப் பிரிவது.

பகை - மாற்று வேந்தரோடு போர் கருதிப் பிரிதல் பகைவயிற் பிரிவு ஆகும்.

தூது - இருபெரும் வேந்தரைச் சந்து செய்விக்கும் பொருட்டு செல்வது தூதுப் பிரிவாகும்.

இம்மூன்றும் பிரிவின் வகைகள் ஆகும்.

27. பகை வயிற் பிரிவு என்றால் என்ன?

### 1.7.1 ஓதலும் தூதும்

28. ஓதல், தூதிற்கு உரியவர்கள் யாவர்?

இவற்றுள் ஓதற் பிரிவும், தூதுப் பிரிவும் நால்வகை வருணத்துள் உயர்ந்த அந்தணர்க்கும் அரசர்க்கும் உரியதாகும். (28)

வணிகருக்கும் ஓதல் பிரிவு உரியதாகும். (33)

வேந்தனது தொழிலாகிய தூது வேந்தன் ஒழிந்த வணிகருக்கும் வேளாளருக்கும் உரியதாகவும் வரும். (34)

29. தேவர்ப் பிரிவிற்கு உரியவர்கள் யாவர்?

### 1.7.2 பகைவயிற் பிரிவு

பகைவர் காரணமாக அரசன் தானே செல்லுதலும், அரசனோடு பொருந்திய தானைத்தலைவர் போன்றோரோடு கூடிச் சேர்ந்து செல்லுதலும் வேந்தர்க்குரியதாகும். (29)

### 1.7.3 காவல், பொருள் பிரிவு

முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் என்ற நால்வகை நிலத்தினும் மேவிய சிறப்புடைய மக்களையல்லாத தேவரது பூசை, விழா முதலாயின செய்தற்பொருட்டும் பிரியும் பிரிவு 'தேவர்ப் பிரிவு' எனப்படும். இப்பிரிவு அரசர், அந்தணர், வணிகர், வேளாளர் என்ற நால்வர்க்கும் உரியதாகும்.(31)

30. காவற் பிரிவிற் குரியவர்கள் யாவர்?

முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் எனச் சொல்லிய நிலத்தின் மக்களும் முறைமையினின்றும் தப்பியவழி மீண்டும் தப்பாது அறத்தை நிலை நிறுத்தல் காரணமாகப் பிரிவும் பிரிவு காவற்பிரிவு ஆகும். அப்பிரிவு மன்னர் பாங்கின் பின்னோர் ஆன வணிகர் வேளாளர்க்கு உரியதாகும்.(32)

செய்யப்பட்ட ஒன்றிய பொருள் ஆக்குதல் காரணமாகவும் பிரிவு உண்டு. பொருள் தேடுதல் காரணமாகப் பிரிவதால் இது பொருள் வயிற்பிரிவு ஆகும். (30)

31. உயர்ந் தோர் பொருள்வயின் __________

*"பொருள்வயின் பிரிதலும் அவர்வயின் உரித்தே"* *(35)*

*"உயர்ந்தோர் பொருள்வயின் ஒழுக்கத் தான"* *(36)*

பொருள் வயிற் பிரிவும் வணிகர், வேளாளர்க்கு உரியதாகும். அம்மட்டுமன்றி உயர்ந்தோராகிய அந்தணர் ஒழுக்கங்கருதி பொருள் வயிற் பிரிவர்.

இவ்வாறான ஓதல், தூது, பகை, காவல், பொருள் என பல்வேறான பிரிவுகள் உண்டு.

இவை காலிற்பிரிவு, கலத்தில் பிரிவு என்ற இரு நிலைகளில் மேற்கொள்ளப்படும். கலத்தில் பிரிவு என்பது கடல் கடந்து செல்வது.

32. முந்நீர் வழக்கம் ____ இல்லை.

33. களவில் கூற்று நிகழ்த்து பவர்கள் யாவர்?

அங்ஙனம் செல்லும்போது தலைமகளை உடன் அழைத்துச் செல்வதில்லை.

*"முந்நீர் வழக்கம் மகடூஉவோடு இல்லை"* (37)

## 1.8 பிரிவின் கண் கூற்று வகைகள்

தொல்காப்பியர் செய்யுளுக்குரிய 34 உறுப்புகளுள் 'கூற்று' என்பதையும் குறிப்பிடுகிறார். இக்கூற்றினைக் களவின்கண் கூற்று நிகழ்த்துவதற்குரியர், கற்பின்கண் கூற்று நிகழ்த்துதற்குரியர் என இருவகையாகப் பகுப்பர். களவில் - பார்ப்பன், பாங்கன், தோழி, செவிலி, கிழவன், கிழத்தி என்ற அறுவர் கூற்று நிகழ்த்துவர். கற்பில் இவ்வறுவருடன் பாணன் கூத்தன், விறலி, பரத்தை, அறிவர், கண்டோர் என பன்னிருவர் கூற்று நிகழ்த்துவர். இங்ஙனம் கூற்று நிகழ்த்துபவர்களின் கூற்றுக்கான இலக்கணங்களைத் தொல்காப்பியர் பல்வேறு நூற்பாக்களில் விரித்துரைக்கின்றார். களவில் கூற்று, கற்பில் கூற்று எனப் பாகுபடுத்தும் இவர் இவ்விரண்டுக்கும் பொதுவானவற்றை அகத்திணையியலில் கூறியுள்ளார் எனலாம்.

### 1.8.1 நற்றாய் கூற்று

நற்றாய் என்பவள் தலைவியினை ஈன்ற தாய். தமரைப் பிரிந்து தலைவி தலைவனுடன் உடன் போக்கு மேற்கொண்ட வ்ழி நற்றாய் கூற்றுகள் அமைகின்றன.

*"தன்னும் அவனும் அவளும் சுட்டி*
*மன்னும் நிமித்தமும் மொழிப்பொருள் தெய்வம்*
*நன்மை தீமை அச்சம் சார்தலென்று*
*அன்ன பிறவும் அவற்றொடு தொகைஇ*
*முன்னியகால மூன்றொடு விளக்கித்*
*தோழி தேஎத்துங் கண்டோர் பாங்கினும்*
*போகிய திறத்து நற்றாய் புலம்பலும்*
*ஆகிய கிளவியும் அவ்வழி உரிய"* (39)

1. தன்னையும் தலைமகனையும், தலைமகளையும் குறித்துப் பல்லி முதலான நிமித்தங்களைப் பார்த்தல் 2. விரிச்சி கேட்டல் 3. தெய்வம் வழிபடல்

4. தனக்கும் தலைமகன், தலைமகள் ஆகியவர்ட்கும் உண்டாகும் நன்மை, தீமை, அச்சம் சார்தல் ஆகியவற்றைப் பற்றிப் பேசுவாள்.

5. முன்பு இவ்வாறு இருந்தாள், இப்போது இத்தன்மையாய் இருக்கின்றாள், இனி இவ்வாறு ஆவாள் என மூன்று காலமும் புலம்பிடுமாறு தோழியிடத்தும் கண்டோரிடத்தும் புலம்புவாள்.

(எ.டு)

*"மறுவில் தூவிச் சிறுகருங் காக்கை*

.........................................................

*வெஞ்சின விறல் வேற்காளையோடு*
*அஞ்சில் ஓதியை வரக்கரைந்தீமே" (ஐங்குறு : 391)*

என்பது நற்றாய் உடன்போய தலைமகள் பொருட்டாகக் காகத்திற்குப் பராய்க் கடன் உரைத்தது.

### 1.8.2 செவிலி கூற்று

செவிலி என்பவள் தலைவியின் வளர்ப்புத்தாய் ஆவாள்.

34. செவிலி என்பவள் யார்?

*"ஏமப் பேரூர்ச் சேரியுஞ் சுரத்தும்*
*தாமே செல்லுந் தாயரும் உளரே" (40)*

தலைமகள் உடன் போகியவழிப் பாதுகாவல் பொருந்திய ஊரகத்துள்ள சேரியின் கண்ணும் ஊரினின்றும் நீங்கிய சுரத்தின் கண்ணும் தாமாகத் தேடிச் செல்லும் செவிலித் தாயரும் உண்டு. இத்தகு செவிலித்தாயர் பலராவர்.

*(எ.டு) "காலே பரிதப் பினவே கண்ணே*
*நோக்கி நோக்கி வாள் இழந் தனவே*
*அகல்இரு விசும்பின் மீனினும்*
*பலரே மன்றஇவ் வுலகத்துப் பிறரே (குறுந் : 44)*

சுரத்திரைக் கண்டாரைச் செவிலி வினவியது.

சேரியினும் சுரத்தினும் பிரிதலின்றித் தமது மனையியற்கண் பிரித்தாராயினும் அதுவும் பிரிவின்பாற் பட்டதே. (41)

### 1.8.3 பிரிவின்கண் தோழி கூற்று

35. தோழி யாருடைய மகள்?

தலைவியின் வாழ்வில் பெரும் பங்கு வகிப்பவள் தோழி. அதன் பொருட்டே தோயின் கூற்று குறித்துப் பல்வேறான நூற்பாக்களில் தொல்காப்பியர் விளக்குகிறார். தலைவிக்குத் தோழியர் பலருண்டு, இருப்பினும் இன்றியமையாத தோழி என்பவள் செவிலியின் மகளாக இருப்பாள்.

தலைவி பிரிந்தவிடத்துத் தோழிக்குக் கூற்று நிகழும் இடங்களும் உண்டு.

1. பின்புவரும் தலைவிக்குரிய நோய் நிலையைத் தலைமகனுக்கு எடுத்துக் கூறுமிடத்தும்

2. 'உடன் கொண்டு பெயர்க' என்னுமிடத்தும்

3. தலைமகள் உடன்போக்கு ஒருப்பட்டமையைத் தலைமகளுக்குக் கூறி அவளை விடுத்தற்கண்ணும்

4. தமரை நீக்குதலால் தமக்குற்ற நோயின் கண்ணும்

5. வாய்மையும் பொய்மையும் காணப்பட்டத் தலைமகளைச் சுட்டித் தாயின் நிலை நோக்கி மீட்டுக் கொள்ளுமிடத்தும்

6. தலைமகன் பிரிதலால் வந்துள்ள நோய் மிகவும் பெருகித் தன் நெஞ்சு கலங்கியோளை 'வருந்துதலை ஒழிக' எனத் தலைமகன் சொன்ன சொல்லைக் கூறி வற்புறுத்தலின் பொருட்டி நெருங்கி வந்ததன் துறத்தின் கண்ணும் தோழி கூற்று நிகழும்.

(எ.டு)

"வல்வருவர் கானாய் வயங்கி முருக்கெல்லாம்
செல்வச் சிறார்க்குப் பொன் கொல்லர் போல்
துவளக்கான் நிட்டன தேர்ந்தது" (திணைமாலை நூற் : 66)

இது பருவம் வந்தது என்றது.

"மடவ மன்ற தடவுநிலைக் கொன்றை
...................................................
வம்ப மாரியைக் காரென மகித்தே"(குறுந் : 66)

இதுபருவம் அன்று என்றது.

### 1.8.4 கண்டோர் கூற்று

உடன்போக்கு மேற்கொள்ளும் தலைவன், தலைவி இடைச்சுரத்தின் வழியாகச் செல்வர். அங்ஙனம் செல்வோரைச் சந்திக்கும் மாந்தரே 'கண்டோர்' ஆவர்.

"பொழுது மாறும் உட்குவரத் தோன்றி
வழுவின் ஆகிய குற்றங் காட்டலும்
ஊரது சார்பும் செல்லுந் தேயமும்
ஆர்வ நெஞ்மொடு செப்பிய வழியினும்
புணர்ந்தோர் பாங்கிற் புணர்ந்த நெஞ்சமொடு
அழிந்தெதிர் கூறி விடுப்பினும் ஆங்கத்
தாய்நிலை கண்டு தடுப்பினும் விடுப்பினும்
சேய்நிலைக்கு அகன்றோர் செலவினும் வரவினும்
கண்டோர் மொழிதல் கண்டது என்ப"

தலைமகனும் தலைமகளும் உடன்போக்குச் செல்லும் வழி, இடைச்சுரத்துக் கண்டோர் அவர்களை நோக்கி கூறுமிடங்கள் 7 வகைப்படும். அவையாவன :

1. "நீங்கள் செல்லும் இம்மாலைப்பொழுதும் செல்லும் வழியும் அச்சம் தரத் தக்கனவாக உள்ளன; ஆகவே இப்போது இவ்வழியிற் செல்லற்க; செல்லின் அதனால் குற்றமுண்டாகும்" என எடுத்துக் கூறல்.

2. 'எம் ஊர் அணித்தே உண்ணது; நீவிர் செல்லும் இடமோ சேய்மையில் உள்ளது; ஆதலின் எம் ஊரில் தங்கிச் செல்க' என அன்புள்ளத்தோடு கூறுதல்.

3. புணர்ந்து செல்லும் தலைவனும் தலைவியும் ஆகிய

இவ்விருவரும் தம் ஊரில் தங்கிச் செல்ல உடன்படாமையினால், அவர்பால் விரும்பிய நெஞ்சத்தோடு மனம் அழிந்து; நும் ஊர்க்காயினும் விரைந்து செல்க' என எதிர்மொழி கூறி விடுத்தல்.

4. அவ்விடத்தே தேடிவரும் செவிலித்தாயின் நிலைமையைக் கண்டு 'நின்மகள் நெடுந்தொலைவு சென்று விட்டாள்; ஆதலின் இனியும் தேடிச் செல்ல வேண்டாம்! என அவளைத் தடுத்து நிறுத்துதல்.

5. அவ்விடத்தே தேடிவரும் செவிலித்தாயின் நிலையைக் கண்டு இவ்வழியே சென்றால் அவர்களைக் காணலாம்' என அவளைச் செல்லவிடுத்தல்.

6. நெடுந்தொலைவு செல்லும் இடைச்சுரத்தோர், தாம் செல்லும் செலவின் போதும் சில சொல்லல்

7. நெடுந்தொலைவு செல்லும் இடைச்சுரத்தோர், தாம் திரும்ப வரும் வருகையின் போதும் சில சொல்லல்.

(எ.டு)

*"வில்லோன் காலன கழலே தொடியோள்*
*மெல்லடி மேலவுஞ் சிலம்பே நல்லோர்*
*யார்கொல் அளியர் தாமே ஆரியர்*
*கயிறாடு பறையிற் கால்பொரக் கலங்கி*
*வாகை வெண்நெற் றொலிக்கும்*
*வேய்பயில் அழுவம் முன்னி யோரே"* (குறுந் : 7)

இது தலைவனையும் தலைவியையும் கண்டோர் செலவினும் அல்லது வரவினும் கூறியது.

### 1.8.5 பிரிவின்கண் தலைமகன் கூற்று

"பெருமையும் உரனும் ஆரூஉமேன" என வகுக்கும் தொல்காப்பியர் அவனை ஆற்றல் மிகுந்தவனாகவே காட்டுகிறார். இத்தகு இயல்பு வாய்ந்த தலைமகன் பிரிவின்கண் நிகழ்த்தும் கூற்றுகளைத் தொல்காப்பியர் வரையற்ற செய்துள்ளார்.

1. வரைவு உடன்படாத சுற்றத்தார் கண்ணும்

2. பருவத்தின் கண்ணும்

3. சுரத்தின் கண்ணும்

4. ஏற்புடைச் சொல்லோடு தலைவியை உடன் கொண்டு செல்லத் துணியுமிடத்தும்

5. கொண்டுதலைக் கழியாமல் தலைவியைத் தான் வருந்திப் பிரியுமிடத்தும்

6. தலைமகன் செல்கின்ற இடைச் சுரத்திடைத் தலைமகள் தமர் எய்தி மீட்டுக் கொண்டு பெயர்தல் மரபாதலின் எங்ஙனம் பெயர்வர் எனக் கலங்கி

வருத்தமுற்றுக் கற்போடு புணர்ந்த 'அவர்' உளப்பட அப்பகுதிப்பட்ட உடன் போக்கின் கண்ணும்

தலைவனுக்குக் கூற்று நிகழும். மேலும் தமர் வருவரெனக் கூறலும் வந்தவழிக் கூறலும் உண்டு.

7. நாளது சின்மையும்/வாழும் நாள் சில

8. இளமையது அருமையும்

9. தாளாண் பக்கமும் / முயற்சியின் சிறப்பு

10. தகுதியது அமைதியும்

11. இன்மையது இளிவும்

12. உடைமையது உயர்ச்சியும்

13. அன்பினது அகலமும்

14. அகற்சியது அருமையும்

கூறி பொருள் ஈட்டச் செல்லப் பிரியும் காலத்தும் தலைமகன் கூற்று நிகழும். மேலும்

15. ஓதுதல், படைக்கலம் பயிறல், சிற்பங்கற்றல் ஆகிய இப்பயன் கருதிய ஒரு கூற்றானும் அவனுக்குக் கூற்று நிகழும். இவை பொருள்வயிற் பிரிதலன்றி, அறத்திறம் காரணமாகப் பிரிவும் பிரிவாகும். இவை மறுமைக்கண் பயன் தரும்.

16. பிரிந்ததனால் வரும் புகழும், பிரியாமையினால் வரும் குற்றமும் குறுத்துத் தலைமகளை யான் வருந்துணையும் ஆற்றியிருத்தல் வேண்டும் எனக் கூறுதற் கண்ணும் தலைமகனுக்குக் கூற்று நிகழும்.

17. இருபெரு வேந்தரும் மாறுபட்டபோது சந்து செய்தற்குத் தூதாகச் செல்லும் வகையின் கண்ணும்

18. வேந்தர்க்கு உற்றுழிப் பிரியும் பிரிவின் கண்ணும்

19. தன்வலி, துணைவலி, வினைவலி என்ற இம்மூன்றன் பகுதியானும், பகைவர் மண்டிலம் கொண்ட அருமையானும் மிகுதல் சான்ற மாற்றாரது உணர்ச்சியானும் உண்டாகும் பாசறைக் கண்ணும் தலைமகனுக்குக் கூற்று நிகழும்.

20. வினைமுடிந்த காலத்துப் பாகனொடு விரும்பப்பட்ட வினைத் திறத்தினது வகையின் கண்ணும் தலைமகனுக்குக் கூற்று நிகழும் அங்ஙனம் கூறுதல் 2 வகைப்படும். 1. பாசறைக்கண் கூறல் 2. மீண்டும் இடைச் சுரத்துக் கூறல் இவ்விரண்டுமின்றி நெஞ்சிற்குக் கூறுவதும் உண்டு.

21. காவற்பக்கமாகிய இடத்தின் கண்ணும் தலைமகனுக்குக் கூற்று நிகழும் அதாவது யானை காணவும், நாடு காணவும் புனல் ஆடவும், கடவுளரை வழிபடவும் பிரியும் பிரிவின் கண்ணும் கூற்று நிகழும்.

22. பரத்தையிற் பிரியும் பிரிவின் கண்ணும் கூற்று நிகழும்

23. பிரியப்பட்ட தலைமகளைக் குறுகி இரத்தலின் போதும்

24. தெளித்தலின் போதும் (தேற்றல்) தலைமகனுக்குக் கூற்று நிகழும்.

(எ.டு)

*"வேட்டச் செந்நாய் கிளைத்தூண் மிச்சில்*
*குளவி மொய்த்த அழுகல் சின்னீர்*
*............................................*
*அளியளோ அளியன் என் நெஞ்சமர்ந்தோளே"(குறுந் : 56)*

### 1.8.6 எஞ்சியோர் கூற்று

*"எஞ்சியோர்க்கு மெஞ்சுதல் இலவே"* 45

மேற்சுட்டிய பிரிவின்கண் கூற்றுக்குரியார் பலருள்ளும் நற்றாய், செவிலி, தோழி, கண்டோர், தலைமகன் தவிர தலைமகள், பாங்கன், பார்ப்பார், பாணர், உழையோர் முதலானோர்க்கும் கூற்றுகள் உண்டு.

(எ.டு)

*சிலரும் பலரும் கடைக்கண் நோக்கி*
*.....................................*
*............. இயல்உதர்க் கொண்கனொடு*
*செலவயர்ந்தினினால் யானே" (நற்றிணை : 149)*

இஃது உடன் போக்கிற்கு ஒருப்பட்ட போது கூறல்.

### 1.8.7 பாலைக்குரிய மரபு

பாலைக்குரிய மரபு 3 நூற்பாக்களில் விளக்கப்படுகிறது.

36. நிகழ்ந்தது நினைத்தற்கு ________ ஆகும்.

*"நிகழ்ந்தது நினைத்தற்கு ஏதுவும் ஆகும்"* (46)

முன்பு நிகழ்ந்தது பின்பு விசாரித்தற்கு (நினைத்தற்கு) ஏதுவாகவும் (காரணமாகவும்) வரும்.

*"நிகழ்ந்தது கூறிநிலையலும் திணையே* (47)

முன்பு நிகழ்ந்த ஒன்றினைக் கூறிப் போகாது ஒழிவது பாலைத் திணையாம்.

அகத்திணை மரபுகள் திரியாத நிலையில் அதற்குச் சிறப்புத் தரக்கூடிய நிலையில் மாந்தர்களின் கூற்றுகளில் பொருள்கள் விரவி வருதலும் உண்டு. அதாவது முல்லைக்குரிய முதலும் கருவும் பாலைத்திணையில் விரவி வரும். (48)

### 1.9 உவமையின் வகை

37. உவமம் எவ்வாறு வகைப் படுத்தப்படும்?

அகப்பாடல்களில் காதல் தொடர்பான நிகழ்ச்சிகளைப் பற்றிப் பேசும் போது பெரும்பாலும் உள்ளுறை உவமம் பயின்று வரும்.

*"உள்ளுறை உவமம் ஏனை உவமம் எனத்*
*தள்ளாதாகும் திணையுணர் வகையே"* *(49)*

உவமம் உள்ளுறை உவமம், ஏனை உவமம் என இருவகைப்படும். உள்ளுறை உவமம் என்பது கருத்துக்கள் வெளியே தோன்றாமல் மறைவாக இருக்கும். இதில் உவமேயம் வெளிப்படையாகத் தெரியாது. ஏனை உவமம் என்பது வெளிப்படையாக இருக்கும். இதில் உவமேயம் இடம் பெற்றிருக்கும். இவற்றில் திணையுணர் வகை தப்பாகும்.

### 1.9.1 உள்ளுறை உவமம்

38.உள்ளுறை உவமத்தில் இடம்பெறாத கருப்பொருள் எது?

உள்ளுறை உவமம் வரும் பாடல்களில் கருப்பொருள்கள் இடம்பெறும். ஆனால் அக் கருப்பொருள்களில் 'தெய்வம்' தவிரப் பிற கருப்பொருள்களான உணவு, மா, மரம், புள், பறை, செயல், யாழ் போன்றவற்றை இடமாகக் கொண்டுவரும் என்று அறிந்தோர் சொல்லுவர்.(50)

*"உள்ளுறுத்து இதனோடு ஒத்துப் பொருள் முடிகென*
*உள்ளுறுத்து உரைப்பதே உள்ளுறை உவமம்"* *(51)*

உள்ளுறுத்தப்பட்ட கருப்பொருளை உள்ளுறுத்துக் கருதிய பொருள் இதனோடு ஒத்து முடிக என உள்ளுறுத்துக் கூறுவதே உள்ளுறை உவமம். எனவே உவமையாற் கொள்ளும் வினை, பயன், மெய் உரு அன்றிப் பொருளுவமையால் கொள்ளப்படுவது.

*(எ.டு) "வெறிகொள் இனச்சுரும்பு மேய்ந்ததோர் காவிக்*
*குறைபடுதேன் வேட்டுக் குறுகும் - நிறைமதுச் சேர்ந்து*
*உண்டாடுந் தண்முகத்தே செவ்வி உடையதோர்*
*வண்தா மரைபிரிந்த வண்டு"*

இதில் வண்டோடு ஒத்தவராக கருதப்படுவர். ஆண்மக்கள் எனக் கூறவதனாலும் உவமிக்கப்படும் பொருள் புலப்படாமையாலும் இஃது உள்ளுறை உவமமாயிற்று. இதனுள் காவியும் தாமரையும் கூறுவதால் மருதத்திணை ஆயிற்று.

39. உள்ளுறையின் வகைகள் எத்தனை?

இவ் உள்ளுறை உவமம் குறித்துத் தொல்காப்பியர் 'பொருளியல்' பகுதியிலும் சுட்டிச் செல்கிறார்.

*"உள்ளுறை உவமம் சுட்டுநகை சிறப்பெனக்*
*கெடலரு மரபின் உள்ளுறை ஐந்தே"*
*(பொருளியில் : 46)*

உள்ளுறை உவமம் 5 வகைப்படும். உடனுறை, உவமம், சுட்டு, நகை, சிறப்பு எனக் கெடலரு மரபினை உடையதாகும்.

உடனுறை : உடனுறைவது ஒன்றைச் சொல்ல அதனாலே பிறிதொரு பொருள் விளங்குவது.

உவமம் : உவமையைச் சொல்ல உவமிக்கப்படும் பொருள் தோன்றவது.

(எ.டு) *வெறிகொள் இனச் சுரும்பு..................*

*........................................*

இது வண்டைக் கூறுவாள் போலத் தலைமகன், பரத்தையிற் பிரிவு கூறுதலின் உள்ளுறை உவமம் ஆனது.

சுட்டு : ஒரு பொருளைச் சுட்டிப் பிறிதோர் பொருள் படுதல்

*" தொடி நோக்கி மென்தோளும் நோக்கி அடிநோக்கி*
*அஃதாண்ட வன் செய்தது"* (குறள் : 1279)

இதனுள் இப் பூப்பறிப்போமாயின் வளை கழன்று தோள் மெலிய நடத்தல் வல்லையாக வேண்டும் என ஒருபொருள் சுட்டித் தந்தமை காண்க.

40. நகை என்றால் என்ன?

நகை : நகையினால் பிறிதொரு பொருளுணர நிற்றல்

சிறப்பு : இதற்குச் சிறந்தது இஃது எனக் கூறுவதனாலே பிறிதோர் பொருள் கொளக் கிடப்பது.

முடிவில்லாத சிறப்பினை உடைய இன்பத்தைத் தருவதற்கும் வருதல் அதன் பண்பாகும். (பொருளியல் : 47)

மங்கலமொழி முதலாகச் சொல்லப்பட்டனவும் உள்ளுறைப் பாற்படும்.

மங்கல மொழியாவது - மங்கலத்தால் கூறுஞ்சொல். அது செத்தாரைத் துஞ்சினார் எனல் அவையல் மொழியாவது - இடக்கரடக்கிக் கூறுதல். அது கண்கழீஇ வருதும் எனல்.

மாறில் ஆண்மையில் சொல்லிய மொழியாவது ஒருவனைச் சிங்கம் வந்தது என்றாற் போல் கூறுவது. இவையெல்லாம் உள்ளுறைப் பொருளைத் தரும். (பொருளியல் : 48)

### 1.9.2 ஏனை உவமம்

41. ஏனை உவமம் ______ வகைத்தே

*"ஏனை உவமம் தானுணர் வகைத்தே"* (52)

உள்ளுறையொழிந்த உவமம் தான் உணரும் வகையில் வரும்.

### 1.10 கைக்கிளை

கைக்கிளை என்பது சிறுமை பற்றிவரும் உறவு ஆகும்.

*"காமஞ் சாலா இளமை யோள்வயின்*
*ஏமஞ் சாலா இடும்பை எய்தி*
*நன்மையும் தீமையும் என்றிரு திறத்தான்*
*தன்னொடும் அவளொடும் தருக்கிய புணர்த்துச்*
*சொல்எதிர் பெறாஅன் சொல்லி இன்புறல்*
*புல்லித் தோன்றும் கைக்கிளைக் குறிப்பே"* (53)

காமம் (காதல்) கனியாத சிறுமி ஒருத்தியிடம் தலைவன் ஒருவன் தனக்கு மருந்து பிறிதில்லாப் பெருந்துயரமாம் காதல் நோய் கொண்டு

புகழ்தலும் பழித்தலும் ஆகிய இருவகையியல் தனக்கும் அவளுக்கும் பொருத்தமானவற்றைச் சுட்டிச் சொல்லியும் அவள் மறுமொழி எதுவும் சொல்லாதிருக்க, மீண்டும் தனக்குத் தானே சொல்லிச் சொல்லி இன்புறுதல் பொருந்தித் தோன்றும் கைக்கிளைக் குறிப்பு ஆகும்.

## 1.11 பெருந்திணை

42. பெருந் திணைக் குறிப்பு எத்தனை?

பொருந்தாக் காதலைக் கூறுவது பெருந்திணையாகும்.

*"ஏறிய மடல் திறம் இளமை தீர்திறம்*
*தேறுதல் ஒழிந்த காமத்து மிகுதிறம்*
*மிக்க காமத்து மிடலொடு தொகைஇச்*
*செப்பிய நான்கும் பெருந்திணைக் குறிப்பே" (54)*

ஏறிய மடல்திறமும், இளமை தீர்திறமும், தேறுதல் ஒழிந்த காமத்து மிகு திறமும், மிக்க காமத்து மாறாய திறனொடு கூட்டிச் சொல்லப்பட்ட நான்கு திறமும் பெருந்திணைக் கருத்து.

43. ஏறிய மடல்திறம் யாருக்கு உரியது?

1. ஏறிய மடல்திறம் : தலைமகன் மடல் ஏறிவரும் தன்மை. இம்மடலேறுதல் தலைமகனுக்கே உரியது.

2. இளமை தீர்திறம் : இளமை நீங்கிய திறத்தின்கண் நிகழ்வது. அது மூவகைப்படும். 1. தலைமகன் முதியானகித் தலைமகள் இளையளாதல் 2. தலைமகள் முதியளாகித் தலைமகன் இளையனாதல் 3 இவ்விருவரும் இளமைப்பருவம் நீங்கியவழி அறத்தின் மேல் மனம் நிகழ்தலின்றிக் காமத்தின் மேல் மனம் நிகழ்தல்.

*(எ.டு) அரும்பிற்கு முண்டோ அலரது நாற்றம்*
*பெருந்தோள் விறலி பிணங்கல் - கரும்போடு*
*அதிரும் புனலூரற்கு ஆரமிழ்தம் அன்றோ*
*முதிரும் முலையர்க்கு முயக்கு"*
*(புறம், இருபால் பெருந்திணை : 19)*

இதன்கண், தலைமகள் இளமை தீர்திறம் வந்தது

3. தேறுதல் ஒழிந்த காமத்து மிகுதிறம் : தெளிவு ஒழிந்த காமத்தின் கண்ணே மிகுதல். இது பெரும்பாலும் தலைமகளுக்கே உரியது. காமம் எவ்வளவு மிகுந்தாலும் ஆண்மக்களைப் போல் பெண்டிர் மடல் ஏறுதல் இல்லை.

*"எத்திணை மருங்கினும் மகடூஉ மடன்மேல்*
*பொற்புடை நெறிமை இன்மை யான" (38)*

பொலிவு பெறும் நெறி இல்லாமையால் எல்லாக் குலத்தினிடத்தும் பெண்பால் மடலேறுதல் இல்லை.

4. மிக்க காமத்து மிடல் : ஐந்திணைக் கண் நிகழும் காமத்தின் மாறுபட்டு வருவது. இஃது இரண்டு வகைப்படும். 1. ஆண்பாற் கிளவி 2. பெண்பாற் கிளவி

*"பெரும் பணை மென்தோள் பிரிந்தார் எம்உள்ளி*
*வரும் பருவம் அன்றுகொல் ஆம்கொல்"*
*(புறப், இருபால் பெருந்திணை : 6)*

இது பெண்பாற்கிளவி - பருவ மயங்கல் ஆகும்.

44.கைக்கிளைக் குரிய நான்கு எவை?

முன்னர் சொல்லப்பட்ட நான்கிற்கும் முந்தைய ஏறாமடல்திறம், இளமை தீராத்திறம், தேறுதல் ஒழிந்த காமத்து மிகாத்திறம், மிக்க காமத்தின் மாறாகாத்திறம் என்ற நான்கும் கைக்கிளைக்குரித்தாம். (55)

### 1.12 அகப்பாக்கள் அமையும் வகை

ஐந்திணைகளில் காணப்படும் அக மாந்தர்களைப் பற்றிய செய்யுளை யாக்கும் போது எங்ஙனம் யாப்பது என்பது பற்றித் தொல்காப்பியர் குறிப்பிடுகின்றார்.

*"நாடக வழக்கினும் உலகியல் வழக்கினும்*
*பாடல் சான்ற புலனெறி வழக்கம்*
*கலியே பரிபாட்டு ஆயிரு பாவினும்*
*உரியதாகும் என்மனார் புலவர்"* (56)

வழக்கு 2 வகைப்படும். 1. நாடக வழக்கு சுவைபட வருவனவெல்லாம் ஓரிடத்து வந்தனவாகத் தொகுத்துக் கூறுதல். அதாவது செல்வத்தானும் குலத்தானும் அன்பினானும் ஒத்தார் இருவராய்த் தமரின் நீங்கித் தனியிடத்து எதிர்ப்பட்டார் எனவும் அவ்வழிக் கொடுப்போரும் இன்றி அடுப்போரும் இன்றி வேட்கை மிகுதியால் புணர்ந்தார் எனவும் பின்னும் அவள் களவொழுக்கம் நடத்தி இலக்கண வகையான் வரைந்தெய்தினார் எனவும் பிறவும் இந்நிகரனவாகிச் சுவைபட வருவனவெல்லாம் ஒருங்கு வந்தவனவாகக் கூறுதல்.

45. வழக்கு எத்தனை வகைப்படும்? அவை யாவை?

2. உலகியல் வழக்காவது உலகத்தார் ஒழுகலாற்றோடு ஒத்து வருவது.

பாடல் சான்ற புலன் நெறி வழக்கமாவது இவ்விருவகையானும் பாடல் சான்ற கைக்கிளை முதலாப் பெருந்திணை இறுவாய்க் கூறப்படுகின்ற அகப்பொருள்.

இவை கலியும் பரிபாடலும் என்னும் இர்ண்டு பாவினும் உரிமையுடைத்தாம் என்று உரைப்பர் புலவர்.

ஒழிந்த பாக்கள் இத்திணை அகப்பொருட்கு உரியவாய் வருதலின்றிப் புறப்பொருட்கும் உரியவாய் வருதலின்று புறப்பொருட்கும் உரியவாய் வருதலின் ஓதாராயினர். புறப்பொருள் உலகியல் பால் அன்றி வாராமையின் அது நாடக வழக்கம் அன்றாயிற்று.

46. பெயர் சுட்டும் மரபு அகப்பாடலுக்கு உண்டா?

மேலும் அகப்பாடல்களில் பெயர்சுட்டும் மரபு என்பதில்லை.

*"மக்கள் நுதலிய அகன் ஐந்திணையும்*
*சுட்டி ஒருவர் பெயர்கொளப் பெறாஅர்"* (57)

அகத்திணையின் கைக்கிளை, பெருந்திணை ஒழிந்த ஐந்து திணைப்

பாடல்களிலும் நாடன், ஊரன், சேர்ப்பன் என்னும் பொதுப் பெயரால் அன்றி ஒருவருக்கு உரித்தான இயற்பெயர் சுட்டப் பெறுவதில்லை.

ஒருவர் பெயர் புறத்திணைப் பகுதிகளில் வருந்தி வருமே அன்றி அகத்திணைப் பகுதிகளில் வருதல் இல்லை. (58)

### 1.13 தொகுப்புரை

இப்பாடத்தைக் கற்றதன் விளைவாக மாணவர்களே நீங்கள் அகத்திணையின் கூறுபாடுகள் (கைக்கிளை முதல் பெருந்திணை வரை) ஐந்திணைகளுக்கான முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் பற்றிய செய்திகள், பிரிவின்கண் கூற்று நிகழ்த்துதற்குரியவர்கள் அவர்களின் கூற்று முறைகள் பற்றியும் உவமை, உள்ளுறை, கைக்கிளை பெருந்திணை பற்றியும் அகத்திணைக்கண் செய்யுள் அமையும்முறை பற்றியும் தெளிவான சிந்தனையினைப் பெற்றிருப்பீர்கள்.

### வினாவிற்கேற்ற விடைகள்

| | | | |
|---|---|---|---|
| 1,2,3,4 | - | 1.1 ஐப் பார்க்க | |
| 5 | - | 1.1.1 | ” |
| 6 | - | 1.2 | ” |
| 7,8,9,10,11,12<br>13,14,15,16 | - | 1.2.1 | ” |
| 17,18 | - | 1.3 | ” |
| 19,20 | - | 1.4 | ” |
| 21 | - | 1.5 | ” |
| 22 | - | 1.6.1 | ” |
| 23,24 | - | 1.6.2 | ” |
| 25 | - | 1.6.3 | ” |
| 26,27 | - | 1.7 | ” |
| 28 | - | 1.7.1 | ” |
| 29,30,31,32 | - | 1.7.3 | ” |
| 33 | - | 1.8 | ” |
| 34 | - | 1.8.2 | ” |
| 35 | - | 1.8.3 | ” |
| 36 | - | 1.8.7 | ” |
| 37 | - | 1.9 | ” |
| 38,39,40 | - | 1.9.1 | ” |

| | | |
|---|---|---|
| 41 | - 1.9.2 ஐப் பார்க்க | |
| 42,43,44 | - 1.11 | " |
| 45,46 | - 1.12 | " |

**பக்க வினாக்கள்**

1. திணை என்றால் என்ன? திணை எத்தனை வகைப்படும்?
2. முதற் பொருள் குறித்து எழுதுக.
3. திணை மயக்கம் என்றால் என்ன?
4. 'கருப்பொருள்' என்றால் என்ன? விளக்குக.
5. ஓதல், பகை, தூதிற்குரியவர்கள் யாவர்? விளக்கி எழுதுக.
6. கைக்கிளை, பெருந்திணைக்குரிய மக்கள் குறித்து எழுதுக.
7. 'நற்றாய் கூற்று' பிரிவின்கண் நிகழுமாற்றை விளக்குக.
8. செவிலி கூற்றினைச் சான்றுடன் விளக்குக.
9. உள்ளுறை உவமம் என்றால் என்ன? சுட்டுக.
10. 'கைக்கிளை' குறித்து எழுதுக.
11. 'பெருந்திணை' என்றால் என்ன? விளக்கி எழுதுக.
12. அகப்பாடல்கள் எங்ஙனம் அமையும்?

**கட்டுரை வினாக்கள்**

1. ஐந்திணைக்குரிய முதல், கரு, உரிப்பொருள்கள் குறித்து விளக்கிக் கட்டுரைக்க
2. 'பிரிவு' குறித்து விளக்கிக் கட்டுரை எழுதுக.
3. பிரிவின்கண் தலைமகன் கூற்று அமையுமாற்றை விளக்கிக் கட்டுரை வரைக.
4. உவமையின் வகை குறித்துக் கட்டுரைக்க.

# புறத்திணையியல்

## அறிமுகம்

புறத்திணையியல் என்னும் இப்பகுதியில் 'புறம்' என்பதன் இலக்கணமும் அதன் பாகுபாடுகளான வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை, வாகை, காஞ்சி, பாடாண் என்னும் திணைகளும் அவற்றின் துறைகளும் குறித்து விளக்கப்படுகின்றன.

## நோக்கம்

இப்பாடத்தைப் பயின்ற பின்னர் மாணவர்கள் பின்வரும் நோக்கங்களை அடைய வேண்டும்.

- ☆ தமிழர்களின் பண்பாட்டை அறிதல்
- ☆ நம் மூதாதையர்களின் பழக்க வழக்கங்களை மீட்டெடுத்தல்
- ☆ தமிழர்களின் வீரம், புகழ், கொடை, மானம் போன்றவற்றை அறிதல்

# பாடம் - 2
# புறத்திணையியல்

## பொருளடக்கம்

தமிழர்களின் இரு கண்களாகப் போற்றப்படுகின்ற அகம், புறம் என்பவற்றுள் சென்ற பாடத்தில் அகத்திணையில் பார்க்கப்பட்டது. இப்பகுதியில் புறம் என்பது விளக்கப்படுகிறது. தமிழர்களின் வீரத்தைப் பறைசாற்றும் விதமாக உள்ள புறம் என்பது போரைப் பற்றியதாகும். வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை, வாகை, காஞ்சி, பாடாண் என்னும் ஏழுதிணைகளும் தமிழர்களின் வீரம், கொடை, புகழ், மானம், அறம் எனபனவற்றை எடுத்து மொழிகின்றன. இவை குறித்து இங்கு விளக்கப்படுகின்றன.

## 2.1 புறம் – புறத்திணைகள்

1. அகத் திணைக்குப் புறனான புறத்திணைகள் எத்தனை?

2.குறிஞ்சிக்குப் புறனான புறத்திணை எது?

3. பாலைக்குப் புறனான புறத்திணை யினைக் குறிப்பிடுக.

தொல்காப்பியர் முதலில் அகத்திணை இலக்கணம் கூறிப்பின்னர் அதற்கு இனமான புறத்திணை இலக்கணம் கூறினார். இவ்வாறு கூறுவதற்கும் காரணம் உண்டு. 'பண்டைத்' தமிழ்ச் சான்றோர் உயிருணர்ச்சியை 'அகப்பொருள்' என்றும் அஃதொழிந்தவற்றையெல்லாம் 'புறப்பொருள்' என்றும் கூறினார்.

'புறப்பொருளாவது மறஞ்செய்தலும் அறஞ்செய்தலும் ஆகலான் அவற்றான் ஆய பயன் பிறர்க்குப் புலனாதலின் புறம் என்பர். உரையாசிரியர்.

அகத்திணையில் கூறப்பட்ட ஏழுதிணைகளுக்கும் புறனாக ஏழுபுறத்திணைகளைக் கூறினார் தொல்காப்பியர்.

*குறிஞ்சிக்குப் புறன் வெட்சி*
*முல்லைக்குப் புறன் வஞ்சி*
*மருதத்திற்குப் புறன் உழிஞை*
*நெய்தலுக்குப் புறன் தும்பை*
*பாலைக்குப் புறன் வாகை*
*பெருந்துணைக்குப் புறன் காஞ்சி*
*கைகிளைக்குப் புறன் பாடாண்*

1. வெட்சி : நிரை கோடல், நிரை மீட்டல்

2. வஞ்சி : மண் விரும்பி இருபெரும் வேந்தரும் ஒரு வினையாகிய செயல்புரிதலின் வஞ்சி ஆனது.

3. உழிஞை : மதிலை வளைத்தலும், மதிலைக் காத்தலும்

4. தும்பை : இருபெருவேந்தரும் பொருதல் ஆகிய தொழில் புரிவது.

5. வாகை : வேந்தர் ஆயினும் ஏனையோர் ஆயினும் தமது மிகுதியாகிய வெற்றியைக் குறிப்பது.

6. காஞ்சி : நிலையாமையாகிய நோம்திறப் பொருளைக் குறிப்பது.

7. பாடாண் : செந்திறமாகிய பொருளைக் குறித்து வருவது.

## 2.2 வெட்சித் திணை

புறத்திணையுள் முதல்திணை வெட்சியாகும். இதன் உட்பிரிவாக உள்ளது கரந்தை.

*"அகத்திணை மருங்கின் அரில்தப உணர்ந்தோர்*
*புறத்திணை இலக்கணம் திறம்படக் கிளப்பின்*
*வெட்சிதானே குறிஞ்சியது புறனே"* (1)

முன்னர் கூறிய அகத்திணை இலக்கணம் பற்றிய மயக்கம் கெட உணர்ந்தோர், புறத்திணை இலக்கணத்தைத் தெளிவுபட வகுத்துரைப்பின் வெட்சி என்ற திணை, குறிஞ்சி என்ற அகத்திணைக்குப் புறனாம். இவ்வெட்சித்திணை அச்சத்தை விளைவிக்கும் தோற்றமுடைய 14 துறைகளை உடையதாகும்.

*"வேந்துவிடு முனைஞர் வேற்றுப்புல களவின்*
*ஆதந்து ஓம்பல் வேற்று ஆகும்"* (2)

4. வெட்சித் திணையின் துறைகள் எத்தனை?

வேந்தனால், விடப்பட்ட முனை ஊரகத்துள்ளார் (பறை மறவர்) வேற்று நாட்டின் கண் களவினால் ஆநிரைகளைக் கொண்டு வந்து பாதுகாத்தலைப் பொருந்தி நிற்பது இவ்வெட்சித்திணை.

### 2.2.1 வெட்சித் துறைகள்

5. வெட்சித் திணை என்றால் என்ன?

ஒரு மன்னனோடு போர் செய்வதற்கு முதற்படியாக அமைகின்ற வெட்சி 14 துறைகளைக் கொண்டுள்ளது.

*"படையியங்கு அரவம் பாக்கத்து விரிச்சி*
*புடைகெடப் போகிய செலவு புடைகெட*
*ஒற்றின் ஆகிய வேயே வேய்ப்புறம்*
*முற்றின் ஆகிய புறத்துஇறை முற்றிய*
*ஊர் கொலை அகோள் பூசல்மாற்றே*
*நோயின்று உய்த்தல் நுவல்வழித் தோற்றம்*
*தந்துநிரை பாதீடு உண்டாட்டுக் கொடையென*
*வந்த ஈரேழ் வகையிற்று ஆகும்"* (3)

1. படையியங்கு அரவம் : பகைவரது ஆநிரையைக் கொள்ளக் கருதி வெட்சிப்படை எழுப்பும் ஆரவாரம்.

2. பாக்கத்து விரிச்சி : ஆனிரை கவர வேண்டும் எனத் தாம் குறித்த பொருளின் பயனை அறிதற்குப் பக்கத்தே நற்சொல்லை ஆராய்வது.

*"எழுவரை சீறுர் இருள்மாலை முன்றில்*
*குழுவினங் கைகூப்பி நிற்பத் - தொழுவில்*
*குடக்கள்ளுக் கொண்டுவா என்றான் குனிவில்*
*தடக்கையாய் வென்றி தரும்"* (புறப். வெட்சி :4)

3.புடை கெடப் போகிய செலவு : மாற்றரசர்க்கு உரிய ஒற்றர்கள்,

தம்மிடத்து இருப்பினும் அவ்வொற்றர்கள் அறியாமல் போகும் செலவு.

6. பாக்கத்து விரிச்சி என்றால் என்ன?

4. புடைகெட ஒற்றின் ஆகிய வேயே : மாற்றரசருக்குப் பக்கத்தே உள்ளார் அறியாதவாறு, தம் ஒற்றால் அறிந்து கொள்ளப்படும் ஒற்று.

5. வேய்ப்புறம் முற்றின் ஆகிய புறத்து இறை : ஒற்றால் அறியப்பட்ட அவ்விடத்தின் புறத்திணைச் சூழ்தலால் உண்டாகும் புறத்திருக்கை.

6. முற்றிய ஊர்க்கொலை : அவ்வாறு சூழப்பட்ட ஊரை அழிப்பது.

7. நோய் இன்று உய்த்தல் என்றால் என்ன?

7. ஆகோள் : பகைவரது நாட்டில் உள்ள ஆனிரையைக் கொள்ளுதல்

8. பூசல் மாற்று : அவ்வாறு கைப்பற்றிய ஆனிரையை மீட்டுக் கொண்டு போவதற்கு வந்தவர்கள் செய்யும் போரினை மாற்றிப் பெயர்த்து வருதல்.

9. நோய் இன்று உய்த்தல் : கவர்ந்து வந்த ஆனிரைக்குத் துன்பம் ஏதுமில்லாதவாறு அதனைக் கொண்டு செல்லுதல்.

8. தந்து நிறை என்றால் என்ன?

10. நுவல்வழித் தோற்றம் : தம் உறவினர்களின் முன்னிலையில் ஆனிரைகளோடு தோன்றல்.

11. தந்துநிறை : அவ்வாறு கொண்டுவந்த ஆனிரைகளைத் தம் ஊரின்கண் கொண்டு வந்து நிறுத்துதல்.

12. பாதீடு : அங்ஙனம் கொண்டு வந்த ஆனிரையை பங்கிடுதல்.

9. பாதீடு என்றால் என்ன?

13. உண்டாட்டு : ஆனிரையைப் பாதீடு செய்த மறவர் களிப்பினால் அயரும் விளையாட்டு

14. கொடை : தமக்குள் பாதீடு செய்தமையால் பெற்ற நிரையைத் தம்பால் வேண்டி இரப்பார்க்குக் கொடுத்தல்.

*"மறங்கடைக் கூட்டிய குடிநிலை சிறந்த*
*கொற்றவை நிலையும் அத்திணைப் புறனே"* (4)

10. குடிநிலை சிறந்த கொற்றவை நிலை எத் திணைக்குரியது?

மறத்தொழில் முடித்தலையுடைய குடியினது நிலையைக் கூறலும் சிறந்த கொற்றவையது நிலையைக் கூறலும் ஆகிய இவ்விரண்டும் குறிஞ்சிக்குப் புறனாகிய வெட்சித் திணையாம்.

1. குடிநிலை : மைந்தர்க்கும் மகளிர்க்கும் பொதுவாதல்

2. கொற்றவை நிலை : கொற்றவையின் நிலையைக் கூறுவது.

11. கரந்தைத் திணை என்றால் என்ன?

### 2.2.2 கரந்தைத் துறைகள்

நிரை கோடலுக்கு அடுத்த செயலாக நிரை மீட்டல் நடைபெறும். அதனை விளக்குவது கரந்தையாகும். இக்கரந்தை 21 துறைகளைக் கொண்டதாகும்.

12. கரந்தை எத்தனை துறைகளைக் கொண்டது?

**வெறியறி சிறப்பின் வெவ்வாய் வேலன் வெறியாட்டு அயர்ந்த காந்தள் :**

வெறியறி ஆடுதலை அறியும் சிறப்பினையுடைய வெவ்விய வாயினையுடைய வேலன் வெறியாடிய காந்தளும்.

**உறுபகை வேந்திடை தெரிதல் வேண்டி**

**ஏந்து புகழ்ப் போந்தை வேம்பே ஆரென வரூஉம்** - மாறுபாடு கொண்ட இருபெரும் படை மறவர், தம்மைத் தமரும் பிறரும் அறிதல் வேண்டி அடையாளமாகச் சூடும் சேரரது பனம்பூமாலை, பாண்டியரின் வேப்பம் பூ மாலை, சோழரது ஆத்திமாலை என முறையே புகழ் ஓங்கிவரும் பூக்களின் பெயரால் ஆகிய துறைகளும்

13. வாடா வள்ளி என்பது யாது?

**வாடாவள்ளி** : வாடுதல் இல்லாத வள்ளியக் கூத்தும்

**வயவர் ஏத்திய ஓடாக்கழல்நிலை :**

வீரரால் புகழப்பட்ட புறங்கொடாச் சிறப்புக் குறிக்கப் பெரும் கழல் நிலை. கழல் என்பது போர் வெற்றிக்கு அறிகுறியாக வீரர் காலில் அணியும் ஒரு வகை அணி.

**உடல்வேந்து அடுக்கிய உன்னநிலை :**

ஓடாது வெகுண்ட வேந்தரைச் சார்த்திய உன்னநிலை. உன்னமரம் என்பது சிறிய இலைகளைக்கொண்ட மரம். இது ஒரு நாட்டிற்கு கேடு வருங்கால் உலறியும் வாராத காலத்து குழைந்தும் நிற்கும்.

**மாயோன் மேய மன்பெருஞ் சிறப்பின் தாவா விழுப்புகழ்ப் பூவை நிலையும் :**

மாயோனைப் பொருந்திய நிலைபெற்ற பெருஞ்சிறப்பினையுடைய கெடாத விழுப்புகழைப் பொருந்திய பூவையின் இயல்பினைப் பூவைநிலை என்பர்.

பூவை மலர்ச்சியைக் கண்டு மாயோன் நிறத்தை ஒத்ததெனப் புகழ்தல். உன்ன மரத்தின் நிலையைக் கண்டு நிமித்தம் கூறுவது போலக் காயாம்பூ மலர்ச்சியைக் கண்டு புகழ்வது அக்கால வழக்கு.

14. ஆரமர் ஓட்டல் என்றால் என்ன?

**ஆரமர் ஓட்டல்** : நிரைகவர்ந்த வெட்சி மறவரைக் கரந்தை வீரர்கள் வென்று அப்போரை அழித்தல்.

**ஆபெயர்த்துத் தருதல்** : ஆனிரையை மீட்டல்

15.ஆபெயர்த்தல் தடுதல் என்பது யாது?

**சீர்கால் வேந்தன் சிறப்பெடுத்து உரைத்தல் :**

வெட்சி மறவர் சீர்மை பொருந்திய தம் வேந்தனது பெருமையை எடுத்துச் சொல்லுதல்.

**தலைத்தான் நெடுமொழி தன்னொடு புணர்தல் :**

தன்மாட்டுள்ள போர்வலி முயற்சியினாலே கொடுஞ்சொற்களைத் தன்னொடு புணர்த்துக் கூறுதல்.

**வருதார் தாங்கல்** : எதிர்த்து வருகின்ற முன்னணிப் படையைத் தனித்து நின்று தடுத்தல்

**வாள்வாய்த்துக் கவிழ்தல்** : பகைவரது வாள்பட்டு வீழ்தல், என்ற இவ்விருவகையினைப் பிள்ளைநிலை என்பர்.

16.பிள்ளைநிலை எத்தனை வகைப்படும்?

**வாள் மலைந்து எழுந்தோனை மகிழ்ந்து பறைதூங்க நாடு இவர்க்கு அருளிய பிள்ளையாட்டு** : வாள்போர் செய்து இறந்த மறவனை மகிழ்ந்து ஒலிக்க அவனுக்குத் துறக்கவுலகத்தை அளித்த பிள்ளையாட்டும்.

காட்சி : போர்க்களத்து இறந்து பட்ட வீரரைக் கல்லில் நிறுத்தற் பொருட்டுக் கல்லைக் காணல். இதுவே நடுகல் ஆகும்.

17. காட்சி என்றால் என்ன?

**கல்கோள்** : அவ்வாறு கண்ட கல்லைக் கொண்டு வருதல்

**நீர்ப்படை** : அக்கல்லைத் தூய நீரால் நீர்ப்படுத்தல்

**நடுதல்** : அக்கல்லை நடுதல்

18. 'கல்கோள்' என்பது யாது?

**சீர்த்தகு மரபின் பெரும்படை** : மிகவும் தக்க மரபினையுடைய பெரும்படை அதாவது நாட்டிய கல்லிற்குக் கோயில் எடுத்தல்.

வாழ்த்தல் : அக்கல்லைத் தெய்வமாகக் கருதிப் பரவுதல் (பழிச்சுதல்) (5)

19. நீர்ப்படை என்றால் என்ன?

(எ.டு)

*"அரும்புகழ் பாடி அழுதழுது ஆற்றாது*
*இடும்பையுள் வைகி இருந்து கடும்பொடு*
*கைவண் குரிசில்கல் கைதொழுது செல்பாண*
*தெய்வமாய் நின்றான் திசைக்கு"* *(புறப்,பொது : 13)*

20. நடுதல், வாழ்த்தல் என்றால் என்ன?

## 2.3 வஞ்சித்திணை

தன்நாட்டு ஆநிரையைக் கவர்ந்த அப்பகைநாட்டு வேந்தன் மேல் சினங்கொண்டு அவன்தன் நாட்டின்மீது படையெடுத்து வருவதற்கு முன்பேதான் அவனை வெல்லுவதற்கேற்ற காலம், இடம், வலி முதலிய முன்னேற்பாடுகளால் தன்னை நன்கு வலுச்செய்து கொண்டு கடும்போர் புரிவதற்கு வஞ்சி சூடிக் கறுத்து எழுவான். இது வஞ்சித் திணை எனப்படும்.

21.வஞ்சிப்போர் எதன் பொருட்டு வருகின்றது?

*"வஞ்சி தானே முல்லையது புறனே*
*எஞ்சா மண்நசை வேந்தனை வேந்தன்*
*அஞ்சுதகத் தலைச்சென்று அடல்குறித்தன்று"* *(6)*

வஞ்சியாகிய புறத்திணை முல்லையாகிய அகத்திணைக்குப் புறனாம். ஒழியாது மண்ணை விரும்புதலையுடைய ஓர் அரசனை மற்றொரு அரசன் அவனது நெஞ்சம் அஞ்சுமாறு படையுடன் சென்று அவனது வலிமையைக் குறைவிப்பது ஆகும்.

### 2.3.1 வஞ்சித் துறைகள்

22.வஞ்சித்திணை எத்தனை துறைகளைக் கொண்டது?

வஞ்சித்திணை மொத்தம் 13 துறைகளை உடையதாம்.

1. **இயங்குபடை அரவம்** : போர் மேற்செல்லும் படையின் பேரொலி.

2. **எரிபரந்து எடுத்தல்** : பகைவரது நாட்டை நெருப்பிட்டுக் கொளுத்துதல்

3. **வயங்கல் எய்திய பெருமை** : போர் மேற்செல்வோர் வினை வெற்றிகளால் அடைந்த சிறப்பு.

23. எரிபந்து எடுத்தல் என்றால் என்ன?

4. **கொடுத்தல் எய்திய கொடைமை** : பாணர், புலவர் முதலியோர்க்குக் கொடுத்தலைப் பொருந்திய கொடைத்தன்மை.

*(எ.டு)*
*பாணர் தாமரை மலையவும் புலவர்*
*பூநுதல் யானையொடு புனைதேர் பண்ணவும்*
........................................
*இனிய செய்து நின் ஆர்வலர் முகத்தே"* *(புறம் : 12)*

24. மாராயம் என்றால் என்ன?

5. **அடுத்து ஊர்ந்து அட்ட கொற்றம்** : பகைவர் பலரையும் அடுத்து மேலிட்டுக் கொன்ற கொற்றம் (வெற்றி)

6. **மாராயம் பெற்ற நெடுமொழி** : மாராயமாகிய உவகை பெற்ற நெடியமொழி (மாராயம் - வரிசையொடு பெற்ற பரிசு)

7. **பொருளின்று உய்த்த பேராண் பக்கம்** : பகைவரைப் ஒரு பொருளாக மதியாது செலுத்திய பெருமை பொருந்திய ஆண்மைத் திறம்.

*(எ.டு)*
*"ஆவும் ஆனியற் பார்ப்பன மாக்களும்*
*பெண்டிரும் பிணியுடை யீரும் பேணுந்*
*தென்புல வாழ்நர்க்கு அருங்கடன் இறுக்கும்*
*பொன்போற் புதல்வர்ப் பெறாஅ தீரும்*
*எம் அம்பு கடிவிடுவதும் நும்மரண் சேர்மினென்,....*
*நன்னீர்ப் பஃறுளி மணலினும் பலவே"* *(புறம் 9)*

8. **வருவிசைப்புனலைக் கற்சிறை போல ஒருவன் தாங்கிய பெருமை:** விரைவாக ஓடிவரும் வெள்ளத்தைக் கல்லணை தடுத்து நிறுத்தினால் போல எதிர்த்து மேல்வரும் பகைப்படையை அஞ்சாது ஒருவனாய்த் தனித்து நின்று தாங்கிய வீரப்பெருமை.

25. பெருஞ் சோற்று நிலை - விளக்குக.

9. **பிண்டம் மேய பெருஞ்சோற்று நிலை** : திரட்சி பொருந்திய பெருஞ்சோற்றைத் தானே மறவர்களுக்கு வழங்கும் தகுதி.

10. **வென்றோர் விளக்கம்** : வெற்றி அடைந்தோர் மாட்டு உண்டான விளக்கமும்.

26. 'தழிஞ்சி' என்பது யாது?

11. **தோற்றோர் தேய்வு** : தோல்வியுற்றோரின் தேய்வு கூறுதல்.

12. **குன்றாச் சிறப்பின் கொள்ளவள்ளை** : குறைவுறுதலைச் செய்யாத வென்றிச் சிறப்பினையுடைய கொற்றவள்ளை.

13. **அழிபடை தட்டோர் தழிஞ்சி** : மாற்றார் விடுகின்ற படைக்கலன் முதலானவற்றைத் தம்மாட்டுத் தடுத்து நிறுத்துவதுடன் புண்பட்டு உள்ளம் அழிந்தோரைப் பேணித் தழுவிக் கொள்வது. (7)

என்ற இப்பதின் மூன்றும் வஞ்சித்திணையின் துறைகளாகும்

## 2.4 உழிஞைத்திணை

27. உழிஞை எத்திணைக்குப் புறன்?

ஒரு மன்னன் படையெடுத்து வருவதை அறிந்த போருடற்ற இயலாத மன்னன் கதவுகளை அடைத்துக் கொண்டு உள்ளிருத்தல் அங்ஙனம் இருப்பவனது மதிலை முற்றுகை இட்டு வளைத்துக் கொள்ளலும், மதிலைக் காத்தலும் உழிஞையாகும்.

*"உழிஞைதானே மருத்துப் புறனே*
*முழுமுதல் அரணம் முற்றலும் கோடலும்*
*அனைநெறி மரபிற்கு ஆகும் என்ப"* (8)

28. அரண் எத்தனை வகைப்படும்?

உழிஞைத்திணை மருதத்திற்கு புறனானதாகும்.

முழுமுதல் அரணத்தை முற்றுகையிடுதலும் அழித்தலுமாய் வரும் தன்மைத்தாகிய நெறியை மரபாக உடையதாகும்.

அரண் தலையரண், இடையரண், கடையரண் என மூன்று வகைப்படும்.

29. அதுவே தானும் ________ வகைத்தே.

*"அதுவே தானும் இருநால் வகைத்தே"* (9)

உழிஞைத்திணைகள் எட்டு வகைப்படும்.

### 2.4.1 உழிஞைத்திணை வகைகள்

30. உழிஞைத் திணையின் வகைகள் எத்தனை?

உழிஞைத்திணை 8 வகையாக அமைந்துள்ளன. அவை

1. **கொள்ளார் தேஎங் குறித்த கொற்றம்** : பகைவரது தேயத்தை கொள்ளக் குறித்த கொற்றம். பகைவர் என்பவர்கள் தன்னை மன்னன் எனக் கொள்ளாதாரும், தன் ஆணையை ஏற்றுக் கொள்ளாதாரும் ஆவார்.

2. **உள்ளியது முடிக்கும் வேந்தனது சிறப்பு** : நினைத்ததை முடிக்கும் ஆற்றல் பெற்ற வேந்தனது சிறப்பும்

31. தொல் எயிற்று இவர்தல் என்றால் என்ன?

3. **தொல் எயிற்று இவர்தல்** : பற்ற முடியாத பழைய மதிலைப் பற்றி ஏறுதல்

4. **தோலது பெருக்கம்** : தோற்படை (அல்லது) கேடயப் படையினது பெருமை

5. **அகத்தோன் செல்வம்** : உள்ளிருக்கும் அரசனுடைய செல்வம்

(எ.டு)
*அளிதோ தானே பாரியது பறம்பே*
*நளிகொள் முரசின் மூவரும் முற்றினும்*
..............................
*கிணிநெடுங் குன்றம் தேன்சொறியும்மே"* (புறம் : 109)

6. **முரணிய புறத்தோன் அணங்கிய பக்கம்** : பகைத்த புறத்தரசன் வருந்திய தன்மை.

7. **திறம்பட ஒருதான் மண்டிய குறுமை** : வலிமையுடன், தான்

ஒருவனாகவே சென்று போரிடும் குற்றுழிஞை.

8. **உடன்றோர் வருபகை பேணார் ஆரெயில்** : வெகுண்டு வருகின்ற படையைப் பொருட்படுத்தாதவரது அரிய மதிலின் பெருமை

(எ.டு)
*"மயிற்கணத்து அன்னார் மகிழ்தேறல் ஊட்டக்*
*கயிற்கழலார் கண்கனல் பூப்ப - எயிற்கண்ணார்*
*வீயப்போர் செய்தாலும் வென்று அரிதரோ*
*மாயப்போர் மன்னன் மதில்"* (புறப்.உழிஞை : 11)

எட்டுவகையான உழிஞைத்திணை 12 துறைகளைக் கொண்டுள்ளது.

### 2.4.2 உழிஞைத் துறைகள்

32. உழிஞைத் திணையின் துறைகள் எத்தனை?

1. **குடைநாள்கோள்** : வேந்தன் தன் கொற்றக்குடையை நல்ல நாளில் புறவீடு செய்தல்

2. **வாள்நாள்கோள்** : வேந்தன் தன் வெற்றிப் போர் வாளை நல்ல நாளில் எடுத்துச் செல்லல்

3. **மடையமை ஏணிமிசை மயக்கம்** : மதிலிடத்துப் பூட்டுவாய் பொருந்திய ஏணிப்படிகளின் மேல் ஏறுவோரும் எதிர்ப்போரும் தம்முள் கலந்து மலைவது.

(எ.டு)
*"சுடுமண் நெடுமதில் சுற்றுப் பிரியார்*
*சுடுமுரண் எஃகங் கழிய - அடுமுரண்*
*ஆறினார் அன்றி அரவும் உடும்பும்போல்*
*ஏறினார் ஏணி பலர்"* (புறப், உழிஞை : 19)

4. **கடைஇச் சுற்றமன் ஒழியவென்று கைக்கொண்டு முற்றிய முதிர்வு:** அரணை முற்றுகை இட்டவன் தன் மறவரைச் செலுத்தி எதிர்த்தோரை மலைந்து, மதிற்புறப்போர் ஒழியுமாறு வென்று மதிலைக் கைப்பற்றி உள்ளேறி அரண் அகத்து மறவரைச் சூழும் முனைப்பு.

5. **முற்றிய அகத்தோன் வீழ்ந்த நொச்சி** : முற்ற அகப்பட்ட அகத்தில் உள்ளான் வீழ்ந்த (விரும்பிய) நொச்சியும்

6. **அதன் புறத்தோன் வீழ்ந்த புதுமை** : நொச்சியின் புறத்தாகிய உழிஞையின் விரும்பிய புதுமையும்.

7. **நீர்ச்செரு வீழ்ந்த பாசி** : மதிற்புறத்து நீர்நிலையில் வந்து சேரும் பாசிபோல இருதிறப்படையும் தளர்ந்து அகலாமல் மேலும் மேலும் விரும்பிக் கலந்து மலையும் பாசிநிலை.

33. பாசி நிலை என்றால் என்ன?

8. **ஊர்ச்செரு வீழ்ந்த மற்றதன் மறன்** : அஃது ஒழிய ஊர்ச்செருவின் கண் வீழ்ந்த பாசிமறனும்

9. **மதில்மிசைக்கு இவுர்ந்த மேலோர் பக்கமும்** : மதில் மேல் ஏறி

பரந்து நின்றோர் பக்கமும்

34. மண்ணு மங்கலம் என்றால் என்ன?

10. **இகல்மதில் குடுமி கொண்ட மண்ணு மங்கலம்** : தம்முடன் மாறுபட்டு மதில்மேல் நின்ற பகைவனைக் கொன்று அவனது முடிக்கலத்தைக் கைக்கொண்ட மண்ணுமங்கலம்

11. **வென்றவாளின் மண்ணோடு ஒன்ற** : வெற்றியடைந்தோர் வென்ற வாளினை வைத்து நீராட்டும் மண்ணுமங்கலம்

12. **தொகைநிலை** : அம்மதிலழித்தமையால் மற்றுள்ள மதில்கள் வரைப்பில் மாறுபட்ட வேந்தரும் முரண் அவிந்த நிலையைக் கூறுவது.

(எ.டு)

*வென்று கலந்த தரீஇயர் வேண்டுபுலத்திறுத்தவர்*
*வாடா யாணர் நாடுதுறை கொடுப்ப*

..................................

*தாங்கல் ஆகா ஆங்குநின் களிறே: (பதிற்றுப் : 53)* (11)

இப்பன்னிரண்டுடன் முன்னர்க் கூறிய எட்டினையும் சேர்த்தால் மொத்தம் 20 ஆகும்.

## 2.5 தும்பைத்திணை

35.நெய்தலுக்குப் புறனான திணை எது?

மாற்றாரைப் போர்க்களத்தில் வென்று அவ்வெற்றியால் கிடைக்கும் புகழையே பெரிதாகக் கொண்டனர் தமிழர். இத்தகு போரைப் பற்றி விளக்குவது தும்பை.

*“தும்பை தானே நெய்தலது புறனே*
*மைந்து பொரு ளாகவந்த வேந்தனைச்*
*சென்றுதலை அழிக்குஞ் சிறப்பிற்றென்ப”* (12)

தும்பை, நெய்தலுக்கு புறனாகும். வலிமையே பொருளாகக் கொண்டு போர் கருதி வந்த அரசன் கண், மற்றொரு வேந்தன் சென்று அவனைப் பொருது அழிக்கும் சிறப்புடையது.

இதனாலே ‘எதிரூன்றல் காஞ்சி’ என்பரை மறுத்தவாறு அறிக என்பர் உரையாசிரியர். இதற்கு நெய்தல் எங்ஙனம் புறனானது எனில் இருபெரும் வேந்தரும் ஒரு களத்துப் பொருதலின் அதற்கு இடம் காடும் மலையும் கழனியும் ஆகாமையினும் களமும் மணலும் பரந்த வெளி நிலத்துப் பொருதல் வேண்டுதலானும், அந்நிலம் கடல் சார்ந்த வழியல்லது இன்மையானும், நெய்தற்கு ஓதிய எற்பாடு போர்த் தொழிற்கு முடிவாதலானும் நெய்தற்குப் புறனாயிற்று.

### 2.5.1 தும்பையின் சிறப்பியல்புகள்

*“கணையும் வேலும் துணையுற மொய்த்தலிற்*
*சென்ற உயிரின் நின்ற யாக்கை*
*இருநிலந் தீண்டா அருநிலை வகையொடு*

*இருபாற் பட்ட ஒரு சிறப்பின்றே"* (13)

அம்பும் வேலும் படைத்துணையாகக் கொண்டு பொருதல் காரணமாகச் சென்று அதனால் பிரிந்த உயிரினின்றும் நீங்கிய பின்னும் விழாது நின் உடலானது, நீர் அட்டை காலவயப்பட்டு உடலினின்று உயிர் பிரிக்கப்படுமாறு போல, இருவகையாகப் பகுக்கப்படும் அந்த துண்டம் இணைந்தது ஒன்றாவது போன்று அடுதல் தும்பையின் சிறப்பியல்பாகும்.

### 2.5.2 தும்பைத்திணை துறைகள் :

தும்பைத்திணை 12 துறைகளைக் கொண்டதாகும்.

36. தும்பைத் திணையின் துறைகள் எத்தனை?

1,2,3 - **நோனார் உட்கும் தானை யானை குதிரை என்ற மூவகைநிலை:** பகைவரால் அஞ்சப்படுகின்ற காலாட்படை வீரர் நிலை, யானைப்படையின் நிலை குதிரைப்படையின் நிலை.

(எ.டு)
*"கைவேல் களிற்றொடு போக்கி வருவன்*
*மெய்வேல் பறியா நகும்"* (குறள் : 774)

4. **வேல்மிகு வேந்தனை மொய்தவழி ஒருவன் தான் மீண்டு எறிந்த தார்நிலை** : வேற்படை வெற்றியினையே கண்ணோக்கு உடையவனாய்க் களத்து முகப்பிற் சென்ற வேந்தனைப் பகைவர் ஆழ்ந்த போது அவ்வேந்தனின் தானைத் தலைவன் தன் நிலையினை விட்டுவிட்டுத் தன் வேந்தன்பால் பொருந்தி அவனுக்குத் துணையாய் நின்று அப்பகைவரைக் கொல்லுதல்.

5. **இருவர் தலைவர் தபுதிப் பக்கம்** : படைநின்று போர்செய்யும் இருபடைத் தலைவரும் தம்முள் பொருதுபடுதல்.

(எ.டு) *"காய்ந்து கடுங்களிறு கண்கனலக் கைகூடி*
*வேந்தர் இருவரும் விண்படர ஏற்று*
*பொருபடை மின்னப் புறங்கொடாப் பொங்கி*
*இருபடையும் நீங்கா இகல்"* (புறப்:தும்பை:12)

6. **ஒருவன் ஒருவனை உடைபடை புக்கு கூழை தாங்கிய பெருமை** : ஒரு வீரன், தன் தலைவனை அவனது சிதறிப் போகவிருக்கும் நெடும் படையின்கண் புகுந்து அதன் பின்னணிப் படையைத் தாக்கும் பகைவரைத் தடுத்து ஏமமுறக் காக்கும் வீரப்பெருமை.

7. **படை அறுத்துப் பாழிகொள்ளும் ஏமம்** : படைக்கருவிகளை அறுத்து தன் வலிமையினால் (மல்லினால்) கொள்ளும் ஏமம் (பாதுகாவல்)

37. தொகை நிலை என்றால் என்ன?

8. **களிறு எறிந்து எதிர்ந்தோர் பாடு** : யானையை எதிர்த்து ஏறும் பெருமை

9. **களிற்றொடு பட்ட வேந்தனை அட்ட வேந்தன் வாளோர் ஆடும் அமலை** : களிற்றுடன் சென்று அழிந்த மன்னனை வென்று கொன்ற மன்னனின் வாட்படை வீரர் நெருங்கி, அங்ஙனம் பெற்ற தம் மன்னனைப் பாடும் பாட்டு.

10. **வாள் வாய்த்து இருபெரு வேந்தர் தாமும் சுற்றமும் ஒருவரும் ஒழியாத் தொகைநிலை** : வாட்போர் முற்றி இருபெரும் வேந்தர்களும் தாமும் சுற்றமும் முழுவதும் ஒருவரும் ஒழியாமல் அழிந்த தொகைநிலை.

11. **செருவகத்து இறைவன் வீழ்வுறச் சினைஇ ஒருவனை மண்டிய நல்லிசை நிலை** : போர்க்களத்தில் தன்வேந்தன் பட அதுகண்டு கறுத்தெழுந்த படைத்தலைவன் வீரனொருவனை நெருங்கிப் பொருத நற்புகழ் நிலை.

12. **பல்படை ஒருவற்கு உடைதலின் அவள் ஒள்வாள் வீசிய நூழில்**: பலவகைப் படையும் ஒருவனுக்கு உடைந்து கெட்டழிந்த விடத்துப் பலரையும் கொன்று குவித்த நூலில் என்னும் நிலை. (14)

38. நூழில் என்பதன் விளக்கம் யாது?

என்னும் உட்படப் பொருந்தித் தோன்றும் பன்னிரு துறைகளையுடையதாகும்.

## 2.6 வாகைத்திணை

புறத்திணைகளுள் ஒன்றான வகை வெற்றியைக் குறிப்பதாகும். போர்க்களம் சென்று மாற்றாரை வெற்றி காண்பதே வாகை ஆகும்.

*"வாகை தானே பாலையது புறனே*
*தாவில் கொள்கைத் தத்தம் கூற்றைப்*
*பாகுபட மிகுதிப் படுத்தல் என்ப"* (15)

39. வாகைத் திணைக்கான புறன் எது?

வாகை, பாலை என்னும் அகத்திணைக்குப் புறனாம். அது கேடில்லாத கோட்பாட்டினை உடைய தத்தமக்குள்ள இயல்பை வேறுபட மிகுதிப்படுத்தல் என்பர்.

பாலையாவது தனக்கென ஒரு நிலமின்றி எல்லா நிலத்திலும் காலம் பற்றி பிறப்பது போல இதுவும் எல்லா நிலத்திலும் எல்லாக் குலத்திலும் காலம் பற்றி நிகழ்வதாதலினாலும் ஒத்தார் இருவர் புணர்ச்சியினின்றும் புகழ்ச்சி காரணமாகப் பிரியுமாறு போலத் தன்னோடு ஒத்தாரினின்றும் நீங்கிப் புகழப்படுதலாலும் அதற்கிது புறனாயிற்று

### 2.6.1 வாகைத்திணைப்பாகுபாடுகள்

வாகைத்திணை 7 வகையாகப் பாகுபாடு செய்யப்படுகின்றது.

*"அறுவகைப்பட்ட பார்ப்பனப் பக்கமும்*
*ஐவகை மரபின் அரசர் பக்கமும்*
*இருமூன்று மரபின் ஏனோர் பக்கமும்*
*மறுவில் செய்தி மூவகைக் காலமும்*
*நெறியின் ஆற்றிய அறிவன் தேயமும்*
*நாலிரு வழக்கில் தாபதப் பக்கமும்*
*பாலறி மரபில் பொருநர் கண்ணும்*
*அனைநிலை வகையோடு ஆங்கெழு வகையால்*

*தொகைநிலை பெற்றது என்மனார் புலவர்"* (16)

1. **அறுவகைப்பட்ட பார்ப்பனப் பக்கம்** : ஓதல் (கல்வி), ஓதுவித்தல் (கற்பித்தல்), வேட்டல் (வேள்வி செய்தல்), வேட்பித்தல் (வேள்வி செய்வித்தல்), ஈதல் (இரந்தோர்க்குக் கொடுத்தல்), ஏற்றல் (தனது சிறப்பு குறையாமல், பிறர் தருவனவற்றை ஏற்றுக் கொள்ளல்) என்ற ஆறு திறனாகிய அந்தணர் பக்கம்.

40.பார்ப்பனப் பக்கம் எத்தனை?

2. **ஐவகை மரபின் அரசர் பக்கமும்** : ஓதல், வேட்டல், ஈதல், படைவழங்குதல், குடியோம்பல் (குடிமக்களைப் பாதுகாத்தல்) என்ற ஐந்து திறனாகிய அரசர் பக்கம்.

*குடியோம்பல் :* *"இருமுந்நீர்க் குட்டமும்*
*வியல் ஞாலத்து அகலமும்*
*வளி வழங்கு திசையும்*
.........................
*மன்னுயிர் எல்லாம் நின் அஞ்சும்மே"* (புறம் : 20)

41. அரசர் பக்கம் எத்தனை?

3. **இருமூன்று மரபின் ஏனோர் பக்கம்** : ஆறு மரபினை உடைய வணிகர் வேளாளர் பக்கம். ஓதல், வேட்டல், ஈதல், உழவு, வாணிகம் நிரையோம்பல் என்னும் ஆறும் வணிகர்க்குரிய மரபு.

உழவு, உழவொழிந்த தொழில், விருந்தோம்பல், பகடு புறந்தருதல், வழிபாடு, வேதம் ஒழிந்த கல்வி என்னும் ஆறும் வேளாளர்க்குரிய மரபு.

42. வணிகர்க் குரிய மரபு யாவை?

4. **மறுவல் செய்தி மூவகைக் காலமும் நெறியின் ஆற்றிய அறுவன் தேயமும்** : குற்றமற்ற செயலையுடைய மழையும் பனியும் வெயிலுமாகிய மூவகைக் காலத்தினையும் நெறியினால் பொறுத்த அறிவன் பக்கமும்.

மூவகைக் காலமும் நெறியினால் ஆற்றுதலாவது பகலும் இரவும் இடைவிடாமல் ஆகாயத்தைப் பார்த்து ஆண்டு நிகழும் வில்லும் மின்னும் ஊர்கோளும் தூம் கேதும் மின் வீழ்வும் கோள்நிலையும் மழைநிலையும் பிறவும் பார்த்துப் பயன் கூறல் ஆதலான் 'அறிவன்' என்றார்.

43.வேளாளர்க் குரிய மரபு எத்தனை?

5. **நாலிரு வழக்கின் தாபதப் பக்கமும்** : எட்டு வகைப்பட்ட வழக்கினையுடைய தாபதர் பக்கமும், அவை : நீராடல், நிலத்திடைக் கிடத்தல், (வெறுந்தரையில் படுத்துறங்கல்) தோலுடுத்தல், சடை புனைதல், எரியோம்பல், ஊரடையாமை, காட்டில் உள்ள உணவு கோடல், தெய்வ பூசையும் அதிதி பூசையும் செய்தல்.

6. **பாலறி மரபின் பொருநர்கள்** : பாகுபாடு அறிந்த மரபினையுடைய பொருநர் பக்கம். அதாவது வாளானும் தோளானும் பொருதலும் வென்றி கூறலும் வாகையாம்.

வாளால் மிகுதல் :

*"ஏந்துவாள் தானை இரிய உறைகழித்துப்*
*போந்துவாள் மின்னும் பொருசமத்து - வேந்தர்*
*இருங்களி யானை இனமிரிந் தோடக்*

*கருங்கழலான் கொண்டான் களம்"* (புறப். வாகை : 26)

7.**அனைநிலை வகை** : வாளானும் தோளானும் பொருது வெற்றி பெறுதலன்றி அத்தன்மைத்தாகிய பிறநிலை வகையான் வரும் வெற்றிச் சிறப்பு. சொல்லால் வெற்றி பெறுதலும், பாட்டால் வெற்றி பெறுதலும் கூத்தால் வெற்றிபெறுதலும் சூதால் வெற்றி பெறுதலும் தகர்ப்போர். பூழ்ப்போர் என்பவற்றால் வெற்றி பெறுதலும்.

### 2.6.2 வாகைத்திணைக்குரிய துறைகள்

44. வாகைத் திணையின் துறைகள் எத்தனை?

எழுவகைப்பட்ட வாகைத்திணை 18 துறைகளைக் கொண்டதாகத் திகழ்கின்றது.

1. **கூதிர் வேனில் என்று இரு பாசறைக் காதலின் ஒன்றிக் கண்ணிய வகை** : கூதிர்பாசறையும் வேனிற்பாசறையும் என்று சொல்லப்பட்ட இருவகை பாசறைகளையும் போரின் மீதுகொண்ட காதலால் பொருந்திக் கருதிய போர்நிலை வகை.

2. **ஏரோர் களவழி அன்றிக் களவழித் தேரோர் தோற்றிய வென்றி** : ஏரோர் களவழி (களத்தில் நிகழும் செயல்கள்) கூறுதலும் அன்றிப் போரோர் (வீரர்) களவழித் தேரோர் (தேர்மறவர்) தோற்றுவித்த வெற்றி. இது களம்பாடுதல், களவேள்வி பாடுதல் என இரு வகைப்படும்.

*(எ.டு)*
*"நளிகடல் இருங்குட்டத்து*
*வேள்வி முற்றிய வாய்வாள் வேந்தே*
*ஆற்றா ராயினும் ஆண்டுவாழ் வோரே"* (புறம் : 26)

இது களவேள்வி குறித்தது.

3. **தேரோர் வென்ற கோமான் முன்தேர்க் குரவை** : தேரோரைப் பொருது வென்ற அரசனின் தேர்முன் அவனது படைவீரர் ஆடும் குரவைக் கூத்து.

4. **ஒன்றிய மரபின் தேர்ப்பின் குரவை** : பொருந்திய மரபின் வென்ற வேந்தனின் தேரின் பின் அவனது படைவீரர்கள் ஆடும் குரவைக் கூத்து.

5. **பெரும்பகை தாங்கும் வேல்** : பெரும் பகையினைத் தாங்கும் வேலினைப் புகழ்தல்

6. **அரும்பகை தாங்கும் ஆற்றல்** : பொருதற்கரிய பகையைப் பொறுக்கும் ஆற்றல்

*(எ.டு)*
*"என்னைமுன் நில்லன்மின் தெவ்விர் பலர்என்னை*
*முன்நின்று கல்நின் றவர்* (குறள் : 771)

7. **புல்லா வாழ்க்கை வல்லான் பக்கம்** : பொருந்தாத வாழ்க்கையினையுடைய வன்மை குன்றாத பக்கம்.

8. **ஒல்லார் நாணப் பெரியவர் கண்ணி சொல்லிய வகையின்**

**ஒன்றோடு புணர்த்துத் தொல் உயிர் வழங்கிய அவிப்பலி** : பகைவரும் நாணுமாறு தம் தலைவரைக் குறித்து முன்பு சொன்ன வஞ்சின உரையோடு வாய்ப்ப அமைத்துப் பழம் தொடர்புடைய உயிரை வாங்கும் அவிப்பலி.

(எ.டு)

*"இழைத்த திகவாமைச் சாவாரை யாரே*
*பிழைத்த தொறுக்கிற் பவர்"* (குறள் : 779)

9. **ஒல்லால் இடவயின் புல்லிய பாங்கு** : பொருந்தாதார் இடத்தின்கண் பொருந்திய பக்கம் அஃதாவது போர் இல்லாத வழி நாடு கையகப்பட்டதென்று மகிழ்தல்.

10. **பகட்டினாலும் ஆவனாலும் துகள் தபு சிறப்பின் சான்றோர் பக்கம்**: எருதானும் பசுவானும் குற்றமற்ற சிறப்பினையுடைய சான்றோர் பக்கத்தைப் புகழ்வது.

11. **கடிமனை நீத்த பால்** : பிறர்மனை நயவாமை

எ.டு

*"பிறன்மனை நோக்காத பேராண்மை சான்றோர்க்கு*
*அறனன்றோ ஆன்ற ஒழுக்கு"* (குறள் : 148)

12. **எட்டுவகை குறித்த அவையகம்** : குடிப்பிறப்பு, கல்வி, ஒழுக்கம், வாய்மை, தூயமை, நடுவுநிலைமை, அழுக்காறாமை, அவாவின்மை என்னும் எண்வகைச் சால்புகளும் குறித்து நிற்கும் மன்றம்.

13. **கட்டமை ஒழுக்கத்து கண்ணுமை** : கட்டுதல் அமைந்த ஒழுக்கத்னைக் குறித்த நிலை. அஃதாவது இல்லறத்திற்கு உரித்தாக நான்கு வருணத்தார்க்கும் சொல்லப்பட்ட அறத்தின் கண் நிற்றல். அவையாவன அடக்கமுடைமை, ஒழுக்கமுடைமை, நடுவு நிலைமை, வெஃகாமை, புறங்கூறாமை, தீவினையச்சம், அழுக்காறாமை, பொறையுடைமை என்பன மிகுதியாதலின் வகையாயின.

45. எட்டு வகை குறித்த அவையகம் யாவை?

எ.டு

*"ஒழுக்கம் விழுப்பம் தரலான் ஒழுக்கம்*
*உயிரினும் ஓம்பப் படும்"* (குறள் : 131)

14. **இடையில் வண்புகழ்க் கொடை** : இடையீடில்லாத வளவிய புகழை வளர்க்கும் கொடை.

15. **பிழைத்தோர்த் தாங்கும் காவல்** : தம்மாட்டுப் பிழைத்தோரைத் தாங்கும் ஏமம்.

16. **பொருளொடு புணர்ந்த பக்கம்** : மெய்ப்பொருள் உணர்ந்த பக்கம்.

17. **அருளொடு புணர்ந்த அகற்சி** : அருளொடு பொருந்திய துறவு. அஃதாவது அருளடைமை, கொல்லாமை, பொய்யாமை, கள்ளாமை, புணர்ச்சி விழையாமை, கள்ளுண்ணாமை, துறவு என்பனவற்றைப் பொருந்துதலாகும். அருளுடைமையைத் தவிர அனைத்தையும் விட்டு விடுதலால் 'அகற்சி' என்றார்.

எ.டு

*"வாய்மை எனப்படுவது யாதெனின் யாதொன்றும்*
*தீமை இலாத சொலல்"* (குறள் : 291)

18. காமம் நீத்த பால் : ஆசையை நீத்த பக்கம்.

(எ.டு)

*"காமம் வெகுளி மயக்கம் இவை மூன்றன்*
*நாமம் கெடக்கெடும் நோய்"* (குறள் : 360)

இவ்வாறு வாகைத்திணை 18 துறைகளைக் கொண்டதாக உள்ளது.(17)

## 2.7 காஞ்சித்திணை

'காஞ்சி' என்பது நிலையாமையைக் குறிப்பதாகும்.

46. 'காஞ்சி' எந்த அகத்திணைக்குப் புறன்?

*"காஞ்சி தானே பெருந்திணைப் புறனே*
*பாங்கருஞ் சிறப்பிற் பன்னெறி யானும்*
*நில்லா உலகம் புல்லிய நெறித்தே"* (18)

காஞ்சித்திணை பெருந்திணை என்னும் அகத்திணைக்குப் புறனாம். அது இணையில்லாத சிறப்பினை உடைய பல நெறியானும் நில்லாத உலகத்தைப் பொருந்திய நெறியுடைத்து.

47.நிலையாமை எத்தனை வகைப்படும்?

நிலையாமை மூன்று வகைப்படும். அவை இளமை நிலையாமை, செல்வம் நிலையாமை, யாக்கை நிலையாமை.

எ.டு

*"குடம்பை தனித்தொழியப் புட்பறந் தற்றே*
*உடம்போ டுயிரிடை நட்பு"* (குறள் : 338)

இதில் 'யாக்கை நிலையாமை' உரைக்கப்பட்டுள்ளது.

'ஏறிய மடமற்றிறம்' முதலாகிய நோதிறக் காமப்பகுதி அகத்திணை ஐந்திற்கும் புறனாயவாறு போல இது புறத்திணை ஐந்தற்கும் புறனாகலானும் அதற்கு இது புறனாயிற்று.

48. காஞ்சித் திணையின் துறைகள் எத்தனை?

### 2.7.1 காஞ்சித் திணைத் துறைகள்

காஞ்சித்திணைத் துறைகள் மொத்தம் 20 ஆகும். முதற்பத்து ஆண்பாற்காஞ்சி என்றும், அடுத்த பத்தும் பெண்பாற்காஞ்சி என்றும் பாகுபடுத்தப்படுகின்றன.

49. காஞ்சித் துறைகள் எவ்வாறு பாகுபடுத்தப் படுகின்றன?

1. **மாற்றருங் கூற்றம் சாற்றிய பெருமை** : மாற்றுதற்குரிய கூற்றம் (யமன்) வரும் எனச் சொல்லப்பட்ட பெருங்காஞ்சி

2. **கழிந்தோர் ஒழிந்தோர்க்குக் காட்டிய முதுமை** : அறிவால் முதிர்ந்தோர் அவ்வறிவு முதிர்ச்சி இல்லாதோர்க்குச் சொன்ன முதுகாஞ்சி.

எ.டு

*"பல்சான் றீரே பல்சான் றீரே*
*கல்முன் அன்ன நரைமுதற் திரைகவுள்*
*பயன்இல் மூப்பின் பல்சான் றீரே*
*....................*
*நல்லாற்றுப் படூஉம் நெறியுமா ரதுவே"  (புறம் : 195)*

**3. பண்புற வந்த பகுதி நோக்கிப் புண்கிழித்து முடியும் மறன் :** தகுதியொடுபட்ட பரிசு கருதி புண்கிழித்து முடியும் மறக்காஞ்சியும்.

**4. ஏமச் சுற்றம் இன்றிப் புண்ணோன் பேஎய் ஓம்பிய பேஎய்ப்பக்கம்:** பாதுகாக்கக் கூடிய சுற்றத்தார் இல்லாமையால், புண்பட்டவனைப் பேய் பாதுகாக்கும் பேஎய்ப் பக்கம் (பேய்க்காஞ்சி)

**5. இன்னன் என்று இரங்கிய பண்ணை :** இத்தன்மையான் என உலகத்தார் இரங்குவதாகிய மன்னைக் காஞ்சி

*எ.டு*
*"சிறியகள் பெறினே எமக்கீயும் மன்னே*
*பெரியகள் பெறினே*
*யாம்பாடத் தான் மகிழ்ந்த துண்ணும் மன்னே*
*.......................*
*ஈயாது வீயும் உயிர்தவப் பலவே"  (புறம் : 235)*

**6. இன்னது பிழைப்பின் இதுவாகியர் எனத் துன்னருஞ் சிறப்பின் வஞ்சினம் :** 'இன்னவாறு செய்யத் தவறுவேனாயின், இன்னேன் ஆகக் கடவேன்' எனக் கூறும் ஒப்பற்ற சிறப்புடைய வஞ்சினக் காஞ்சி.

**7. இன்னகை மனைவி பேஎய்ப் புண்ணோன் துன்னுதல் கடிந்த தொடாஅக் காஞ்சி :** இனிய நகை (புன்சிரிப்பு) நிறைந்த மனைவியானவள். புண்பட்டதன் கணவனைப் பேய் நெருங்காமல் காத்துத் தொடவிடாத தன்மைத்தாகிய தொடாக் காஞ்சி.

50. வஞ்சினக் காஞ்சி என்றால் என்ன?

**8. நீத்த கணவன் தீர்த்த வேலின் பெயர்த்த மனைவி ஆஞ்சி :** தன்னை நீத்த கணவன் விடுத்த வேலினால் மனைவி தன் உயிரைப் போக்குவதாகிய ஆஞ்சிக் காஞ்சி.

**9. நிகர்த்து மேல்வந்த வேந்தனொடு முதுகுடி மகட்பாடு அஞ்சிய மகட்பால் :** குடித்தொன்மையால் ஒவ்வாவிடினும் ஒத்தனாகக் கருதிக் கொண்டு தன் மகளைப் படையோடு வந்த மன்னனொடு தொல்குடிமகளைப் படுத்தலஞ்சி, அதை விலக்க அவள் தந்தையாம் மறக்குடித் தலைவன் வந்தவனோடு தம்முயிரைப் பொருட்படுத்தாது போர் செய்வதாகிய மகட்பாற்காஞ்சி.

**10. கொண்டோன் தலையொடு முலையும் தோளும் சேர்த்தி முடிந்த நிலை :** தன்னைக் கொண்டான் தலையொடு தன்னுடைய முலைகளையும் தம் முகத்தையும் சேர்ந்த இறந்த நிலை.

இவற்றோடு பத்தாகும்.

**11. பேர் இசை மாய்ந்த மகனைச் சுற்றிய சுற்றம் மாய்ந்த பூசல் மயக்கம் :** மிகுந்த புகழோடு பொருது மடிந்த குறுகில் ஒருவனை வளைந்து இரங்கும் சுற்றத்தார் அவன் மாய்ந்தமைக்கு அழுத மயக்கம்.

**12. தாம் எய்திய தாங்கரும் பையுள் :** சிறைப்பட்டார் தாம் உற்ற பொறுத்தற்கு அரிய துன்பத்தைக் கூறுதல்.

எ.டு

*"குழவி இறப்பினும் ஊன்தடி பிறப்பினும்*
*ஆளன்று என்று வாளில் தப்பார்*
*தொடர்ப்படு ஞமலியின் இடர்ப்படுத் திரீஇய*
*கேளில் கேளிர் வேளாண் சிறுபதம்*
*மதுகையின்றி வயிற்றுத்தீத் தணியத்*
*தாம் இரந்து உண்ணும் அளவை*
*ஈன்மரோஇவ் வுலகத் தானே"* (புறம் : 74)

**13. கணவனொடு முடிந்த படர்ச்சி நோக்கிச் செல்வோர் செப்பிய மூதானந்தம் :** கணவனொடு இறந்த மனைவியின் செலவை நோக்கி வழிச்செல்வோர் இரங்கக் கூறிய மூதானந்தம்.

**14. நனிமிகு சுரத்திடைக் கணவனை இழந்து தனிமகள் புலம்பிய முதுபாலை :** மிகப்பெரிய சுரத்திடைக் கணவனை இழந்து தனியளாய் மனைவி வருந்தி அரற்றும் முதுபாலை.

**15. கழிந்தோர் தேஎத்துக் கழிபடர் உறீஇ ஒழிந்தோர் புலம்பிய கையறுநிலை :** செத்தோர் மாட்டுச் சாவாதார் வருத்த முற்றுப் புலம்புவதாகிய கையறுநிலை.

**16. காதலி இழந்த தபுதாரநிலை :** அன்புடைய மனைவியை இழந்த கணவனது நிலையினைக் கூறுவது தபுதார நிலை.

**17. காதலன் இழந்த தாபத நிலை :** காதற் கணவனை இழந்த மனைவி கூறுவதாகிய தாபதநிலை.

**18. நல்லோள் கணவனொடு நனியழல் புகீஇச் சொல்லிடை இட்ட மாலை சொல்நிலை :** மனைவியானவள், சிறந்த கணவனொடு பெரிய நெருப்பில் புக்கபோது இடையிட்ட மாலைக் காலத்துக் கூறும் கூற்று.

**19. அரும்பெருஞ் சிறப்பின் புதல்வன் பயந்த தாய்தப வரூஉம் தலைப்பெயல் நிலையும் :** அரும்பெருஞ் சிறப்பினையுடைய மகனைப் பெற்ற தாய் சாகும்போது அவனைச் சேர்தல்.

**20. மலர்தலை உலகத்து மரபு நன்கு அறியப் பலர் செலசெல்லாக் காடு வாழ்த்து :** இடம் அகன்ற உலகத்தில் மரபு நன்கு விளக்கப் பலரும் மாயத் தான் மாயாத புறங்காட்டை வாழ்த்தல். (19)

இளமை நிலையில்லாதது. ஆகையால் இளமைக் காலத்திலேயே அரிய செயல்களைச் செய்து முடிக்க வேண்டும். யாக்கை நிலையில்லாதது. ஆகையால் உயிருள்ளபோதே நல்வினை ஆற்ற வேண்டும். செல்வம்

நிலையில்லாதது. ஆகையால் செல்வம் உள்ளபோதே அறங்களைச் செய்ய வேண்டும் என்பதனை விளக்குவதாகக் காஞ்சித்திணை உள்ளது.

### 2.8 பாடாண் திணை

பாடு+ஆண்+திணை=பாடாண் திணை. பாடப்படும் ஆண்மகனது ஒழுக்கம் என்பது இதன் பொருள். பாட்டுடைத் தலைவனின் வீரம், கொடை, புகழ் முதலிய ஒழுக்கங்களைச் சிறப்பித்துப் பாடுவதாகும்.

*"பாடாண் பகுதி கைக்கிளைப் புறனே*
*நாடுங்காலை நாலாண் டுடைத்தே"* (20)

51. பாடாண் திணையின் பொருள் யாது?

பாடாண்திணைப் பகுதி கைக்கிளை என்னும் அகத்திணைக்குப் புறனாம். அஃது ஆராயும் காலத்து 8 வகையினை உடையதாகும். அவை : கடவுள் வாழ்த்து வகை, வாழ்த்தியல் வகை, மங்கலவகை, செவியறிவுறுத்தல், ஆற்றுப்படை வகை, பரிசல்துறை வகை, கைக்கிளை வகை, வசைவகை என்பனவாம்.

கைக்கிளையாவது ஒரு நிலத்திற்கு உரித்தன்று ஒருதலைக் காமமாகி வருமன்றே அதுபோல இதுவும் ஒருபாலுக்கு உரித்தன்றி ஒருவனை ஒருவன் யாதானும் ஒரு பயன் கருதியவழி மொழிந்து நிற்பது ஆகலானும் கைக்கிளையாகிய காமப்பகுத்திக்கண் மெய்ப்பெயர் பற்றிக் கூறுதலானும் கைக்கிளை போலச் செந்நிறத்தால் கூறுதலானும் அதற்கு இது புறனானது. (நோந்திறம் - கழி பேரிரக்கம்; செந்நிறம் - அஃது அல்லாதன)

52. பாடாண் திணை எத்திணைக்குப் புறன்?

### 2.8.1 பாடாண் திணையின் பொருண்மை

*"அமரர்கண் முடியும் அறுவகை யானும்*
*புரைதீர் காமம் புல்லிய வகையினும்*
*ஒன்றன் பகுதி ஒன்றும் என்ப"* (21)

அமரர் கண் முடியும் கொடிநிலை, கந்தழி வள்ளி, புலவராற்றுப்படை, புகழ்தல், பரவல் என்பனவற்றிலும் குற்றம் தீர்ந்த காமத்தைப் பொருந்திய வகையினும் (அதாவது ஐந்திணை தழுவிய அகம்) இவற்றுள் இதற்கேற்புடைய ஒவ்வொன்றின் கூறே பாடாண் திணையாதற்குப் பொருந்தும் என்பர் புலவர்".

அமரர்கண் முடியும் அறுவகை முதலாக முன்பு சொல்லப்பட்டவை. வழக்கிற் வருங்காலத்து, அதனதன் வகைபெற நிறுத்துப் பரவலும் புகழ்ச்சியும் கூறுமிடத்தும் முதலாசிரியர் கூறிய காமக் குறிப்பினும் செந்துறைப் பாட்டின் கண்வரும் வண்ணப் பகுதி நீக்கப்படாது. (22)

### 2.8.2 கடவுள் மாட்டு வரும் பாடாண் பக்கம்

*"காமப் பகுதி கடவுளும் வரையார்*
*ஏனோர் பாங்கினும் என்மனார் புலவர்* (23)

காமப்பகுதி கடவுள் மாட்டும் நீக்கார். ஏனோர் மாட்டும் நீக்கார்

என்பர் புலவர். அதாவது கடவுள் மாட்டும் தெய்வப் பெண்டிரும் மானிடப் பெண்டிரும் விரும்பும் தன்மையாகப் பாடப்பெறும் என்பதாகும்.

எ.டு

*"அரிகொண்ட கண்சிவப்ப அல்லினென் ஆகம்*
*புரிகொண்ட நூல்வருவாய் புல்லி வரிவண்டு*
*பண்நலங்கூட் டுண்ணும் பனிமலர்ப் பாசூர் என்*
*உண்ணலங் கூட்டுண்டா நூர்"* (புறப்:பாடாண்:49)

இது கடவுள் மாட்டு மானிடப் பெண்டிர் நயந்த பக்கம்.

### 2.8.3 குழவிப்பருவத்தும் காமப்பகுதி

*"குழவி மருங்கினும் கிழவ தாகும்"* (24)

குழவிப் பருவத்தும் காமப்பகுதி கூறப்பெறும். அவர் விளையாட்டு மகளிரொடு பொருந்திய காலத்து.

*"ஊரொடு தோற்றம் உரித்தென மொழிப*
*வழக்கொடு சிவணிய வகைமை யான"* (25)

53. ________ மருங்கினும் கிழவதாரும்.

ஊரின்கண் காமப்பகுதி நிகழ்த்தலும் உரித்து என்று சொல்வர் புலவர். அது நிகழும் காலத்து வழக்கொடு பொருந்தி நடக்கும் வகைமையின் கண். ஊரொடு தோற்றம் என்பது பேதை முதலாகப் பேரிளம் பெண் ஈறாக வருவது. ஏழு பருவத்துப் பெண்கள் மாட்டும் அவரவர் பருவத்திற்கு ஏற்பக் காமப்பகுதி கூறப்பெறலாம் என்பதாகும்.

அமரர்கண் முடியும் அறுவகை முதலாயினவும், கொற்றவள்ளை முதலியனவும்.

ஒருவனுக்குக் காரணமாகி மெய்ப் பெயராகி வரும் பொதுப்பெயரான் அன்றி இயற்பெயரின் பக்கத்து நெறிப்பட வைத்தனர். (26)

*"கொடிநிலை கந்தழி வள்ளி என்ற*
*வடுநீங்கு சிறப்பின் முதலான மூன்றும்*
*கடவுள் வாழ்த்தொடு கண்ணிய வருமே"* (27)

குற்றம் தீர்ந்த சிறப்பினையுடைய கொடிநிலை, கந்தழி, வள்ளி எனச் சொல்லப்பட்ட மூன்றும் பாட்டுடைத் தலைமகனைச் சார்ந்து வருங்காலத்துக் கடவுள் வாழ்த்தொடு பொருந்தி வரும்.

கொற்றவள்ளையும் ஓரிடத்துப் பாடாண் பாட்டாகும். (28)

### 2.8.4 பாடாண் திணைத் துறைகள்

பாடாண் திணைக்குரிய துறைகள் 2 நூற்பாக்களில் விளக்கப்படுகின்றன.

**1. கொடுப்போர் ஏத்திக் கொடார் பழித்தல் :** கொடுப்போர் ஏத்தல், கொடார்ப் பழித்தல், கொடுப்போர் ஏத்திக் கொடார்ப் பழித்தல் என மூவகைப்படும். அஃது ஈவோரைப் புகழ்தலும் ஈயாதோரைப் பழித்தலும் ஈவோரைப் புகழ்ந்து ஈயாதோரைப் பழித்தலும் என்பதாம்.

54. கொடுப்போர் ஏத்திக் கொடார்ப் பழித்தல் எத்தனை வகைப்படும்?

எ.டு

*"பாரி பாரி யென்றுபல ஏத்தி*
*ஒருவற் புகழ்வர் செந்நாப் புலவர்*
*பாரி ஒருவனும் அல்லன்*
*மாரியும் உண்டீண்டுலபுரப் பதுவே"* (புறம் : 107)

இது கொடுப்போர் ஏத்தல் ஆகும்.

**2. அடுத்து ஊர்ந்து ஏத்திய இயன் மொழி வாழ்த்து :** வெற்றியும் குணமும் அடுத்துப் பரந்து ஏத்திய இயல்மொழி வாழ்த்து. இஃது இயல்மொழி வாழ்த்து, வாழ்த்து, இயல்மொழி என மூன்று வகைப்படும்.

**3. சேய்வரல் வருத்தம் விட வாயில் காவலர்க்கு உரைத்த கடைநிலை:** நெடுந்தொலைவினின்று வருகின்றமையால் உண்டாய வருத்தம் தீர வாயில் காவலர்க்கு உரைத்த வாயில் நிலை.

*"வாயிலோயே வாயி லோயே*
*வரிசைக்கு வருந்தும் இப் பரிசில் வாழ்க்கை*
*பரிசிலர்க்கு அடையா வாயி லோயே"* (புறம் : 206)

**4. கண்படை கண்ணிய கண்படை நிலை :** அரசன் இனிது துயின்றமை கூறுதல்.

**5. கபிலை கண்ணிய வேள்வி நிலை :** கபிலை நிறங்கொண்ட பசுவைக் குறித்த வேள்வி நிலை.

**6. வேலை நோக்கிய விளக்கு நிலை :** வேலினைக் குறித்த விளக்கு நிலை விளக்கு ஏதுவாக வேலின் வெற்றியைக் காட்டுதல்.

**7. வாயுறை வாழ்த்து :** வெஞ்சொல்லைப் பிரித்தலின்றிப் பிற்பயக்கும் என்று வேம்பும் கடுவும்போல் ஓம்படைக் கிளவியாலே மெய்யுறக் கூறல்.

எ.டு *"காய்நெல் அறுத்துக் கவளங் கொளினே*
*மாநிறைவு இல்லதும் பன்னாட் காகும்*
*நூறுசெறு ஆயினுந் தமித்துப்புக் குணினே*
*வாய்படு வதனினும் கால்பெரிது கெடுக்கும்*
........................
*தானும் உண்ணான் உலகமுங் கெடுமே"* (புறம் : 184)

**8. செவியறிவுறூஉ :** உயர்ந்தோரிடத்து அடங்கி ஒழுக வேண்டும் எனச் செவியறிவுறுத்துக் கூறுவது.

**9. ஆவியின் வரூஉம் புறநிலை வாழ்த்து :** மன்னன் இடத்தாகிவரும் புறநிலை வாழ்த்தும்.

55.கைக்கிளை எத்தனை வகைப்படும்?

*"தென்றல் இடைபோழ்ந்து தேனார் நறுமுல்லை*
*முன்றில் முகைவிரியும் முத்தநீர்த் தண்கோவூர்க்*
*குன்றமர்ந்த கொல் ஏற்றான் நிற்காப்ப என்றுந்*
*தீரா நண்பின் தேவர்*
*சீர்சால் செல்வமொடு பொலிமதி சிறந்தே"*

(யா.விரு : 55)

**10. கைக்கிளை வகை :** இஃது இரு வகைப்படும். ஆண்பாற் கூற்றுக் கைக்கிளை, பெண்பாற் கூற்றுக் கைக்கிளை.

இவற்றோடு இன்னும் 10 துறைகள் உள்ளன.

**1. கிடந்தோர்க்குத் தாவில் நல் இசை கருதிய சூதர் ஏத்திய துயில் எடைநிலை :** கிடந்தோர்க்குக் கேடு இல்லாத நற்புகழைப் பொருந்த வேண்டிச் சூதர் ஏத்திய துயில் எடைநிலை.

**2. கூத்தரும் பாணரும் பொருநரும் விறலியும் ஆற்றிடைக் காட்சி உறழத் தோன்றிப் பெற்ற பெருவளம் பெறாஅர்க்கு அறிவுறீஇச் சென்று பயன் எதிரச் சொன்ன பக்கம் :** கூத்தராயினும் பாணராயினும் பொருநராயினும் விறலியராயினும் நெறியிடைக் காட்சிக் கண்ணே எதிர்ந்தோர் உறழ்ச்சியால் தாம் பெற்ற பெருவளன் நுமக்குப் பெறலாகும் என்று சொல்லும் பகுதி.

எ.டு

*"பாணன் சூடிய பசும்பொன் தாமரை*
*மாணிழை விறலி மாலையொடு விளங்கக்*
*கடும்பரி நெடுந்தேர் பூட்டுவிட் டசைஇ*

..............................

*வறுமை நோக்கின்றவன் கைவண்மையே"*(புறம் : 14)

இது பாணாற்றுப்படை.

**3.சிறந்த நாளினிற் செற்றம் நீக்கிப் பிறந்த நாள்வயின் பெருமங்கலம்:** பிறந்த வெள்ளணி நாளில் உண்டாகிய சினத்தை நீக்கிச் சிறந்த பெருநாள் விழாவயரும் பெருமங்கலம்.

**4. சிறந்த சீர்த்து மண்ணுமங்கலம் :** ஆண்டு தோறும் முடிபுனையும் போது நிகழும் மிக்க புண்ணிய நீராட்டு மங்கலம்.

**5. நடைமிகுத்து ஏத்திய குடைநிழல் மரபும் :** ஒழுக்கத்தை மிகுத்து ஏத்தப்பட்ட குடைநிழல் மரபினைக் கூறுவது.

**6. மாணார்ச் சுட்டிய வாள்மங்கலம் :** பகைவரைக் கருதிய வாள்மங்கலம்

**7. மண்எயில் அழித்த மண்ணு மங்கலம் :** நிலைபெற்ற எயிலை (பகைவரது மதிலை) அழித்த பின் நீராடும் மறவிழா

இஃது உழிஞைப் படலத்துக்குக் கூறப்பட்ட தாயினும் மண்ணு

நீராடுதலின் இதற்கும் துணையாயிற்று.

**8. பரிசில் கடைஇய கடைக்கூட்டு நிலை :** புரவலனது தலைவாயிலை இரவலன் அணுகிப் புகழ்ந்து பரிசில் கேட்கும் பெற்றி.

**9. பெற்ற பின்வரும் பெருவளன் ஏத்தி நடைவயின் தோன்றிய இருவகை விடை :** பரிசில் பெற்ற பின்னரும் அவன் கொடுத்த மிக்க வளனை ஏத்தி, வழக்கின் கண் தோன்றிய இருவகை விடை. அவையாவன : 1. இரவலன் ஈத்தோனை மிகுதியாகப் புகழ்ந்து பின்பு தானே விடை வேண்டல் (தான் போதல் வேண்டும் எனக் கூறல்) 2. அரசன் பரிசு கொடுத்து விடுப்ப, இரவலன் போதல் (அரசன் விரும்பிப் போதல்)

56. பாடாண் திணை எத்தனை துறைகளைக் கொண்டுள்ளது?

10. அச்சமும் உவகையும் எச்சம் இன்றி நாளும் புள்ளும் பிறவற்றின் நிமித்தமும் காலம் கண்ணிய ஓம்படை : அச்சமும் உவகையும் ஒழிவின்றி நாளானும் புள்ளானும் (பறவையாலும்) பிற நிமித்தத்தானும் காலத்தைக் குறித்த ஓம்படை. அச்சமாவது தீமை வரும் என்று அஞ்சுதல், உவகையாவது நன்மை என்று மகிழ்தல், நாளாவது நன்னாள், தீநாள். புள்ளாவன, ஆந்தை முதலியன. 'பிற' என்பது 'பகல் நிலவு எறித்தல்' போல்வன; காலம் குறித்தல் என்பது வருங்காலத்தைக் குறித்தல்.

எ.டு

*"நல்லது செய்தல் ஆற்றீர் ஆயினும்*
*அல்லது செய்தல் ஓம்புமின்"* (புறம் : 195)

இவ்வகையில் பாடாண்திணை 10+10=20 துறைகளைக் கொண்டுள்ளது.

## 2.9 தொகுப்புரை

இப்பாடப் பகுதியில் விளக்கப்பட்ட வெட்சி முதல் பாடாண் திணையிலான ஏழு புறத்திணையியலானது பண்டையரசருடைய, போர் வீரருடைய ஏனை மக்களுடைய அரும்பெரும் குணங்களையும் செயல்களையும் பழங்காலத்து வழங்கிய முறை தவறாது கூறுவதென்பதும் ஆதலால் அப்பகுதி முழுவதும் பழைய சரித்திரக் கூறுகளே என்பதும் தெளிவாகின்றது.

## வினாவிற்கேற்ற விடைகள்

| | | |
|---|---|---|
| 1,2 | - | 2.1 ஐப் பார்க்க |
| 4,5 | - | 2.2 " |
| 6,7,8,9,10 | - | 2.2.1 " |
| 11,12,13,14,15 | | |
| 16,17,18,19,20 | - | 2.2.2 " |
| 21 | - | 2.3 ஐப் பார்க்க |
| 22,23,24,25,26 } | - | 2.3.1 " |

| | | | |
|---|---|---|---|
| 27,28,29 | - | 2.4 | ” |
| 30,31,32 | - | 2.4.1 | ” |
| 33,34 | - | 2.4.2 | ” |
| 35 | - | 2.5 | ” |
| 36,37,38 | - | 2.5.2 | ” |
| 39 | - | 2.6 | ” |
| 40,41,42,43 | - | 2.6.1 | ” |
| 44,45 | - | 2.6.2 | ” |
| 46,47 | - | 2.7 | ” |
| 48,49,50 | - | 2.7.1 | ” |
| 51,52 | - | 2.8 | ” |
| 53 | - | 2.8.3 | ” |
| 54,55,56 | - | 2.8.4 | ” |

**பக்க வினாக்கள்**

1. புறத்திணைகளுக்குப் புறனான அகத்திணைகள் யாவை? விளக்குக.
2. வெட்சித் திணையின் இலக்கணம் குறித்து எழுதுக.
3. வஞ்சித்திணை குறித்து விளக்குக.
4. எயில் வளைத்தலும், காத்தலுக்குரிய சூழலை விளக்கி எழுதுக
5. தும்பைத் திணையின் இலக்கணத்னைக் குறிப்பிடுக.
6. வாகைத் திணையின் பாகுபாடுகள் யாவை?
7. காஞ்சி என்றால் என்ன? விளக்குக.
8. பாடாண் திணை என்றால் என்ன? குறிப்பிடுக.

**கட்டுரை வினாக்கள்**

1. நீரை கவர்தல், மீட்டல் குறித்துக் கட்டுரைக்க
2. உழிஞைத்திணை குறித்துக் கட்டுரை எழுதுக.
3. வாகைத் திணையின் துறைகள் குறித்துக் கட்டுரைக்க.
4. இளமை, யாக்கை, செல்வம் நிலையாமையைக் காஞ்சித் திணை எங்ஙனம் சுட்டுகின்றது? கட்டுரைக்க.
5. பாடாண் திணை குறித்துக் கட்டுரை வரைக.
6. புறத்திணையியல் தமிழர் பண்பாட்டை பறைசாற்றுகின்றதா? ஆய்க.

# அலகு - 3

# களவியல்

## அறிமுகம்

அகவாழ்வின் தொடக்கமாக அமைவது களவு. இக்களவியல் என்னும் இப்பகுதியில் களவொழுக்கத்தின் இயல்பும் படிநிலைகளும் ஆண், பெண்ணிற்கான இயல்பு களவொழுக்க உணர்வுகள், தலைவன், தலைவி, தோழி, செவிலி, நற்றாய் கூற்றுமுறைகள், செவிலி இயல்பு, பகற்குறி, இரவுக்குறி, வரைதல் முதலானவை விளக்கப்படுகின்றன.

## நோக்கம்

மாணவர்கள் சென்ற பாடத்தில் தமிழர்தம் பண்பாட்டின் ஒரு கூறான புற வாழ்க்கையினைப் பற்றிய புரிதலை அடைந்திருப்பர்.

இப்பாடப் பகுதியினைக் கற்பதன் விளைவாக அகவாழ்வின் ஒரு கூறான களவு பற்றிய சிந்தனையினை அடைவர். நம் அகப் பண்பாடு குறித்தத் தெளிவினைப் பெறுவர்.

**பாடம் - 3 களவியல்**

**பொருளடக்கம்**

**பாடம் - 3**

## களவியல்

இன்ப வாழ்வின் தொடக்கமான களவு என்பது இல்லறத்தின் அடிப்படையாகும். இதில் களவு என்றால் என்ன? ஆண், பெண், செவிலிக்கான இயல்புகள், களவொழுக்க உணர்வுகள், தலைவன், தலைவி, தோழி, செவிலி, நற்றாய் கூற்றுமுறைகள், குறி, இரவுக்குறி, பகற்குறி, வரைதல் போன்றவை விளக்கப்படுகின்றன.

### 3.1 களவு - விளக்கம்

இன்பம் என்பது மக்களினத்திற்கு மட்டுமின்றி அனைத்துயிர்க்கும் பொது. நம் தமிழினத்தைப் பொறுத்தமட்டில் களவு, கற்பு எனும் வரையறை பன்னெடுங் காலத்திற்கு முன்பிருந்தே அமைந்துள்ளது. களவானது பிணி மூப்புகளின்று எஞ்ஞான்றும் ஒரு தன்மையாய் உருவும் திருவும் பருவமும் குலனும் அன்பும் முதலியவற்றால் ஒப்புமையுடையரான தலைமகனும் தலைமகளும் கொடுப்பாரும் கொள்வாரும் இன்றி, ஊழ் வகையால் தாமே எதிர்ப்பட்டுக் கூடுவது.

1. களவில் உரைக்கப்படுவன யாவை?

2. இயற்கைப் புணர்ச்சியின் பிற பெயர்கள் யாவை?

இக்களவியலில் உரைக்கப்படுவன 4. அவை 1. இயற்கைப் புணர்ச்சி 2. இடந்தலைப்பாடு 3. பாங்கற் கூட்டம் 4. பாங்கியர்க் கூட்டம் ஆகும்.

1. இயற்கைப் புணர்ச்சி : ஒத்தார் இருவரும் தாமே கூடும் கூட்டம். இதனை காமப்புணர்ச்சி, இயற்கைப் புணர்ச்சி, முன்னுறு புணர்ச்சி, தெய்வப்புணர்ச்சி என்பர்.

2. இடந்தலைப்பாடு : இயற்கைப் புணர்ச்சியில் புணர்ந்த தலைமகன் அடுத்த நாளும் அவ்விடத்துச் சென்று எதிர்ப்படுதல்.

3.இடந்தலைப் பாடு என்றால் என்ன?

3. பாங்கற் கூட்டம் : இப்புணர்ச்சியினைப் பாங்கற்கு உரைத்து நீ எமக்குத் துணையாக வேண்டுமென்று அவன் குறிவழிச் சென்று தலைமகள் நின்ற நிலையை உணர்த்தச் சென்று கூடுதல்.

4. பாங்கியற் கூட்டம் : இவற்றின் பின்னர் இக்கூட்டம் நீடச்சேறல் வேண்டித் தோழியை இரந்து பின்னின்று அவள் வாயிலாகக் கூடுதல்.

### 3.2 காமப் புணர்ச்சி

முதல் நூற்பாவின் கண்ணே காமப் புணர்ச்சி குறித்த இலக்கணத்தினைக் குறிப்பிட்டுள்ளார் தொல்காப்பியர்.

*"இன்பமும் பொருளும் அறனும் என்றாங்கு*
*அன்பொடு புணர்ந்த ஐந்திணை மருங்கின்*
*காமக் கூட்டங் காணுங் காலை*
*மறையோர் தேஎத்து மன்றல் எட்டனுள்*
*துறையமை நல்யாழ்த் துணைமையோர் இயல்பே"* (1)

கைக்கிளை முதல் பெருந்திணை வரையிலான ஏழுதிணைகளில் அன்பொடு புணர்ந்த நடுவண் ஐந்திணையிடத்து நிகழும் காமக்கூட்டத்தினை ஆராயும்கால் மறையோரிடத்து ஓதப்பட்ட மணம் எட்டனுள்ளும் துறையமை நல்யாழ்த் துணைமையோர் எனப்படும் காந்திருவர் நெறியாகும்.

4. அன்பொடு புணர்ந்த ஐந்திணைகள் யாவை?

அன்பொடு புணர்ந்த ஐந்திணை : முல்லை, குறிஞ்சி, பாலை, மருதம், நெய்தல் ஆகும்.

மன்றல் (மணம்) எட்டாவன : பிரமம், பிரசாபத்தியம், ஆரிடம், தெய்வம், காந்திருவம், அசுரம், இராக்கதம் பைசாசம்.

5. மன்றல் என்றால் என்ன?

பிரமம் : கன்னியை அணிகலன் அணிந்து பிரமசாரியாயிருப்பான் ஒருவனுக்குத் தானமாகக் கொடுப்பது.

பிரசாபத்தியம் : மகட் கோடற்குரிய கோத்திரத்தார் மகள் வேண்டிய வழி இருமுது குரவரும் இயைந்து கொடுப்பது.

ஆரிடம் : ஒன்றானும் இரண்டானும் ஆவும் ஆனேறும் வழங்கிக் கொடுப்பது.

6. மன்றல் எத்தனை?

தெய்வம் : வேள்விக்கு ஆசிரியராய் நின்றார் பலருள்ளும் ஒருவர்க்கு வேள்வித் தீ முன்னர்க் கொடுப்பது.

காந்திருவம் : ஒத்த இருவர் தாமே கூடும் கூட்டம்.

7. காந்திருவம் என்றால் என்ன?

அசுரம் : வில்லேற்றினானாதல் திரிபன்றி எய்தானாதல் கோடற்குரியனெனக் கூறியவழி அது செய்தார்க்குக் கொடுத்தல்.

இராக்கதம் : தலைமகள் தன்னினும் தமரினும் பெறாது வலிதிற் கொள்வது

பைசாசம் : களித்தார் மாட்டும் துயின்றார் மாட்டும் கூடுதல்.

### 3.2.1 ஒத்த கிழவனும் கிழத்தியும்

*"ஒன்றே வேறே என்றிரு பால்வயின்*
*ஒன்றி உயர்ந்த பால தாணையின்*
*ஒத்த கிழவனும் கிழத்தியும் காண்ப*
*மிக்கோ னாயினுங் கடிவரை இன்றே"* (2)

ஒன்றுபடுத்தும் ஊழ்நிலையானும், வேறுபடுத்தும் ஊழ்நிலையானும் அமையும் வாழ்க்கையில் ஒன்று தலைச்செய்யும் உயர்ந்த ஊழின் ஆணையால், ஒத்த தலைவனும் தலைவியும் காண்பர். தலைவியைவிடத் தலைவன் மிக்கோனாய் இருந்தாலும் கடியப்படாது (நீக்கப்படாது).

ஒத்த கிழவனும் கிழத்தியும் என்பது இருவருக்கும் பத்து ஒத்தப் பண்புகள் இருத்தல் வேண்டும். அவை

*"பிறப்பே குடிமை ஆண்மை ஆண்டோடு*
*உருவு நிறுத்த காம வாயில்*

*நிறையே அருளே உணர்வொடு திருவென*

*முறையுறக் கிளந்த ஒப்பினது வகையே" (மெய்ப் : 25)*

என்பனவாகும் : குலப்பிறப்பு, ஒழுக்கம் பண்பாடு, ஆள்வினையுடைமை, வயது, வடிவம், வனப்பு, காம ஒழுக்கத்திற்குரிய உள்ளக் கிளர்ச்சி, சால்பு, அருளுடைமை, உள்ளக் குறிப்பை அறிந்தொழுகும் நுண்ணறிவு தெய்வப்பொலிவு

8. தலைவன், தலைவிக்கான ஒத்த பண்புகள் எத்தனை?

### 3.2.2 ஐயம்

ஊழ்வலியால் தலைவியைக் கண்ணுற்ற தலைவன் இவள் அணங்குகொல்லோ? ஆய்மயில் கொல்லோ? கணங்குழை மாதர் கொல்? என மயங்கிக் கூறுவது ஐயம் எனப்படும்.

*"சிறந்துழி ஐயஞ் சிறந்த தென்ப*

*இழிந்துழி இழிவே சுட்ட லான"* (3)

ஒருவன் ஒருத்தியைக் கண்ணுற்றுழி அவ்விருவரும் உயர்வுடையராயின், அவ்விடத்து ஐயம் சிறந்தது என்பர் ஆன்றோர். ஆனால் அவர்கள் இழிபுடையராயிருப்பின் அவ்விடத்து அவர் இழிவினையே சுட்டியுணரப்படும்.

### 3.2.3 துணிதற்குக் கருவி

தலைவியைக் கண்ணுற்ற தலைவன் ஐயப்படுகின்றான். அங்ஙனம் ஐயுற்றவன் சில குறிகளால் இவள் மானிட மகளே எனத் தெளிவு கொள்வான். அது துணிவு ஆகும். அதற்கு சில காரணங்கள் தென்படுகின்றன.

*"வண்டே இழையே வள்ளி பூவே*

*கண்ணே அலமரல் இமைப்பே அச்சமென்று*

*அன்னவை பிறவும் ஆங்கண் நிகழ*

*நின்றவை களையும் கருவி என்ப"* (4)

வண்டு (மயிரின் அணிந்த பூவைச் சூழ்வது), இழை (அணிகலன்) வள்ளி (முலையிலும் தோளினும் எழுதிய கொடி), பூ, கண், அலமரல் (தடுமாறுதல்), இமைப்பு (கண்ணிமைத்தல்), அச்சம் (ஆண்மக்களைக் கண்டு அஞ்சுதல்) இவை போல்வன பிறவும் ஐயத்தை களையும் கருவிகளாகும்.

9. கைக் கிளை குறிப்பு எவை?

காட்சி, ஐயம், தெளிதல், தேறல் என்ற இந்நான்கும் கைக்கிளைக் குறிப்பாம்.

*"நாட்டம் இரண்டும் அறிவுடம் படுத்தற்குக்*

*கூட்டி உரைக்குக் குறிப்புரை யாகும்"* (5)

தலைவன் தலைவி இருவர்க்கும் கவர்ந்து நின்ற அறிவை ஒருப்படுதற் பொருட்டு வேட்கையொடு கூட்டிக் கூறுங் காமக் குறிப்புச் சொல் இருவரது நாட்டமாகும் (நாட்டம் - கண்கள்)

எ.டு

*"கண்ணொடு கண்ணினை நோக்கொக்கின் வாய்ச்சொற்கள்*
*என்ன பயனு மில"* (குறள் :

ஒருவருடைய குறிப்பு ஒருவர் குறுறித்ததனைக் கொள்ளுமாயின் அவ்விடத்து கண்ணினால் வரும் குறிப்புரை நிகழும். குறிப்புரை கொள்ளாதவழி அக்குறிப்புரை நிகழாது. (6)

10. நாட்டம் என்றால் என்ன?

எ.டு

*"நோக்கினாள் நோக்கி இறைஞ்சினாள் அஃதவள்*
*யாப்பினுள் அட்டிய நீர்* (குறள் : 1093)

### 3.3 தலைமகன் இயல்பு

முன்னர்ச் சொன்ன ஒத்த பண்பு கொண்ட தலைவன் தலைவிக்கான இயல்புகளையும் தொல்காப்பியர் குறிப்பிடுகின்றார்.

*"பெருமையும் உரனும் ஆடூஉ மேனே"* (7)

11. "__________ __________ ஆடூஉ மேன"

பழி பாவங்களுக்கு அஞ்சுதலும், அறிவுத் திறனும் ஆணுக்குரிய இயல்பாகும்.

தலைமகளது வேட்கைக் குறிப்புக்கண்ட தலைமகன், அந்நிலையே புணர்ச்சியை நினையாது வரைந்து எய்தும் என்பது.

எ.டு

*"சென்ற இடத்தால் செலவிடா தீதொரீஇ*
*நன்றின்பால் உய்ப்ப தறிவு"* (குறள் : 422)

### 3.3.1 தலைமகள் இயல்பு

*"அச்சமும் நாணும் மடனும் முந்துறுதல்*
*நிச்சமும் பெண்பாற் குரிய என்ப"* (8)

12. தலைமகளுக்கான மூன்று இயல்புகள் யாவை?

அச்சம், நாணம், பேதைமை இம்மூன்றும் நாள்தோறும் முந்துறுதல் பெண்டிர்க்கு இயல்பாகும்.

வேட்கையுற்றுழியும் அச்சத்தானாதல் நாணானாதல் மடத்தானாதல் புணர்ச்சிக்கு இசையாது நின்று வரைந்தெய்தல் வேண்டுமென்பது போந்தது.

### 3.4 மெய்யுறு புணர்ச்சி நிகழும் காலம்

உள்ளப்புணர்ச்சியே மெய்யுறு புணர்ச்சிக்குக் காரணமாகும்.

*"வேட்கை ஒருதலை உள்ளுதல் மெலிதல்*
*ஆக்கஞ் செப்பல் நாணுவரை இறத்தல்*
*நோக்குவ எல்லாம் அவையே போறல்*
*மறத்தல் மயக்கஞ் சாக்காடு என்றிச்*
*சிறப்புடை மரபினவை களவென மொழிப"* (9)

வேட்கை முதலாகச் சாக்காடு ஈறாக ஓதப்பட்ட காமச் சிறப்புடையனவற்றால் களவு ஆமென்று சொல்லுவர் புலவர்.

வேட்கை : பெறல்வேண்டும் என்னும் உள்ள நிகழ்ச்சி.

ஒருதலை உள்ளுதல் : "இடைவிடாது நினைத்தல்

மெலிதல் : உண்ணாமையால் உண்டாகும் உடல் மெலிவு

ஆக்கஞ்செப்பல் : உறங்காமையும், உறுவ ஓதலும் முதலாயின கூறுதல்

நாணுவரை இறத்தல் : நாண் நீங்குதல்

நோக்குவ எல்லாம் அவையே போறல் : தன்னால் காணப்பட்டன எல்லாம் தான் கண்ட உறுப்புப் போலுதல்

மறத்தல் : பித்தாதல்

மயக்கம் : மோகித்தல்

சாக்காடு : சாதல்

காட்சியைச் சேர்த்து உள்ள இப்பத்து அவத்தைகள் களவு நிகழ்தற்கு காரணமானவைகள் ஆகும்.

### 3.5 இயற்கைப் புணர்ச்சித் திறம்

1. முன்னிலையாக்கல் : காமக் குறிப்புண்மை அறிந்த தலைமகன் வேட்கையில் சார நினைத்தவழித் தலைமகளும் வேட்கைக் குறிப்புடையாளாயினும் குலத்தின் வழி வந்த இயற்கையன்மையான நாணமும் அச்சமும் மீதூர அக்குறிப்பில்லாதரைப் போல் நின்றவழி அவளை முன்னிலையாகப் படுத்திச் சில கூறுதல்.

13.சொல்வழிப் படுத்தல் என்றால் என்ன?

2. சொல்வழிப்படுத்தல் : தான் சொல்லுகின்ற சொல்லின் வழி அவளை நிற்குமாறு படுத்துக் கூறுதல்.

3. நன்னயமுரைத்தல் : "தலைமகளது நலத்தினை உரைத்தல்

எ.டு

*"சேரல் மடவன்னஞ்சேரல் நடையொவ்வாய்*
*சேரல் மடவன்னஞ்சேரல் நடையொவ்வாய்*
*ஊர்திரை வேலி யுழக்கித் திரிவாள்பின்*
*சேரல் மடவன்னஞ் சேரல் நடையொவ்வாய்"*

(சிலப்:கானல்:23)

4. நகைநனி யுறாஅ அந்நிலையறிதல் : தலைமகன் தன் நன்னய முரைத்தலைக் கேட்ட தலைவிக்கு இயல்பாக அகத்து உளவாகும் மகிழ்வாய் புறந்தோன்றும் முறுவற்குறிப்பு மிக்குத் தோன்றா அந்நிலையினைத் தலைவன் அறிதல்.

5. மெலிவு விளக்குறுதல் : தலைவன் அகத்துறும் நோயால் புறத்து

நிகழும் களவினைக் குறிப்பால் எடுத்துக் கூறுதல்.

6. தன்னிலை உணர்த்தல் : அப்புற நிகழ்ச்சியின் பொலிவிழவைக்கண்ட தலைமகள் மாட்டுத்தலைவன் தன் உள்ள வேட்கை மீதூர் வினை நிலைபடக் கூறல்.

7. தெளிவு அகப்படுத்தல் : தலைமகளின் பண்பினைத் தலைமகன் அறிந்து அத்தெளிவைத் தன்னகப்படுத்துத் தேர்தல்.

14.இயற்கைப் புணர்ச்சிக்குரிய திறன்கள் எத்தனை?

எ.டு

*"யாயும் ஞாயும் யாரா கியரோ*

..............................

*அன்புடை நெஞ்சம் தாம் கலந் தனவே (குறுந் : 40)*

இவ்வேழும் இயற்கைப் புணர்ச்சிக்குரிய திறன்கள் ஆகும். (10)

### 3.6 தலைமகன் கூற்று

இயற்கைப்புணர்ச்சி, இடந்தலைப்பாடு, பாங்கற் கூட்டம், பாங்கியற் கூட்டம் என்ற நான்கு களவுக் கூட்டத்தின் போதும் தலைமகன் கூற்று நிகழும்.

15. களவுக் காலத்தில் தலைமகன் கூற்று நிகழும் இடங்கள் யாவை?

இயற்கைப்புணர்ச்சி, இடந்தலைப் பாட்டின்கண் தலைமகன் கூற்று :

1. மெய் தொட்டுப் பயிறல் : பெருமையும் உரனுமுடைய தலைமகன் தெளிவகப்படுத்தியது காரணமாகக் காதல் வெள்ளம் புரண்டோடத் தலைவியின் மெய்யைத் தீண்டிப் பயிறல்.

2. பொய் பாராட்டல் : மேற்கூறியவாறு தொட்டுப் பயின்றவன் தலைவியின் ஐந்தாகப் பகுக்கப்பட்ட கூந்தல் முதலிய கடை குழன்று சிதை வின்றேனும் அணி சிதைந்திருக்கின்றன என்று திருத்துவான் போல மருங்கு சென்று தொட்டான் ஒரு காரணம் பொங்காப் படைத்து உரைத்துப் பாராட்டல்.

எ.டு

*"கடல்புக் குயிர்கொன்று வாழ்வர்நின் ஐயர்*
*உடல்புக் குயிர் கொன்று வாழ்வைமன் நீயும்*
*மிடல்புக் கடங்காத வெம்முலையோ பாரம்*
*இடர்புக் கிடுகும் இடையிழவல் கண்டாய்"*

*(சிலப் : கானல் : 17)*

3. இடம் பெற்றுத் தாழாஅல் : பொய் பாராட்டல் காரணமாகத் தலைவியிடம் அணிமையிடம் பெற்றுத் தழுவ வேண்டும் என்று கூறுதல்.

4. இடையூறு கிளத்தல் : நாணம், மடம் இவற்றை நிலைக்களனாகக் கொண்ட தலைவி தன் அறிவு நலன் இழந்து ஒன்றும் அறியாது உயிர்ப்பாள் அஃதாவது புதிதாய்ப் புக்கார், ஊற்றுணர்வு என்றும் பயிலாத, தம் மெல்லிய உடம்பிற்பட அறிவு இழப்பினும், உள்ளத்தே நெக்கு உயிர்ப்பாள் என்பதாம்.

அங்ஙனம் உயிர்த்தால், காதல் மிகக் கொம்பொன் றனையோ கொடி ஒன்றனையோ சார்ந்து நின்று, தலைவனைப் பாராமல் நிற்பாள். அதனைக் கண்ட தலைவன் இப்பொழுது இவ்ஊற்றன்பிற்கு இடையூறாய் நின் மனத்தகத்து நிகழ்ந்தவை யாவை என வினவுதல்.

5. நீடுநினைந்து இரங்கல் : இவ் இருவர் இயலும் ஒருங்கு இணைத்துங் கூடத் தலைவி நெரு நாணால், விதிவழி நடக்கும் என எண்ணி எவ்வித மறுமாற்றமும், குறிப்பும் காட்டாமல் கண் புதைப்பாள். அது கண்ட தலைவன் அவள் புறத்தே நின்று பார்த்தும் அவளைக் கூட முடியாமை நினைத்து இரங்கல்.

6. கூடுதல் உறுதல் : இவ்வாறு காட்சிக்குப் பின்னர்ப் புணர்ச்சி எய்தல்.

7. சொல்லிய நுகர்ச்சி வல்லே பெறுதல் : இயற்கைப் புணர்ச்சிக்குக் களனாக மேற்கூறப்பட்டவற்றுடன் அவ்வின்பத்தில் திளைத்தல்

இவ்வியற்கைப் புணர்ச்சிக்குப் பொருள் கூறுங்கால் பயிறல், பாராட்டல், தாழஅல், கிளத்தல், இரங்கல், உறுதல், நுகர்ச்சி, தேற்றம் என்ற 8 அமையும்.

8. நீராத் தேற்றம் : இங்ஙனம் இயற்கைப் புணர்ச்சி நிகழ்ந்தாலும் அதன் கண் முடியாத தெளிவு உண்டு.

எ.டு

*எம்மணங் கினவே மகிழ்ந முன்றில்*

.....................

*நேர் இறை முன்கை பற்றிச்*
*சூரர மகிளிரோ டுற்ற சூளே''* (குறுந் : 53)

மெய்தொட்டுப்பயில் முதல் கூறுதல் உறுதல் வரை இயற்கைப் புணர்ச்சிக்குரியன.

சொல்லிய நுகர்ச்சி முதல் இரு நான்கு கிளவி வரை இடந்தலைப்பாடு.

பாங்கற் கூட்டத்தின்கண் தலைவன் கூற்று : பெற்றவழி மகிழ்தல் முதல் வாயில்பெட்டனும் வரை பாங்கற் கூட்டம்.

9. பெற்றவழி மகிழ்ச்சி : இடந்தலைப் பாட்டினையொட்டி நிகழும் அன்பினைப் பெற்றவழி அகத்துத் தோன்றும் பெருமகிழ்வு.

16. பெற்ற வழி மகிழ்ச்சி என்றால் என்ன?

10. பிரிந்த வழிக் கலங்கல் : இவ்வாறு கூடின தலைமகள் தன்னை விடடுப் பிரிந்த போது தலைமகன் கலக்கமுறுதல்

11. நிற்பவை நினைஇ நிகழ்பவை உரைத்தல் : காமநுகர்ச்சி ஒன்றை மட்டும் நினையாது இவளாலே நமக்கு இல்லறம் இனிது நடக்கும் என்று உட்கோடல்.

எ.டு

*''இடக்குங் கேளிர் நுங்குறை யாக*
*நிறுக்க லாற்றினோ நன்றுமற் றில்ல*

*ஞாயிறு காயும் வெவ்வறை மருங்கில்*
*கையில் ஊமன் கண்ணில் காக்கும்*
*வெண்ணெய் உணங்கல் போலப்*
*பரந்தன் றிந்நோய் நோன்று கொளர்கரிதே" (குறுந் : 58)*

17. தோழியிற் கூட்டம் என்றால் என்ன?

இது நிகழ்பவை உரைத்தல்.

12. குற்றங் காட்டிய வாயில் : தலைவன் மாட்டுச் சோர்வானும் காதல் மிகுதியானும் நேர்வுற்ற பழிபாவங்களை எடுத்துக் காட்டும் பாங்கன்.

13. பெட்பின் : எடுத்துக்காட்டியபின் உடன்படுங்கால் நின்னால் காணப்பட்டாள் எவ்விடத்தாள்? எத்தன்மையாள்? எனப்பாங்கன் வினாவுதல் அதற்குத் தலைவன் இடமும் அவள் உருவமும் கூறுதல். அவன் சொன்ன வழியே பாங்கன் சென்று தலைவியைக் கண்டு மீண்டு வந்த தலைமகனுக்கு அவள் நிலைமை கூறுதல். இங்ஙனம் பாங்கன் வினவுதல். தலைவன் வினவுதல் உண்டு.

தோழியிற் கூட்டம் : இயற்கைப்புணர்ச்சி இடந்தலைப்பாடு, பாங்கற் கூட்டம் என்ற நிலையில் தலைவன் தலைவி கூடியபின், தலைவன் தோழியைக் கண்டு இரந்து குறையுற்று அவளின் வாயிலாகத் தலைவியைக் கூடுவான். இது தோழியிற் கூட்டம் எனப்படும்.

14. பெட்டவாயில் பெற்று இரவு வலியுறுத்தல் : முன்னர்க் கூறியவாறு தலைவியைக் கூடப்பெற்றுப் பின்னும் வரைந்து எய்தலாற்றாது களவிற் புணர்ச்சி வேண்டித் தோழியை இரந்து பின் நின்று கூட்டக் கூடுவன் என்ற உள்ளத்தனாய் அவ்விரத்தலை வலியுறுத்தல்.

15. ஊரும் பேரும் கெடுதியும் பிறவும் நீரிற் குறிப்பின் நிரம்பக் கூறித் தோழியைக் குறையுறும் பகுதியும் : நும் ஊர் யாது? என வினாதல், நும் பேர் யாது? என வினாதல், எனது அம்பு பட்டுத் தப்பி வந்த விலங்கினைக் கண்டீரா? என வினாதல், நீர்மையினால் தன் குறிப்புத் தோன்றக் கூறித் தலைமகன் தோழியைக் குறையுறும் பகுதியும் உண்டு.

16. *தோழி குறையவட் சார்த்தி மெய்யுறக் கூறலும்*
*தண்டா நிரப்பினும் மற்றைய வழியும்*
*சொல்லவட் சார்த்தலிற் புல்லிய வகையினும்*
*அறிந்தோள் அயர்ப்பி னவ்வழி மருங்கில்*
*கேடும் பீடும் கூறலும் தோழி*
*நீக்கலி னாகிய நிலைமையும் நோக்கி*
*மடல்மாக் கூறும் இடனுமா குண்டே"*

தலைவியைக் கிட்டுவதற்கு அருமை என்று கூறி ஆற்ற நினைத்த தோழியிடம் கூறுதல், தலைமகன் பலகாலும் சென்று இரத்தல், பலகாலும் சென்று இரத்தலைத் தவிர பிறவழி, தோழியானவள் முன்னுறு புணர்ச்சி முறையே நீங்கவிடாது உடன்பட்டுக் கூறியபோது தலைவனுக்குக் கூற்று நிகழும். மேலும் தலைவி அறிவாள் ஒருத்தி அல்லள் என்று தோழி கூறும்போதும் தலைவனுக்குக் கூற்று நிகழும். அல்லது தோழி தான்

அறியாள் போலக் கூறும் போதும் கூற்று நிகழும். உலகத்தார் மகள் கொள்ளுமாறு கொள் என்று தோழி கூறும் போதும், தலைவனது பெருமை கூறி நீக்க எண்ணிய தோழியிடத்தும், யாய், தமையன்மார், காவலர் போன்றோர் வருவர் என்று தான் அச்சமுற்று அஞ்சின தன்மையைத் தோழி தலைவனுக்கு அறிவிக்குமிடத்தும், யான் மடலேறுவேன் எனுமிடத்தும் தலைமகனுக்குக் கூற்று நிகழும்.

எ.டு

*"நாணொடு நல்லாண்மை பண்டுடையேன் இன்றுடையேன்*
*காமுற்றார் ஏறும் மடல்" (குறள் : 1138)*

மேலும் சிலவிடத்துத் தலைமகன் கூற்று நிகழும். இதில் தோழியிற் கூட்டத்தின்கண் மடன்மாக் கூறுதல் இடையூறு படுதலும் உண்டு.

1. பண்பிற் பெயர்த்தல் : தோழி தலைமகளது இளமைப் பண்பு கூறிப் பெயர்த்த வழித் தலைமகன் கூற்று நிகழும்.

எ.டு

*"குன்றக் குறவன் காதல் மடமகள்*
*வண்டுபடு கூந்தல் தண்தழைக் கொடிச்சி*
*வளையள் முளைவாள் எயிற்றள்*
*இளைய ளாயினும் ஆரணங் கினளே" (ஐங் : 256)*

2. பரிவுற்று மெலிதல் : இரங்கமுற்றுத் தோழி மெலிந்த காலத்துத் தலைவனுக்குக் கூற்று நிகழும்.

3. அன்புற்று நகுதல் : அன்பு தோன்றும் உள்ளத்துடன் தோழி சிரித்தாலும் தலைமகன் கூற்று நிகழும்.

4. அவட்பெற்று மலிதல் : தோழியின் உடன்பாட்டினைப் பெற்று மகிழும்போதும் அல்லது தலைமகளை இருவகைக் குறியினும் பெற்று மகிழும் போதும் தலைமகன் கூற்று நிகழும்.

5. ஆற்றிடை உறுதல் : தான் செல்லும் வழியிடை இடையூறு உண்டாயவிடத்தும் தலைவனுக்குக் கூற்று நிகழும். மேலும் வரைவிடை நிறுத்துப் பிரியும் தலைவன், தான் செல்லும் வழியின்கண் வருத்தமுற்றுக் கூறுதலும் உண்டு.

*"மறைந்த ஒழுக்கத்து ஓரையும் நாளும்*
*துறந்த ஒழுக்கம் கிழவோற்கு இல்லை" (45)*

களவொழுக்கத்தின்கண் முகூர்த்தமும் நாளும் துறந்து ஒழுகும் ஒழுக்கம் தலைவனுக்கு இல்லை.

*"ஆறின தருமையும் அழிவும் அச்சமும்*
*ஊறும் உளப்பட அதனோ ரற்றே" (46)*

வரும் வழியினது அருமையும் மனன் அழிவும் அஞ்சுதலும் இடையூறும் தலைவன் மாட்டு நிகழா. அம்பல், அலர் ஆகிய இரண்டும்

களவொழுக்கத்தினை வெளிப்படுத்தும். அதற்குக் காரணமானவர் தலைவனே. (49)

### 3.6.1 தோழியிற் கூடிய தலைமகன் வரைந்தெய்துங்காறும் கூறும் கூற்று :

தோழியின் துணையினைப் பெற்று அவள் வாயிலாகத் தலைவியைக் கூடிய தலைமகன் வரைந்தெய்தும் வரை சில கூற்று நிகழ்த்துவான்.

18.'குறியிடம்' என்றால் என்ன?

1. இருவகைக் குறி பிழைப்பாகிய இடத்தும் : குறி இடத்தே சென்று தலைவனும் தலைவியும் கூடுமிடம் குறியிடம் எனப்படும். இது இரவுக்குறி, பகற்குறி என இருவகைப்படும் பகலிற் கூடுமிடம் பகற்குறி, இரவிற் கூடுமிடம் இரவுக்குறி ஆகும்.

*"குறியெனப் படுவ திரவினும் பகலினும்*
*அறியக் கிடந்த ஆற்ற தென்ப"* (40)

19. குறி எத்தனை வகைப்படும்? யாவை?

குறி என்று சொல்லப்படுவது இரவினானும் பகலினானும் இருவரும் அறியச் சொல்லப்பட்ட இடத்தை உடைத்து.

*"இரவுக்குறியே இல்லகத் துள்ளும்*
*மனையோர் கிளவி கேட்கும் வழியதுவே*
*மனையகம் புகாஅக் காலை யான"* (41)

இரவுக் குறியானது புறமதிலுக்கும் உள்மனைக்கும் இடையே வீட்டில் உள்ளோர் பேசும் பேச்சு கேட்கக் கூடிய இடத்தில் நடைபெறும்.

20.இரவுக்குறி எவ்விடத்து நடைபெறும்?

*"பகற்புணர் களனே புறனென மொழிப*
*அவளறி வுணர வருவழி யான"* (42)

தலைவி காட்டிய குறியிடத்தே தலைவன் சென்று கூறுவது பகற் குறியாகும். இது மதிலின் புறத்தே அமையும்.

இதத்தகைய குறி பிழைத்தலும் உண்டு. அதற்கு அல்ல குறிப்படுதல் என்று பெயர்.

21. குறிமயங்கலின் பெயர் யாது?

அல்ல கூறிப்படுதல் தலைவிக்கே உரித்தாகும். தலைவன் செய்த குறி மயங்கிவரும் காலத்து (43)

குறியிடத்துக் கூட வருகின்ற தலைவன் தலைவியிடம் நீரின் ஒலி போன்றும் பறவையின் ஒலி போன்றும் ஒலி எழுப்ப நீ வரவேண்டும் எனத் தலைவியிடம் கூற அதே போன்று ஒலிகேட்டு குறி இடத்திற்குச் சென்று அங்கு இயற்கையாகவே அத்தகைய ஒலிகள் ஒலித்தமை கண்டும் தலைவன் இல்லாதது கண்டும் ஏமாந்து திரும்புவாள் அதுவே அல்லகுறியாகும்.

தலைவன் இயற்கைப் புணர்ச்சி புணர்ந்த பின்பு தலைவனுடைய கூற்றின் எல்லையை மறத்தல் தலைவிக்கு அறமாகாது. ஆதலால் தலைமகனைச் சந்திப்பதற்கான குறியிடத்தைச் சுட்டுதல் தலைவிக்கே உரியதாகும். (30)

*தோழி குறியிடம் கூறுகின்ற இடங்களும் உண்டு* (31)

ஒழுக்கம் மூன்று வகை. அவை மனத்தாலும் மொழியாலும் மெய்யாலும் ஒழுகுதல். பகற்குறி, இரவுக்குறி, அல்லகுறிப்படுதல் ஆகிய அவ்விடத்தெல்லாம் உயர்ந்த சிறப்புடைய மனத்தால் ஒழுகும் ஒழுக்கம் தலைவிமாட்டு உண்டு. (44)

22. குறியிடத்தைக் கூறுபவர் யார்?

2. காணா வகையிற் பொழுது நனி இகப்பினும் : தலைமகனைக் காணா வகையில் பொழுது மிகவும் கடப்பினும் தலைமகன் கூற்று நிகழும்.

3. தானகம் புகாஅன் பெயர்தல் இன்மையிற் காட்சி ஆசையில் களம்புக்குக் கலங்கி வேட்கையின் மயங்கிக் கையறு பொழுதினும் : காணா வகையிற் பொழுது மிகக் கழிந்துக் காட்சி ஆசையினால் குறியிடத்துச் சென்று ஆண்டுக் காணாது கலங்கி வேட்கையின் மயக்கமுற்றுச் செயலற்று நிற்குங் காலத்தினும் கூற்று நிகழும்.

4. புகாஅக் காலை புக்கு எதிர்ப்பட்டுழி பகாஅ விருந்தின் பகுதிக் கண்ணும் : மனையகம் புகுவதற்கு ஒவ்வாத காலத்தில் தலைவன் அவள் அகம்புக்கு எதிர்ப்பட்ட போது அங்குள்ள தாய் முதலியோரால் நீக்கப்படாத விருந்தின் பகுதியனாகிய வழியும் கூற்று நிகழும்.

5. வேளாண் எதிரும் விரும்புன் கண்ணும் : தலைவனுக்குத் தலைவி உதவி எதிர்ப்பட்ட விருப்பின் கண்ணும் அதாவது குறிவழிக்கண்டவிடத்து கூற்று நிகழும்.

6. தாளாண் எதிரும் பிரிவினானும் : தாளாண்மை எதிரும் பிரிவின் கண்ணும்

7. நாணு நெஞ்சலைப்ப விடுத்தற்கண்ணும் : நாணம் தலைவி நெஞ்சினை வருத்துதலாலே அஃது அலராகும் என்று அஞ்சி நீக்கி நிலை நிறுத்தற்கண்ணும் கூற்று நிகழும். அவ்வாறு கூறும் போது புனைந்துரை என்று கருதிக் கூறுதலும் மெய்யென்று கருதிக் கூறுதலும் உண்டு.

எ.டு "*களித்தொறும் கள்ளுண்டல் வேட்டற்றாங் காமம்*
*வெளிப்படுந் தோறும் இனிது*" (குறள் : 104)

இது புனைந்துரையென்று கருதிக் கூறியது.

8. வரைதல் வேண்டித் தோழி செப்பிய புரைதீர் கிளவி புல்லிய எதிரும் : வரைதல் வேண்டித் தோழியால் சொல்லப்பட்ட குற்றம் தீர்ந்த சொல் பொருந்திய எதிர்ப்பாட்டுக் கண்ணும் கூற்று நிகழும். அஃதாவது பின்னும் (மேலும்) களவொழுக்கம் வேண்டிக் கூறுதல்.

9. வரைவுடம்படுதல் : தோழி கூறிய சொல்கேட்டு வரைவிடம் படுதற் கண்ணும் கூற்று நிகழும்.

10. ஆங்கதன் புறத்தும் : அவ்வரைவு நிகழ்ச்சிக் கண்ணும் கூற்று நிகழும்.

11. புடைபட வந்த மறுத்தலொடு தொகைஇ : குற்றம்பட வந்த அலர் மறுத்தற் கண்ணும் கூற்று நிகழும். (17)

இவ்வாறு பல்வேறான இடத்துத் தலைமகன் கூற்று நிகழும்.

### 3.7 பாங்கர் நிமித்தம் முதலாயின

*"பாங்கர் நிமித்தம் பன்னிரண்டென்ப"* (13)

பாங்கராயினாரைத் துணையாகக் கொண்டு கூடும் கூட்டம் 12 வகைப்படும். அவை பிரமம், பிரசாபத்தியம், ஆரிடம், தெய்வம், காந்திருவப் பகுதியாகிய களவு, உடன்போக்கு, கற்பின் பகுதியாகிய இற்கிழத்தி, காமக்கிழத்தி, காதற்பரத்தை, அசுரம், இராக்கதம் பைசாசம் என்பனவாம்.

23. 'பாங்கர் நிமித்தம் ________ என்ப'

*"முன்னைய மூன்றும் கைகிளைக் குறிப்பே"* (14)

எண்வகை மணங்களுள் அசுரம், இராக்கதம், பைசாசம் என்ற இம்மூன்றும் கைக்கிளையின் பாற்படும்.

24. கைக்கிளை குறிப்பு எவை?

*"பின்னர் நான்கும் பெருந்திணை பெறுமே* (15)

எண்வகை மணங்களுள் பிரம்மம், பிரசாபத்தியம், ஆரிடம், தெய்வம் என்ற நான்கும் பெருந்திணையின் பாற்படும்.

முதல் என்பது நிலமும் காலமும், நிலத்தொடும் காலத்தொடும் பொருந்திய காந்திருவர் பாற்பட்டன கெடுதல் இல்லாத சிறப்பினை உடைய களவும் உடன்போக்கும் இற்கிழத்தி, காமக்கிழத்தி, காதற்பரத்தை என சொல்லப்பட்ட ஐந்து வகைப்படும். (16)

25. பின்னர் நான்கும் ________ பெறுமே"

### 3.8 தலைவியின் இயல்பும் கூற்றும்

அச்சம், மடம், நாணம் இந்த மூன்றும் பெண்ணிற்கான இயல்பாக வகுத்தத் தொல்காப்பியர் இவை நீங்கலாகவும் சில இயல்புகளைக் குறிப்பிட்டுள்ளார்.

26.காந்திருவர் பாற்பட்ட ஐந்து எவை?

*"காமத் திணையிற் கண்நின்று வருஉம்*
*நாணும் மடனும் பெண்மைய ஆதலின்*
*குறிப்பினும் இடத்தினும் அல்லது வேட்கை*
*நெறிப்பட வாரா அவள்வயின் ஆன"* (18)

நாணமும், மடனும் பெண்மைக்குரிய சிறப்பியல்புகள் ஆதலின் 'தலைவி' என்னும் பெண்மையிடத்து இவ்விரண்டும் நிற்றலான் காம ஒழுக்கத்தின்கண் குறிப்பினாலும் இடத்தினாலும் அல்லது வேட்கை புலப்பட நிகழாது தலைவியிடத்து.

அச்சமும் பெண்ணிற்கு இயல்பன்றோவெனின் அது நிலைத்திருக்குமானால் தலைமகன் பால் வேட்கை செல்லாது. எனவே வேட்கைக் குறிப்பினால் அவ் அச்சம் அவளினின்று நீங்கும்.

வேட்கை உரையாத கண் உலகத்தில் இன்மையால் தலைவன் ஏமுறற் (பாதுகாவல்) பொருட்டு நாணும் மடனும் அவள்பால் உளவாம். (19)

எ.டு

*"கடலன்ன காமம் உழந்தும் மடலேறாப்*
*பெண்ணிற் பெருந்தக்க தில்"* (குறள் : 1137)

கடலன்ன காமம் மிகுந்தும் மடலேறாப் பெண் என்றமையான் நாணும் மடனும் நீங்கா நிலையினைக் கூறுதல்

*"சொல்லெதிர் மொழிதல் அருமைத் தாகலின்*
*அல்ல கூற்றுமொழி அவள்வயி னான"* (20)

தலைவன் இயற்கைப் புணர்ச்சி கருதிக் கூறுஞ் சொல்லெதிர் தான் வேட்கைக் குறிப்பினளாயினும் அதற்குடம்பட்ட நெறியைக் கூறுதல் அருமையுடைத்தாதலான் அதற்கு உடம்பாடல்லாத கூற்று மொழி தலைவியிடத்து உண்டு. இசைவில்லாதாரைப் போல் கூறுதல் தலைவியிடம் உண்டு.

தலைவிக்கு இயற்கைப் புணர்ச்சி முதலாகக் களவின் கண் குறிப்பினும் இடத்தினும் அல்லது நிகழ்ச்சி எல்லாவற்றிலும் கூற்று நிகழும்.

1. மறைந்தவற் காண்டல் : தன்னைத் தலைவன் காணாமல் தான் அவனைக் காணுங் காட்சி.

27. மறைந்த வற்றைக் காண்டல் என்றால் என்ன?

2. தற்காட்டுறுதல் : தன்னை இவன் காணுமாறு நிற்றல்

3. நிறைந்த காதலில் சொல்லெதிர் மழுங்கல் : நிரம்பிய வேட்கையால் தலைவன் கூறிய சொற்கேட்டு எதிர்மொழி கூறாது மடிந்து நிற்றல்.

இம்மூன்றிடத்திலும் கூற்று நிகழாது.

4. வழிபாடு மறுத்தல் : அதன்பின் இவள் வேட்கைக் குறிப்புக்கண்டு சாரலுற்றவழி அதற்கு உடம்படாது மறுத்தல்.

5. மறுத்தெதிர்க் கோடல் : முதலில் மறுத்தவாறே மறுக்காமல் பின்பு ஏற்றுக் கோடல்.

6. பழிதீர் முறுவல் சிறிதே தோற்றல் : குற்றம் தீர்ந்த முறுவல் சிறிது தோற்றுவித்தல்.

இது புணர்தற்கு உடன்பாடு காட்டி நிற்கும். மேற்சுட்டிய அனைத்தும் புணர்ச்சிக்கு முன் நிகழ்வன.

7. கைப்பட்டுக் கலங்குதல் : தலைவன் கையகப்பட்ட பின்பு என் செய்தேம் ஆயினேம் எனக் கலக்கமுறுதல்.

8. நாணுமிக வருதல் : தலைவிக்கு முன்புள்ள நாணத்தைவிட மிக நாணம் வருதல்.

9. இட்டுப் பிரிவு இரங்கல் : தலைவன் இட்டு வைத்தல் பிரிவின் என அஞ்சியதற்கு இரக்க முறுதல்.

10. அருமை செய்து அயர்த்தல் : தலைவன் வருவதற்குக் காவலாகிய அருமை செய்ததனால் அவனும் வருதலைத் தவிர்தல்.

11. வந்த வழி எள்ளல் : தலைவன் வந்தவிடத்து 'அலர்' ஆகும் என்று அஞ்சி இகழுதல்.

12. விட்டுயிர்த் தழுங்கல் : மறையாது சொல்லி இரங்குதல்

13. நொந்து தெளிவு ஒழித்தல் : தலைவன் தெளிவித்த தெளிவை நொந்து அதனை ஒழித்தல்

14. அச்சம் நீடல் : தலைவன் வருகின்றது இடையீடாக அச்சம் மிகுதல்.

15. பிரிந்தவழிக் கலங்கல் : தலைவன் பிரிந்தபோது கலக்கமுறுதல்.

*எ.டு "நெஞ்சத்தார் காத லவராக வெய்துண்டல்*
*அஞ்சுவதும் வேபாக் கறிந்து" (குறள் : 1128)*

16. பெற்றவழி மலிதல் : தலைவனோடு கூட்டம் பெற்றபோது மகிழ்தல்

17. வருந்தொழிற்கு அருமை வாயில் கூறுதல் : 'தலைவன் வருவதற்கு இடையீடாகக் காவலர் கடுகுதலால் ஈண்டு வருதல் அரிது' என்று தோழி தலைவிக்குச் சொல்லும் போது கூற்று நிகழும்.

18. கூறிய வாயில் கொள்ளாக் காலத்திற் கூறுதல் : தோழி இவ்வாறு கூறியதனை மனம் கொள்ளாத காலத்தில் கூறுதல்.

'கைப்பட்டுக் கலங்கல் முதல் 'கூறிய வாயில் கொள்ளாக் காலை' ஈறாகச் சொல்லப்பட்ட 12 வகையிலும் தலைமகள் தோழிக்கு உரைக்கும் இடங்கள்.

19. மனைப்பட்டுக் கலங்கி சிதைந்த வழித் தோழிக்கு நினைத்தல் சான்ற அருமறை உயிர்த்தல் : புறத்து விளையாடுதல் ஒழிந்து மனைப்பட்டுக் கலங்கிச் சிதைந்த வழித் தோழிக்குச் சூழ்தலமைந்த அரிய மறைபொருளைச் சொல்லுதல்.

மேற்சொல்லப்பட்ட 13ம் இயற்கைப் புணர்ச்சி புணர்ந்தபின் நிகழ்வன. இயற்கைப் புணர்ச்சியின்றி உள்ளப் புணர்ச்சியால் உரிமை பூண்டிருந்தாலும் இவ்வாறு கூறப்பெறும்.

20. உயிராக் காலத்து உயிர்த்தலும் உயிர்செல : இவ்வாறு கூறாக் காலத்து உயிர் செல்லுமாறு சொல்லுதல்.

21. வேற்ற விரைவு வரின் அது மாற்றுதல் : தன்னைப் பிறன் ஒருவன் மணந்து கொள்ள வந்தால், அதனை மாற்றுதல்

எ.டு

*"அன்னை வாழி வேண்டன்னை புன்னை*
*பொன்நிறம் விரியும் பூக்கெழு துறைவனை*
*என்னை என்றும் யாமே இவ்வூர்*
*பிறிதொன் றாகக் கூறும்*
*ஆங்கும் ஆக்குமோ வாழிய பாலே" (ஐங் : 110)*

22. நெறிப்படு நாட்டத்து நிகழ்ந்தவை மறைத்தல் : தலைவனோடு கூட்டம் நிகழ்த்தியமையால் ஏற்பட்ட உடல் வேறுபாட்டினைத் தோழி அறியாமலும் செவிலி அறியாமலும் தலைவி மறைத்தல்.

23. பொறியின் யாத்த புணர்ச்சி நோக்கி ஒருமைக் கேண்மையின் உறுகுறை தெளிந்தோள் அருமைசான்ற நாலிரண்டு வகையிற் பெருமை சான்ற இயல்பில் நிற்றல் : பொறி என்பது ஊழ். ஊழால் கட்டப்பட்டட புணர்ச்சியைக் குறித்து ஒற்றுமைப்பட்ட நண்பினானே தலைவன் வரைவதற்குக் குறையுறு கின்றதனைத் தெளிந்த தலைவி செய்தற்கு அருமையமைந்த எண்வகையினாற் பெருமை இயைந்த இயல்பினளாகி நிற்றல்.

இங்கு சொல்லப்பட்ட எண்வகையாவன : மெய்ப்பாட்டியலுள் மனன் அழிவில்லாத கூட்டம் என ஓதுகின்ற

*"முட்டுவயிற் கழறல் முனிவுமெய்ந் நிறுத்தல்*
*அச்சத்தின் அகறல் அவன்புணர்வு மறுத்தல்*
*தூதுமுனி வின்மை துஞ்சிச் சேர்தல்*
*காதல் கைம்மிகல் கட்டுரை யின்மை" (மெய்ப்பாட் : 23)*

என்பனவாம்.

28. மனன் அழிவில்லாத கூட்டம் எத்தனை?

முட்டுவயிற் கழறல் : களவொழுக்கம் நிகழ்கின்ற போது நிலவு வெளிப்பாடு, காவலர் கடுகுதல், தாய்துஞ்சாமை, ஊர் துஞ்சாமை, தலைவன் குறி வருவதற்கு இடையீடுபடுதல், இவ்வழிக் களவொழுக்கத்தினால் பயனின்மை கூறுதல். அவ்வாறு கூறி, இனி இவ்வொழுக்கம் அமையும் என வரைந்து எய்துதல் காறும் புணர்ச்சியை விரும்பாது கலக்கமின்றித் தெளிவுடையளாவள்.

29.அச்சத்தின் அகறல் என்றால் என்ன?

முனிவு மெய் நிறுத்தல் : இவ்வொழுக்கத்தினால் வந்த துன்பத்தைப் பிறர்க்குப் புலனாகாமை மெய்யின்கண்ணே நிறுத்தல். அப்போதும் வரைந்து எய்தல் சான்றமையும் புணர்ச்சி எனக் குறிவழிச் செல்லாளாம்.

எ.டு

*"நோமென் நெஞ்சே நோமென் நெஞ்சே*
*இமைதீய்ப் பன்ன கண்ணீர் தாங்கி*
*அமைதற் கமைந்தநங் காதலர்*
*அமைவிலர் ஆகுதல் நோமென் நெஞ்சே" (குறுந் :4)*

அச்சத்தின் அகறல் : இதனைப் பிறர் அறிவர் என்ற அச்சத்தினால் குறிவழிச் செல்லாள்.

அவன் புணர்வு மறுத்தல் : தலைவன் புணர்ச்சி இல்லாத போதும் குறிவழிச் செல்லாள்.

தூது முனிவின்மை : அவ்வழித் தலைவன் மாட்டுத் தூதாகி அருஞ்சொற்கேட்டலை வெறுக்காமை.

துஞ்சிச் சேர்தல் : உறங்காமையின்றி உறக்கம் நிகழ்தல்

காதல் கைம்மிகல் : இவ்வாறு செய்யும் காதல் அன்பின்மையன்றி அன்பு மிகுதல்.

*“கன்றும் உண்ணாது கலத்தினும் படாது*
*நல்லான் தீம்பால் நிலத்துக் கா அங்கு*
*..........................*
*திதலை அல்குல் என் மாமைக் கவினே”* (குறுந் : 27)

கட்டுரை இன்மை : கூற்று நிகழாமை இங்கு சொல்லப்பட்ட எட்டும் கலக்கமில்லாத நிலைமையாதலின் பெருமை சான்ற இயல்பு எனப்பட்டன.

24. பொய் தலையடுத்த மடலேறுதல் : பொய்மையால் மடலேறுவேன் எனத் தலைவன் கூறிய வழியும் தலைவி வெறுத்த உள்ளத் தாளாய்க் குறிவழிச் செல்லாள்.

25. கையறு தோழி கண்ணீர் துடைத்தல் : தோழி கையினால் தலைவியின் கண்ணீர் துடைத்த வழி தலைவி குறிவழிச் செல்லாள்.

26. வெறியாட்டிடத்து வெருவுதல் : தலைவி வேறுபாடு எதனால் ஏற்பட்டது எனச் செவிலி வெறியாட்டுவிக்கும் அச்சத்தினாலும் தலைவி குறிவழிச் செல்லாள்.

27. குறியின் ஒப்புமை மருளல் : தலைவன் செய்த குறியைப் பற்றிச் சென்று அஃது அவ்வழி மருளுதற்கண்ணும், தலைவி குறிவழிச் செல்லாள், (அஃதாவன புள் எழுப்புதல், போல்வன அதனால் புள் அரவம் கேட்டு மருளுதல்)

28. வரைவுதலை வருதல் : தலைவன் வரைய வருகின்ற நாள் அணித்தாக வரினும் குறிவழிச் செல்லாள்

29. களவு அறிவுறுதல் : களவொழுக்கத்தினைப் பிறர் அறிந்த போதும் குறிவழிச் செல்லாள்.

30. தமர்தற்காத்த காரணமருங்கிற் கூறுதல் : தன்னை ஐயமுற்றுத் தமர் காத்த காரணப் பக்கத்திற் கூறுதல்.

31. தன்குறி தள்ளிய தெருளாக் காலை வந்தவன் பெயர்ந்த வறுங்களம் நோக்கித் தன் பிழைப்பாகத் தழீஇத் தேறல் : தன்குறி தப்பித் தலைவன் எதிர்படுதல் இல்லாக் காலத்து, வந்த அவன் பெயர்ந்த வறுங்களம் நோக்கித் தன்குறையாக உடம்பட்டுத் தேறுவாள் தலைவி.

இனி வழுவின்றி நிலைஇய இயற்படு பொருள்’ முதல் ‘ஏமம் சான்ற உவகையிறாகச் சொல்லப்பட்ட 5 இடங்களில் தன்னிடத்து உரிமையும் அவனிடத்துப் பரத்தமையும் அவை போல்வனவும் நிகழப்பெறும் என்ப ஆசிரியர்.

32. வழுவின்று நிலைஇய இயற்படுபொருள் : தோழி தலைவனைக் குற்றம் கூறியபோது தலைவியானவள் அவன் குற்றமிலன் என இயற்பட மொழிவாள். அப்போது தன்வயின் உரிமை தோன்றவும் அவன் வயின் பரத்தமை தோன்றவும் கூறுவாள் தலைவி.

33. பொழுதும் ஆறும் புரைவதன்மையன் அழிவுதலைவந்த சிந்தை: தலைவன் வருங்காலமும் இடனும் குற்றமுள ஆதலின், ஆண்டு அழிவு

வந்த சிந்தைக் கண்ணும், தலைமகள் தன்வயின் உரிமையும் அவன்வயின் பரத்தமையும் தோன்றக் கூறவாள்.

34. காமம் சிறத்தல் : தலைமகனிடத்து வேட்கை மிகுதல். அப்போது தன்வயின் உரிமையும் அவன்வயின் பரத்தமையும் தோன்ற உரைப்பாள் தலைவி.

35. அவன் அளி சிறத்தல் : தலைவனின் தலையளி மிகுதல். அப்போது தன்வயின் உரிமையும், அவன்வயின் பரத்தமையும் தோன்றக் கூறுவாள் தலைவி.

36. ஏமம் சான்ற உவகை : ஏமம் (பாதுகாவல்) பொருந்திய மகிழ்ச்சி வந்துழித் தன்வயின் உரிமையும் அவன்வயிற் பரத்தைமையும் தோன்றக் கூறுவாள் தலைவி.

எ.டு

*"பூங்குன்ற நாடன் புணர்ந்தவந் நாள் போலா*
*ஈங்கு நெகிழ்த்த வளை"* (திணைமொழி : 3)

இம்மட்டுமன்றித் தலைவி தானே கூறும் காலங்களும் உண்டு. அவை.

1. வரைவிடை வைத்த காலத்து வருந்துதல் : தலைவன் இயற்கைப் புணர்ச்சி புணர்ந்து நீங்குகின்றான். 'இன்னநாள் வரைந்து கொள்வன்' எனக்கூறித் தோழியற் கூட்டத்திற்கு முயலாது தணப்பான். தோழி ஐயப்படுவளே என்பதால், அதனை மறைத்தொழுகும் தலைவி, அவன் வரும் வரை ஆற்றாமல் வருத்தமுறுவாள்.

2. பவரையா நாளிடை வந்தோன் முட்டுதல் : வரையாது ஒழுகும் காலத்து மறைந்து களவொழுக்கம் நிகழ்த்தும் தலைவனானவன் செவிலி முதலானோரை எதிர்ப்படுவாள்.

3. உரை எனத் தோழிக்கு உரைத்தல் : இவ்வொழுக்கத்தினை நின் தோழிக்கு உரை எனத் தலைவன் கூறியவழி. தலைவி தானே கூறும் காலமும் உள.

30.உயிரைவிடச் சிறந்தது எது?

இவற்றோடு இன்னும் சிலவிடத்துத் தலைவி தானே கூறுதல் உண்டு.

*"உயிரினும் சிறந்தன்று நாணே நாணினும்*
*செயிர்தீர் காட்சிக் கற்புச்சிறந் தன்றெனத்*
*தொல்லோர் கிளவி புல்லிய நெஞ்சமொடு*
*காமக் கிழவன் உள்வழிப் படினும்*
*தாவில் நன்மொழி கிளவி சிறப்பினும்*
*ஆவகை பிறவும் தோன்றுமன் பொருளே"* (23)

31. உயிர், நாணைவிடச் சிறந்தது எது?

உயிரைக் காட்டிலும் நாணம் சிறந்தது. அந்நாணைவிடக் குற்றம் தீர்ந்த காட்சியினை உடைய கற்புச் சிறந்தது என முன்னோர் கூற்றை உட்கொண்டு தலைவன் இருக்குமிடத்தே தலைவி தானே சென்றாலும், வருத்தமில்லாச் சொல்லைத் தலைவி சொல்லுதலும் இவை போன்ற பிறவற்றைச் சொல்லுதலும் ஆகிய இவை அகப்பொருளாய் உயர்ந்து

தோன்றும்.

### 3.8.1 தலைவிக்குரிய இயல்பு

தலைவியிடத்தே, தோழிக்கும் செவிலிக்கும் உண்டாகிய அன்பு மிகுதியினால், பல நூறாகிய வகையானும் தலைவியின் வேறுபாட்டை அவர்கள் ஆராய்தலினால், தனது துணையைச் சுட்டிக் கூறும் சொல் தலைவியதாகும். அச்சொல் அவ்விருவராலும் முடியும் காரியமாகையினால் என்றவாறு, அஃதாவது தோழியும் செவிலியும் பலபடியாகத் தலைவியின் வேறுபாட்டை ஆராயும்போது தலைவி, அவர்களிடம் 'இத்தலைவனையே மணந்து கொள்கிறேன்' என்று கூறுவாள் என்பதாம். (33)

*"தன்னுறு வேட்கை கிழவன்முற் கிளத்தல்*
*எண்ணுங் காலை கிழத்திக் கில்லை*
*பிறநீர் மாக்களின் அறிய ஆயிடைப்*
*பெய்நீர் போலும் உணர்விற் றென்ப"* (28)

தலைவி தனது வேட்கையைக் கிழவன் முன்பு சொல்லுதல் நினைக்கருங் காலத்துக் கிழத்திக்கு இல்லை. அங்ஙனம் சொல்லாதவிடத்தும் புதுக்கலத்தின்கண் பெய்த நீர்போலப் புறம் பொசிந்து காட்டும் உணர்வினையும் உடைத்து அவ்வேட்கை.

பாங்கன் நிமித்தமாகவும் தோழி நிமித்தமாகவும் கூடுதலேயன்றித் தாமே தூதுவராகிய கூட்டங்களும் நிகழப்பெறும். அது சிறப்புடைத்தாதலால் (29)

இவ்வாறாக இக்களவியலில் பல்வேறான நிலைகளில் தலைவியின் இயல்பு, அவளின் கூற்று முறைகள் குறித்து விளக்கியுள்ளார் தொல்காப்பியர்.

### 3.9 தோழி

தலைவன், தலைவியரின் காதல் வாழ்க்கையில் பெரும் பங்கெடுத்துத் துணை புரிபவள் தோழி. இவள் தலைவியுடன் ஒன்றிய நெஞ்சுடையவள். ஆதலின் தலைவியின் செயல்கள் யாவற்றையும் நன்கறிவாள். தன்னலம் சிறிதும் இல்லாது தலைவன் தலைவியரது நலத்தை மட்டிலும் கருதிப் பலவகை இடுக்கண்களுக்கிடையிலும் திறமையாகச் செயலாற்றும் திறனுடையவள். தலைவனைக் கண்டவுடன் மயங்கிவிடும் தலைவி போலாது பலநாளும் தலைவனுடைய குணங்களை ஆராய்ந்து தேர்ந்து முடிவில் தலைவியிடம் அவனைக் கூட்டுவிப்பாள். ஆக அகவாழ்வில் அனுபவமிக்க உலகறிவு பெற்றவளாகத் திகழ்பவள் தோழியேயாவாள்.

*"தோழி தானே செவிலி மகளே"* 35

32. 'தோழி தானே ______ மகளே'

தலைவிக்குத் தோழிகள் பலர் இருப்பினும் உரிமை உடைய தோழியாக இருப்பவள் செவிலியின் மகளே ஆவாள்.

*"சூழ்தலும் உசாத்துணை நிலைமையிற் பொலிமே"* (36)

தலைவியை ஆராய்தலும், தலைவிக்கு உறுதுணையாக இருத்தலால்

சிறப்புறுவாள்.

இயற்கைப் புணர்ச்சியாவது தோழியின் முடிதலும் ஓரிடத்து உண்டு. 31

33.தலைவிக்கு உற்ற துணையாக இருப்பவர் யார்?

### 3.9.1 தோழியின் மதி நுட்பம்

தலைவன் புணர்ச்சியுண்மையினைத் தோழி அறியுந்திறன் சிறப்பிற்குரியதாகும்.

*"குறையுற உணர்தல் முன்னுற உணர்தல்*
*இருவரும் உள்வழி அவன்வர வுணர்தலென*
*மதியிடம் படுதல் ஒருமூ வகைத்தே"* (37)

தலைவன், தலைவியும் தோழியும் சேர்ந்திருக்கும் இடத்தில் தன் குறையை எடுத்துக் கூற அதன் வழியாகத் தான் உணர்தல்.

குறையுறா வழி தலைவியின் குறிப்பு கண்டு உணர்தல்.

தானும் தலைவியும் கூடியிருந்தவிடத்துத் தலைவன் வந்தமை கண்டு உணர்தல் என மூன்று வகையினால் தோழி இயற்கைப்புணர்ச்சி நடந்தமையினை அறிந்து கொள்ளும் அறிவுடையவளாவாள் தோழி.

மேற்கூறப்பட்ட கூறுபாட்டால் தலைவன் தலைவி ஆகிய அவ்விரவர் மாட்டும் அன்புடைமை உணர்ந்தபின் அல்லது வழிபாட்டு நிலைமையால் கூட்டத்திற்கு முயலப்பெறாள் தோழி என்பர். (38)

தலைவன் தலைவியைக் கூடுதற்கு முயலும் காலத்து, அவனது நினைவின் கண் படும் திறன் ஆராய்ந்து, தலைவனிடம் கூட்டுதலும் தோழியிடத்து உண்டான செயல்திறமாகும். (39)

மேற்சுட்டியன அனைத்தும் தோழிக்குரிய மரபினை உணர்த்தின.

### 3.9.2 தோழி கூற்று

களவொழுக்கத்தின்கண் தோழி 32 இடங்களில் கூற்று நிகழ்த்துகின்றாள்.

நாற்றம் : பூவினாலும் சாந்தினாலும் தலைவன் மாட்டுளதாகிய கலவியால் தலைவியின் மேல் ஏற்படுகின்ற புதுவித மணம்.,

34. களவில் தோழி கூற்று எத்தனை இடங்களில் வருகின்றன?

தோற்றம் : புணர்ச்சியினால் தலைவியின் உடலில் ஏற்படுகின்ற மாற்றம்.

ஒழுக்கம் : தோழியர் கூட்டத்தோடு வேண்டியவாறு ஒழுகுதல் அன்றி பெண்தன்மைக்கு ஏற்பத் தன்னைப் பேணி ஒழுகுதல்.

உண்டி : உண்ணும் உணவின் அளவைக் குறைத்தல்

செய்வினை மறைத்தல் : பூக்கொய்தலும் புனலாடலும் போலும் வினைகளைத் தோழியை மறைத்துத் தனித்து நிகழ்த்ததல். அல்லது தலைவன் செய்த புணர்ச்சியாகிய செயலினைப் புலப்படவிடாது தோழியை மறைத்தல்.

செலவு : பல திசைகளிலும் சென்று விளையாடிய தலைவி இப்போது ஒரு திசையை நோக்கியே செல்லுதல்.

பயில்வு : ஓரிடத்திலே பயில்தல்

புணர்ச்சி எதிர்பாடு : புணர்வதற்கு முந்துற்ற காலம்

உள்ளுறுத்தல் : உட்கோடல்

பல்வேறு கவர் பொருள் நாட்டம் : மெய்யானும் பொய்யானும் நெறிமுறை பிழையாதவாறு பல்வேறு வகைப்பட்ட இருபொருள் பயக்கும் சொற்களாலே ஆராய்தல்.

குறையுறற்கு எதிரிய கிழவனை மறையுறல் : தோழியிடம் தன் குறைகளைச் சொல்லவேண்டி எதிர்பட்ட தலைவனைத் தெரியாதாள் போல மாற்ற முயல்தல்.

பெருமையிற் பெயர்த்தல் : தலைவனது பெருமையினைக் கூறி அவன் குறிப்பினை நீக்கல்.

உலகு உரைத்து ஒழித்தல் : உலகத்தார் மகள் கொள்ளும் முறைப்படி நீயும் கொள்வாயாக என்று கூறி நீக்கல்

அருமையின் அகற்சி : தலைவி கிடைப்பதற்கு அரியவள் எனக்கூறி அகற்றுதல்

அவள் அறிவுறுத்துப் பின்வா என்றல் : பின்னும் அவன் செல்லாது இருந்தால் நின்னால் காதலிக்கப்பட்ட என் தலைவியிடம் சென்று அறிவித்துப் பின்னர் என்னிடம் வா எனல்.

பேதைமை ஊட்டல் : நேரினும் அவள் அதனை அறியும் அறிவுடையவள் அல்லல் எனல்.

முன்னுறு புணர்ச்சி முறைநிறுத்துரைத்தல் : முன்னுறு புணர்ச்சியை முறையாக நிறுத்துக் கூறுதல்.

அஞ்சி அச்சுறுத்தல் : தான் அச்சமுற்று, அஞ்சின தன்மையைத் தலைவனுக்கு அறிவித்தல். அது தாய் வருவாள் என்றலும் தமையன்மார் வருவர் என்றலும் காவலர் வருவர் என்றலும்.

உரைத்துழிக் கூட்டம் : நின்னால் காதலிக்கப்பட்டாள் யாவள் எனக் கேட்டபோது இத்தன்மைத்தாள் எனச் சொல்லக் கேட்ட தோழி அவளும் நின் தன்மையாள் என இவனோடு கூட்டியுரைத்தல்.

இவ்வெட்டுக் கூற்றும் குறையுற உணர்தலின் பகுதி என்பர்.

வந்த கிழவனை மாயம் செப்பிப் பொறுத்துக் காரணம் குறித்தல் : யானை போந்ததோ மான் போந்ததோ என்று மாயம் சொல்லி வந்த தலைவனைத் தலைவி பொறுத்த காரணம் குறித்த காலையும், தோழி கூற்று நிகழும்.

புணர்ந்தபின் அவன்வயின் வணங்கல் : முன்னுற உணர்தல், குறையுற உணர்தல் இருவரும் உள்வழி அவன்வர உணர்தல் என்ற மூவகையாலும்

புணர்ச்சி உண்மை பொருந்திய பின், தலைவனிடம் பணிந்த நிற்கும் போதும் தோழிக்குக் கூற்று நிகழும்.

குறைந்து அவட்படரினும் : தலைவன் புணர்ச்சி உண்மையறிந்து பணிந்து நின்ற தோழி. தானும் மனம் இரங்கித் தலைவியிடத்தே சென்று தலைவனது குறையைக் கூறுதல்.

மறைந்து அவள் அருகத் தன்னொடும் அவளொடும் முன்னம் முன்தளை இப் பின்னிலை நிகழும் பல்வேறு மருங்கினும் : நாண மிகுதியால் தலைவி, தன் வேட்கையை ஒளித்துத் தோழி கூறுவதற்கு உடன்படாது நிற்கவே, தலைவன், தலைவியர் பால் முன் நிகழ்ந்த இயற்கைப் புணர்ச்சி இடந்தலைப்பாடு, பாங்கற்கூட்டம் ஆகிய மூன்றனையும் அல்லது மனத்தினாலும் மொழியினாலும், உடம்பினாலும் ஆகிய இம்மூன்றினாலும் தான் அறிந்தமை கூற்றினால் அன்றிக் குறிப்பினால் உணர்த்தித் தலைவியை இரந்து பின் நிற்றல் எனப்படும் பலவகையிடத்தும் தோழி கூற்று நிகழும்.

நன்னயம் பெற்றுழி நயம்புரி இடம் : தலைவி குறை நயந்தமை பெற்றவழி அத்தலைவி நயம் பொருந்தும் இடத்தும் தோழி கூற்று நிகழும்,

எண்ணரும் பன்னகை கண்ணிய வகை : எண்ணுதற்கு அரிய பல நகையாட்டுக்களைத் தலைவனிடம் குறித்த வகையும் கூற்று நிகழும்.

எ.டு

*"நிறை அரியர் மன்அளியர் என்னாது காமம்*
*மறை இறந்து மன்று படும்"* (குறள் : 1138)

புணர்ச்சி வேண்டல் : மேற்சொல்லப்பட்ட பலவற்றாலும் தலைவனுக்கு அறிவுறுத்தியவழிப் பின்னும் புணர்ச்சி வேண்டினும் அப்போதும் தோழி கூற்று நிகழும்,

வேண்டாப் பிரிவு : புணர்ச்சி வேண்டாது பிரிவு வேண்டினும் தோழி கூற்று நிகழும்.

வேளாண் பெருநெறி வேண்டுதல் : வேளாண்மையாவது உபகாரம், பெருநெறியாவது உபகாரமாகிய பெருநெறி. அதனைத் தோழி தலைவனை வேண்டிக் கோடற் கண்ணும் கூற்று நிகழும்.

புணர்ந்துழி உணர்ந்த அறிமடச் சிறப்பு : தலைவனோடு தலைவி புணர்ந்த வழி ஆண்டுப் பொருந்திய அறிவு மடம்பட்ட சிறப்பின்கண் அதாவது அல்லகுறிப்படுதலின்கண் கூற்று நிகழும்.

ஓம்படைக் கிளவிப் பாங்கு : தலைவனிடம் தலைவியைப் பாதுகாத்துக் கொள் எனும் போதும் கூற்று நிகழும்.

செங்கடுமொழியால் சிதைவுடைத்தாயினும், என்பு நெகப் பிரிந்தோள் வழிச் சென்று கடைஇ அன்பு தலையடுத்த வன்புறை : செவ்விய கடிய சொல்லினாலே, தலைவன் அன்பு சிதைவுடைத்தாயினும், என்பு உருகுமாறு பிரியப்பட்டவளிடத்துச் சென்று தலைவன் அன்புடைமையின் அளிப்பன் என ஆற்றுவித்து வற்புறுத்தற்கண்ணும் தோழி கூற்று நிகழும் இதனை

இயற்பழித்தல் அதாவது இயல்பைப் பழித்துக் கூறுதல் என்பர்.

ஆற்றது தீமை அறிவுறு கலக்கம் : தலைவன் வருகின்ற வழியினது தீமையினால் ஏற்படும் கலக்கத்தில் கூற்று நிகழும்.

காப்பின் கடுமை கையற வருதல் : காத்தல் தொழிலால் உண்டாகும் கடுஞ் சொற்கள் களவொழுக்கத்தே எல்லையற வருமிடத்தும் கூற்று நிகழும்.

களனும் பொழுதும் வரைநிலை விலக்கிக் காதல் மிகுதி கூறல் : குறியிடமும் காலமும் தாங்கள் வரைந்த நிலைமையை விலக்கித் தலைவியின் காதல் மிகுதி கூறுமிடத்தும் தோழி கூற்று நிகழும்.

எ.டு

*"வேரல் வேலி வேர்க்கோட் பலவின்*
*சாரல் நாட செவ்வியை ஆகுமதி*
*யாரஃதறிந்திசி னோரே சாரல்*
*சிறுகோட்டுப் பெரும்பழந் தூங்கி யாங்கிவள்*
*உயிர்தவச் சிறிது காமமோ பெரிதே"* (குறுந் : 8)

நாடும் ஊரும் இல்லும் குடியும் பிறப்பும் சிறப்பும் இறப்ப நோக்கி அவ்வயின் தோன்றிய கிளவியொடு தொகைஇ அனைநிலை வகையான் வரைதல் வேண்டல் : தலைவனது நாடு, ஊர், இல், குடிப்பிறப்பு, இத்தன்மையாகிய சிறப்பு என அவற்றின் மிகுதிபடக் கூறி அத்தன்மைத்தாகிய நிலவகையினால் வரைதல் வேண்டுதல்.

ஐயச் செய்கை தாய்க்கு எதிர்மறுத்துப் பொய் என மாற்றி மெய்வழிக் கொடுத்தல் : தலைவிக்குப் பிறரோடு கூட்டம் உண்டு எனச் செவிலித்தாய் ஐயுற்ற வழி, அதனை மறுத்துத் தலைவி செய்த செய்கையைப் பொய் நீக்கிப் பிறிதோர் ஆற்றான் மெய்வழிக்கட்படுத்தல்.

அவள் விலங்குறினும் களம் பெறக் காட்டினும், பிறன் வரைவு அயினும் அவன் வரைவு மறுப்பினும் முன்னிலை அறனெனப் படுதல் என்றிருவகைப் புரைதீர் கிளவி தாயிடைப் புகுதல் : தலைவி காப்பு மிகுதியாலும் காதல் மிகுதியாலும் நொதுமலர் வரைவினாலும் தமர் வரைவு மறுத்ததினாலும் வேறுபட்ட வழி இஃது எதனால் ஆயிற்று? எனச் செவிலி அறிவுரை வினாவிக் குறிபார்க்கும் இடத்திலும் வெறியாட்டிடத்திலும் பிறர் வரைவு வந்துழியும் அவர் வரைவு மறுத்த வழியும் முன்னிலை வகையான் ஆதல். அறத்தொடு நிலை வகையான் ஆதல் இவ்விரு வகையானும் தலைவனுக்கும் தலைவிக்கும் தனக்கும் குலத்திற்கும் குற்றம் தீர்ந்த கிளவியைத் தாய்மாட்டு நிரம்பச் சொல்லாது தோற்றுவாய் செய்தல்.

அறத்தொடு நிலைப்பகுதி ஏழு வகைப்படும் : அவையாவன :

*"எளித்தல் ஏத்தல் வேட்கை யுரைத்தல்*
*கூறுதல் உசாவுதல் ஏதீடு தலைப்பாட*
*உண்மை செப்புங் கிளவியொடு தொகைஇ*

*அவ்வெழு வகைய என்மனார் புலவர் (பொருளியல் : 12)*

அ) எளித்தல் : தலைவன் நம்மிடத்து எளியன் என்று கூறுதல். மகளுடைத்தாயர், தம்வழி ஒழுகுவார்க்கு மகட்கொடை வேண்டுவார் ஆதலால் எளியன் என்பது கூறி அறத்தொடு நிற்கப்பெறும் என்பதாம்.

35. அறத்தொடு நிலைப்பகுதி எத்தனை வகைப்படும்?

ஆ) ஏத்தல் : தலைவனை உயர்த்துக் கூறுதல் அது மகளுடைத் தாயர் தலைவன் உயர்ந்தான் என்ற வழி மனமகிழ்வார் ஆதலின் அவ்வாறு கூறப்பட்டது. உயர்த்திக் கூறி அறத்தொடு நிற்கப்பெறும்.

இ) வேட்கை உரைத்தல் : தலைவனிடத்துத் தலைவி வேட்கையும், தலைவியிடத்துத் தலைவன் வேட்கையும் கூறுதல். வேட்கைகூறி அறத்தொடு நிற்கும் என்பதாம்.

ஈ) கூறுதல் : தலைவியைத் தலைவனுக்குக் கொடுக்க வேண்டும் என்று வெளிப்படக் கூறுதல்.

உ) உசாவுதல் : வெறியாட்டும் கழங்கும் இட்டுரைத்தபோது வேலனோடோ பிறரோடோ தோழி உசாவுதல்.

ஊ) ஏதீடு தலைப்பாடு : யாதானும் ஓர் ஏதுவை இடையிட்டுக் கொண்டு தலைப்பட்டமை கூறுதல். களிற்றுடை உதவினான் என்றும் தழையும் கண்ணியும் தந்தான் என்றும் வருவது.

எ) உண்மை செப்பும் கிளவி : உள்ளதை உள்ளவாறு கூறுதல்.

வரைவுடன் பட்டோர்க் கடாவல் : தமர் வரைவு உடன்பட்டமையைத் தலைவனுக்கு உரைத்தல்.

ஆங்கதன் தன்மையின் வன்புறை : அவ்வாறு வரைவுடன்பட்ட தன்மையினால் தலைவியை வற்புறுத்தற்கண்ணும் தோழிக்குக் கூற்று நிகழும்.

இங்ஙனம் கூறப்பட்ட 32 வகைப்பட்ட பொருண்மையும் தோழி கூற்றாகும். (24)

### 3.10 செவிலி கூற்று முதலாயின

தலைவியை ஈன்றவள் நற்றாய். இருப்பினும் அவளைப் பலவகையிலும் வளர்த்து ஆளாக்குபவள் 'செவிலித்தாய்' ஆவாள்.

*"ஆய்பெருஞ் சிறப்பின் அருமறை கிளத்தலின்*
*தாயெனப் படுவாள் செவிலி யாகும்"* (34)

36.தாயெனப் படுவாள் ______ ஆகும்.

நல்ல பெரிய சிறப்பினை உடைய அறிதற்கரிய மறைப்பொருள் யாவற்றையும் கூறும் கட்டுப்பாட்டுடையள் ஆதலின் தாய் எனப்படுபவள் செவிலியாகும்.

தலைமகளை அறியா அறிவினை உடையவள் என செவிலியும் நற்றாயும் ஆகிய இருவரும் எத்துணையும் மயக்கமில்லாதவள் இப்போது மயங்கினாளே என்று ஐயுற்று இஃது எதனால் ஆயிற்று? என அறிவுரை

வினவுவர். அவர்களோ, இவ்வாறு நேர்ந்தது என உண்மை கூறுதல தகுதியில்லை. அதனை உட்கொண்டு உண்மை உணர்வர். (27)

களவின்கண் செவிலிக்குரிய கூற்றுகள் 13 இடத்தில் நடைபெறும்

37. செவிலி கூற்று எத்தனை இடத்தில் நடைபெறும்.

1. களவு அலராதல் : தலைவன், தலைவி ஆகியோரது களவு ஒழுக்கம் புறத்தார்க்குப் புலனாகி அவர் தூற்றப்பட்ட இடத்துச் செவிலி தோழியை வினவுதல்.

2. காமம் மேற்படுத்தல் : தலைவியிடத்து உண்டாகிய காம வேட்கை அளவுகடந்த போதும் தோழியை வினவுதல்.

3. அளவு மிகத் தோற்றம் : பெதும்பைப் பருவத்தினளாகிய தலைவி, புணர்ச்சியால் கவர்ந்து வீங்குகின்ற முலையும், புதிதுற்ற கவினும் கண்ட போதும் தோழியை வினவுவாள்.

4. தலைப்பெய்து காணுதல் : இவருக்கும் கூட்டம் நிகழ்ந்தால் தலைவனொடு தலைவியை ஒன்றாகக் கண்டபோது செவிலிக்குக் கூற்று நிகழும்.

5. கட்டு வைப்பித்தல் : கட்டுவைப்பித்த போது அக்கட்டுவிச்சியர் கூறும் சொற்கேட்டுத் தோழியை வினவுதல்

6. கழங்கு வைத்தல் : கழங்க வைத்தபோது, அவர் சொற்கேட்டுக் கூறும் தோழியை வினவுதல்.

7. வெறியென இருவரும் ஒட்டிய திறத்தாற் செய்தி : செவிலியும் நற்றாயும் பொருந்திய பக்கத்துக் கண்டு வெறியாடுவோம் என்ற போது, தலைவி செயல்அழிந்து தோழியை வினவுதல்.

8. ஆடிய சென்றுழி அழிவுதலை வருதல் : அங்ஙனம் வெறியாடச் சென்றவழி அதற்குத் தலைவி வருந்துமிடத்துச் செவிலி கூறுவாள்.

9. காதல் கைம்மிகக் கனவின் அரற்றல் : தலைவி காதல் மிகுதியால் தலைவனை நினைத்து கனவின்கண் அரற்றுகின்ற போதும் செவிலிக்குக் கூற்று நிகழும்.

இவை அனைத்தும் தோழியை வினாதல் பகுதியாகும்.

10. தெய்வம் வாழ்த்தல் : இவ்வாறு நேர்ந்தது எனத் தோழ உரைத்தபோது இதனை நற்றாய்க்குத் தந்தைக்கும் கூறலாம் என எண்ணியும அங்ஙனம் கூற ஆற்றாதாளாய்த் தெய்வத்தை வேண்டிக் கொள்வாள்.

11. போக்குடன் அறிந்தபின் தோழியொடு கெழீஇக் கற்பின் ஆக்கத்து நிற்றல் : தலைவி தன் தலைவனுடன் உடன் போக்கிற் போனதை அறிந்தபோது தானும் தோழியோடு பொருந்தி, இல்லத்தின்கண் நிறுத்தற கண்ணும் செவிலிக்குக் கூற்று நிகழும்.

12. பிரிவின் எச்சத்து மகள் நெஞ்சு வலித்தல் : தலைவன் வரையாது பிரிந்த வழித் தனியே தங்கியிருந்த தலைமகள், அலர் ஆகுதலுமின்றி வேறுபாடும் இன்றி ஒரு மனைப்பட்டிருந்தபோது அவளது உள்ளக்கருத்தை

அறிந்த போதும் செவிலிக்குக் கூற்று நிகழும்.

13. இருபாற் குடிப்பொருள் இயல்பு : தலைவனது குடிப்பெருமை தன் குடிப்பெருமையோடு ஒக்கும் என ஆராய்தற்கண்ணும் செவிலி கூற்று நிகழும்.

*"தாய்க்கும் வரையார் உணர்விடம் படினே"* (26)

செவிலியுணர்வோடு உடம்பட்ட உள்ளத்தளாயின் நற்றாய்க்கும் மேற்சொல்லப்பட்டவை எல்லாம் வரையப்படா.

### 3.10.1 களவு வெளிப்படுதல்

தோழியின் வழியாகத் தலைவியின் காதல் வாழ்வை செவிலி அறிந்து கொள்வாள்

*"தாய் அறிவுறுதல் செவிலியோ டொக்கும்"* (48)

38. தாய் அறிவுறுதல்
______
ஒக்கும்.

நற்றாய் களவொழுக்கம் அறிவுறுத்தல் செவிலியோடு ஒக்கும். செவிலி கவலுந்துணைக் கவலுதல் அல்லது தந்தையையும் தன்னையன்மாரையும் போல வெகுடல் இவள் என்றவாறு.

*"தந்தையுந் தன்னையும் முன்னத்தின் உணர்ப"* (47)

தந்தையும், தன்னையரும் குறிப்பின் உணர்வர்.

### 3.10.2 வரைதல்

வரைதல் என்றால் திருமணம் செய்து கொள்வதாகும்.

*"வெளிப்பட வரைதல் படாமை வரைதலென்*
*றாயிரண் டென்ப வரைத லாறே"* (50)

39. வரைதல் எத்தனை வகைப்படும்?

வரைதல் 2 வகைப்படும். 1. களவு வெளிப்பட்டபின் வரைதல் 2. களவு வெளிப்படாமை வரைதல் என அவ் இரண்டென்று சொல்லுவர் ஆன்றோர்.

களவு வெளிப்படுதல் கற்பினோடோப்பினும் மேற்சொல்லப்பட்ட மூன்று பொருளாக வரையாது பிரிதல் கிழவோற்கு இல்லை.

### 3.11 தொகுப்புரை

கொடுப்பாரும் கொள்வாரும் இன்றி ஒத்த கிழவனும் கிழத்தியும் தாமாகவே ஏறப்பட்டுக் கூடும் களவு வாழ்வில் நிகழ்வன இப்பகுதியில் விளக்கப்பட்டன.

தலைவன், தலைவி, தோழி, செவிலி போன்றோரின் கூற்று முறைகள்.

தோழியும் செவிலியும் தலைவன் தலைவியரின் வாழ்விற்கு துணைபுரியும் இயல்புகள் போன்றவனவும் வரைதல் குறித்தனவும் மாணவர்கள் அறியும் வண்ணம் விளக்கப்பட்டன.

## வினாவிற்கேற்ற விடைகள்

| | | | |
|---|---|---|---|
| 1,2,3 | - | 3.1 ஐப் பார்க்க | |
| 4,5,6,7 | - | 3.2 | ” |
| 8 | - | 3.2.1 | ” |
| 9,10 | - | 3.2.3 | ” |
| 11 | - | 3.3 | ” |
| 12 | - | 3.3.1 | ” |
| 13,14 | - | 3.5 | ” |
| 15,16,17 | - | 3.6 | ” |
| 18, 19, 20,21,22 | - | 3.6.1 | ” |
| 23,24,25,25,26 | - | 3.7 | ” |
| 27,28,29,30,30,31 | - | 3.8 | ” |
| 32,33 | | - 3.9 | ” |
| 34,35 | - | 3.9.2 | ” |
| 36,37 | - | 3.10 | ” |
| 38 | - | 3.10.1 | ” |
| 39 | - | 3.10.2 | ” |

## பக்க வினாக்கள்

1. களவு என்றால் என்ன? விளக்குக.
2. காட்சி, ஐயம், துணிவு குறித்து எழுதுக.
3. தலைமகன், தலைமகள் இயல்பு குறித்து விளக்குக.
4. 'சிறப்புடை மரபின் களவென மொழிப' - விளக்குக.
5. இயற்கைப் புணர்ச்சி என்றால் என்ன?
6. 'பாங்கர் நிமித்தம் பன்னிரண் டென்ப' - விளக்குக.
7. செவிலி கூற்று குறித்து எழுதுக.
8. களவு எங்ஙனம் வெளிப்படும்?
9. வரைதல் குறித்து விளக்கி எழுதுக.

## கட்டுரை வினாக்கள்

1. களவு வாழ்வின் தொடக்க நிகழ்வுகளை விளக்கிக் கட்டுரைக்க.
2. களவு வாழ்க்கையில் தோழியின் பங்கு குறித்துக் கட்டுரை வரைக.
3. தலைவியின் இயல்பும் கூற்றும் களவில் இடம்பெறுமாற்றை விளக்கிக் கட்டுரை எழுதுக.
4. களவின்கண் தலைமகன் கூற்று குறித்து எழுதுக.
5. களவு வாழ்வில் செவிலியின் கூற்றுக்கள் நிகழுமாற்றை விளக்குக.

# அலகு - 4

## கற்பியல்

### அறிமுகம்

கற்பியல் என்னும் இப்பகுதியின்கண் கற்பு - இலக்கணம், கற்பு வாழ்வில் தலைவன், தலைவி, தோழி, செவிலி, காமக்கிழத்தி போன்றோரின் கூற்றும் வாயில்கள் கூற்று மரபும், பிரிவும் அதற்கான கால வரையறைகளும் விளக்கப்படுகின்றன.

### நோக்கம்

மாணவர்கள் இப்பாடத்தினைக் கற்பதன் வழியாகத் தமிழ் இனத்தின் பெருமைசான்ற 'கற்பு' என்பது குறித்தும் இல்லறத்தின் தனித்தன்மை, சிறப்புகள் குறித்தும் அறிந்து கொள்வார்கள்.

## பாடம் - 4 கற்பியல்

## பொருளடக்கம்

4.1 கற்பு இலக்கணம்

4.2 தலைவன் கூற்று

4.2.1 தலைவனுக்கான பிற மரபுகள்

4.3 தலைவி கூற்று

4.3.1 தலைவிக்குரிய பிற மரபுகள்

4.4 தோழி கூற்று

4.4.1 தோழிக்குரிய பிற மரபுகள்

4.5 செவிலி கூற்று

4.6 காமக் கிழத்தியர் கூற்று

4.7 வாயில்கள் மரபும் கூற்றும்

4.8 பிரிவும் பிரிவிற்கான காலமும்

4.9 தலைமக்களுக்குரிய பொது மரபுகள்

4.10 தொகுப்புரை

## பாடம் - 4 கற்பியல்

அகவாழ்வின் இரு கண்களான களவு, கற்பு என்ற இரண்டனுள் களவியல் என்ற மூன்றாவது இயலின்கண் யாழோர் கூட்டமாகிய களவு மணம் குறித்து விளக்கப்பட்டது. அக்களவு கற்பாக மாறினால் மட்டுமே 'இல்லறம்' என்பது தலைவன், தலைவியைக் கடைத்தேற்றும் அதன் பொருட்டே களவியலை அடுத்துக் கற்பியலைத் தொல்காப்பியர் வைத்தார்.

கற்பியல் என்னும் இப்பகுதியில் 'கற்பு' இலக்கணம், தலைவன், தலைவி, தோழி, செவிலி, காமக்கிழத்தி கூற்று, அலர், பிரிவு, வாயில்கள் போன்றன குறித்து விளக்கப்படுகின்றன.

### 4.1 கற்பு - இலக்கணம்

'கற்பு' என்பதற்கு பல்வேறான விளக்கங்கள் காணப்படுகின்றன.

கொண்டானை தெய்வமென நினைத்து வழிபடல், கல்லினைப் போல் திண்மையாக இருத்தல், சொல்திறம்பாமை, மனஉறுதி என பலவாறாக விளக்கம் கூறுகின்றனர். தொல்காப்பியர் திருமணம் செய்து கொண்டு வாழ்வதையே 'கற்பு' என்கிறார். இது களவு வெளிப்படுவதற்கு முன் வரைதல், களவு வெளிப்பட்டபின் வரைதல் என்ற இரு திறப்படும்.

*"கற்பெனப்படுவது கரணமொடு புணரக்*
*கொளற்குரி மரபிற் கிழவன் கிழத்தியைக்*
*கொடைக்குரி மரபினோர் கொடுப்பக் கொள்வதுவே"* (1)

கற்பென்று சொல்லப்படுவது கரணத்தோடு பொருந்திக் கொள்ளுதற்குரிய மரபினையுடைய கிழவன் கொடுத்தற்கரிய மரபினையுடைய கிழத்தியைக் கொடுத்தற்குரிய மரபினையுடையார் கொடுப்பக் கொள்வது.

*"கொடுப்போர் இன்றியும் கரண முண்டே*
*புணர்ந்துடன் போகிய காலை யான்"* (2)

கொடுப்பக் கொள்வது கரணம் என்பதல்லாமல் கொடுப்பார் இல்லாமலும் கரணம் உண்டு. (திருமண நிகழ்வு). தலைவனும் தலைவியும் புணர்ந்து உடன் போகிய காலத்து.

*"மேலோர் மூவர்க்கும் புணர்த்த கரணங்*
*கீழோர்க் காகிய காலமும் உண்டே"* (3)

மேற்குலத்தார் ஆகிய அந்தணர், அரசர், வணிகர் என்னும் மூன்று வருணாத்தார்க்கும் புணர்த்த கரணம் கீழோராகிய வேளாண் மாந்தர்க்கும் ஆகிய காலமும் உண்டு.

*"பொய்யும் வழுவுந் தோன்றிய பின்னர்*
*ஐயர் யாத்தனர் கரணம் என்ப"* (4)

பொய்க்கூறலும் வழுஉப்பட ஒழுகலும் தோன்றிய பின்னர் முனைவர் கரணத்தைக் கட்டினர் என்று சொல்லுவர்.

1. 'கற்பெனப் படுவது ____ புணர'

2. கொடைக்குரி மரபினோர் யாரை யாருக்குக் கொடுப்பர்?

3. கொடுப்போர் இல்லாமல் காரணம் உண்டு எவ்வாறு?

4. மேலோர் மூவர் யார்?

5. கரணம் எப்பொழுது தோன்றியது?

### 4.2 தலைவன் கூற்று

6.கற்பின்கண் தலைமகன் கூற்று எத்தனை இடங்களில் நிகழும்.

கற்பின்கண் தலைமகன் கூற்று 33 இடங்களில் நிகழ்வதாகத் தொல்காப்பியர் குறிப்பிடுகின்றார்.

1. காரணத்தின் அமைந்து முடிந்த காலை நெஞ்சுதளை அவிழ்ந்த புணர்ச்சி : சான்றோர் வரையறை செய்த திருமண முறைப்படி திருமணம் முடிந்த பிறகு பழிக்கு அஞ்சி இதுவரை அடக்கி வைத்திருந்த வேட்கை கட்டவிழ்ந்து கூடிய இடத்தும் கூற்று நிகழும்.

2. எஞ்சா மகிழ்ச்சி இறந்துவரு பருவத்தும் : இல்லற வாழ்க்கை இன்பம் இறையறாது நுகரும் பொழுதும் கூற்று நிகழும்.

3. அஞ்ச வந்த உரிமை : தலைவன் தானும் பிறரும் அஞ்சும் படியாகத் தலைவியிடத்து உண்டாகிய கற்பாகி உரிமைக்கண் கூற்று நிகழும்.

4. நன்நெறிப்படரும் தொன்னலப் பொருள் : நல்ல நெறியைச் சுட்டக்கூடிய தொன்மையான குடிமரபு வழுவாத தலைவியின் வாழ்க்கையைக் கண்ட விடத்தும் கூற்று நிகழும்.

5. பெற்ற தேஎத்துப் பெருமையின் நிலைஇ குற்றம் சான்ற பொருள் எடுத்துரைத்தல் : தலைவியை வரைந்து உரிமை பெற்ற காலத்து, அவளை இல்லறத் தலைமையாகிய பெருமையின்கண் நிறுத்தி முன்னர் களவுக் காலத்தில் நிகர்ந்த குற்றம் சான்ற பொருளை எடுத்துக் கூறுதல்.

6. நாமக்காலத்து உண்டெனத் தோழி ஏமுறு கடவுள் ஏத்திய மருங்கு : தோழியானவள், அக்காலத்து நமக்குத் துணையாயிற்று, ஏன ஏமுறு கடவுளை ஏத்துங்காலத்தும் தலைவனுக்குக் கூற்று நிகழும்.

7. அல்லல் தீர ஆர்வமொடு அளைஇச் சொல்லுறு பொருள் : தலைவி தன் துன்பம் தீர ஆர்வத்தோடு பொருந்தச் சொல்லப்பட்ட பொருண்மைக்காண். தலைவனுக்குக் கூற்று நிகழும். களவுக்காலத்து வருந்திய வருத்தம் தீரத் தனது காதல் மிகுதி தோன்ற சொல்லுமிடத்தும் கூற்று நிகழும்.

*"யாயும் ஞாயும் யாரா கியரோ*
*எந்தையும் நுந்தையும் எம்முறைக் கேளிர்*
*யானும் நீயும் எவ்வழி அறிதுஞ்*
*செம்புலப் பெயனீர் போல*
*அன்புடை நெஞ்சந் தாங்கலந் தனவே"* (குறுந் : 40)

8. சொல்லென ஏனது சுவைப்பினும் நீ கை தொட்டது வானோர் அமிழ்தம் புரையுமால் எமக்கு என அடிசிலும் பூவும் தொடுத்தல் கண் : யாதானும் ஒன்றை நுகரினும், நீ கையால் தொட்டது வானோர் அமிழ்தம் போலும். இதற்குக் காரணம் சொல்வாயாக என்று தலைவியிடம் அவன் அடிசிலும் பூவும் தொடுத்தற்கண்ணும் கூற்று நிகழும்.

எ.டு

*"வேம்பின் பைங்காய் என் தோழி தரினே*

*தேம்பூங்கட்டி என்றனிர் இனியே*
*பாரி பறம்பிற் பனிச்சுனைத் தெண்ணீர்*
*தைஇத் திங்கள் தண்ணிய தரினும்*
*வெய்ய உவர்க்கும் என்றனிர் ஐய*
*அற்றால் அன்பின்மை யாலே"* (குறுந் : 196)

9. அந்தணர் திறத்தும் சான்றோர் தேஎத்தும் அந்தமில் சிறப்பிற் பிறர்பிறர் திறத்தினும் ஒழுக்கங் காட்டிய குறிப்பு : அந்தணரிடத்தும் சான்றோர்களிடத்தும் மிக்க சிறப்பினையுடைய பெற்றோர் சுற்றம் முதலியோர்களிடத்திலும் நடந்து கொள்ள வேண்டிய முறைமையைக் குறிப்பினால் காட்டுதல்.

10. ஒழுக்கத்துக் களவினுள் நிகழ்ந்த அருமையைப் புலம்பி அலமரல் உள்ள மோடு அளவிய இடத்து : ஒழுக்கத்தினும் களவுக் காலத்து நிகழ்ந்த அருமையைத் தனித்துச் சுழன்ற உள்ளத்தோடே உசாவிட இடத்தில் தலைவன் கூற்று நிகழும்.

11. அந்தரத்து எழுதிய எழுத்தின் மான வந்த குற்றம் வழிகெட ஒழுகல் : களவுக் காலத்து ஒழுகிய ஒழுக்கக் குறைபாட்டான் நிகழ்ந்த குற்றத்தை ஆகாயத்து எழுத்துப்போல வழி கெட ஒழுகுதல்.

12. அழியல் அஞ்சல் என்று ஆயிரு பொருளினும் தானவன் பிழைத்த பருவம் : அழியல், அஞ்சல் என இயற்கைப் புணர்ச்சிக்கண் கூறிய அவ்விரு பொருளைப் பிழைத்த காலத்திலும் கூற்று நிகழும்.

13. நோன்மையும் பெருமையும் மெய்கொள் அருளிப் பன்னல் சான்ற வாயிலொடு பொருந்தித் தன்னின் ஆகிய தகுதி : பொறுமையும் பெருமையும் மெய்யெனக் கொள்ளுமாறு அருளி ஆராய்தல் அமைந்த வாயிலொடு பொருந்தித் தலைவன் தன்னான் ஆகிய தகுதிக் கண்ணும் கூற்று நிகழும். அஃதாவது பொறுத்தல் வேண்டும் எனவும் சிறுமை செய்தல் குற்றம் எனவும் கூறுதல். தலைமகள் தன்னால் வந்ததனை என்னால் வந்தது எனவும் கூறுதல். பன்னல் சான்ற வாயில் என்பது தோழியைக் குறித்தது.

எ.டு

*"கோட்டுப்பூச் சூடினும் காயும் ஒருத்தியைக்*
*காட்டிய சூடினீர் என்று"* (குறள் : 1313)

14. புதல்வற் பயந்த புனிறுதீர் பொழுதின் நெய்யணி மயக்கம் புரிந்தோள் நோக்கி ஐயர் பாங்கினும் அமரர்ச் சுட்டியும் செய்பெருஞ்சிறப்பொடு சேர்தல் : புதல்வனைப் பயந்த ஈன்று அணிமை நீங்கின பொழுதின் கண் நெய்யணி மயக்கம் புரிந்தவனைக் குறித்து முனிவர் மாட்டும் அமரரைக் குறித்தும் செய்யாநிற்கும் பெரிய சிறப்பொடு சேர்தற்கண் கூற்று நிகழும்.

15. பயங்கெழு துணையினைப் புல்லிப் புல்லாது உயங்குவனள் கிடந்த கிழத்தியைக் குறுகிய அல்கல் முன்னிய நிறையழி பொழுதின் மெல்லென் சீறடி புல்லிய இரவு : தலைவன் பரத்தையிற் பிரிந்துழி, ஊடற்

கருத்தினளாய்ப் பயங்கெழு துணை அணையைப் புல்லிப் புல்லாது வருந்திக் கிடந்த தலைவியைக் கிட்டித் தங்குதலைக் குறித்த நிறையழி பொழுதில், தலைவியது மெல்லென்ற சீறடியைப் புல்லி இரத்தலின் போது கூற்று நிகழும்.

16. உறலருங் குரைமையின் ஊடல் மிகுத்தோளைப் பிற பிற பெண்டிரிற் பெயர்த்தல் : ஊடல் மிகுத்தோளை உறுதற்கு அருமையால் பிறபிற பெண்டிர் ஏதுவாக ஊடல் உணர்த்தலின் போது கூற்று நிகழும்.

7. காமத்தின் வலி என்றால் என்ன?

17. பிரிவின் எச்சத்துப் புலம்பிய இருவரைப் பரிவு நீக்கிய பகுதி : பிரிவு நிமித்தமாக வருந்திய மனையாளையும் காமக் கிழத்தியையும் அவ்வருத்தத்து நின்று நீக்கிய பகுதி. அஃதாவது பிரியேன் என்று கூறுதல்.

18. நின்று நனி பிரிவின் அஞ்சிய பையுள் : நிலைநிற்க மிகப்பிரியும் பிரிவின் கண் அஞ்சிய நோயின் கண்ணும் கூற்று நிகழும்.

8. உடன்சேறற் செய்கை என்றால் என்ன?

19. சென்று கையிகந்து பெயர்த்துள்ளிய வழி : மேற்கூறிய வாளினைக் கையிகந்து முன்னொருகாற் சென்று மீட்டும் அந்நெறியினைப் போக நினைத்த வழி கூற்று நிகழு.

20. காமத்தின் வலி : பொருளைக் காட்டிலும் காமம் வலியுடைத்து என உட்கொண்ட வழியும் கூற்று நிகழும்.

9. 'மீட்டுவர வாய்ந்த வகை' என்றால் என்ன?

21. கைவிடின் அச்சம் : தலைவியைக் கைவிட்டவழி அவளது உயிர்ப்பொருட்டு அஞ்சுதற் கண்ணும் கூற்று நிகழும்.

22. தானவட் பிழைத்த நிலை : தலைவன் தலைவியை நின்னிற் பிரியேன் என்ற சொல்லில் தவறுபட்ட போதும் தலைவனுக்குக் கூற்று நிகழும்.

23. உடன்சேறற் செய்கை : உடன் போக வேண்டும் எனச் சொல்லியவழி கூற்று நிகழும்.

24. அன்னவை பிறவும் மடம்பட வந்த தோழி மேற்சொல்லப்பட்டவைகளில் மடமைப்பட வந்த தோழியிடத்தும் கூற்று நிகழும்.

25. வேற்று நாட்டு அகல்வயின் விழுமம் : வேற்று நாட்டிற்கு அகலும் காலத்து வரும் நோயின் கண்ணும் கூற்று நிகழும். அஃதாவது பிரிவு ஒருப்பட்டபின்பு, போவேமோ, தவிர்வேமோ என்று சொல்லும் மன நிகழ்ச்சி.

26. மீட்டு வரவாய்ந்த வகை : பிரிந்த தலைவன் மீட்டு வரவு வாய்ந்த வகையின்கண்ணும் அவனுக்குக் கூற்று நிகழும்.

27. அவ்வழிப் பெருகிய சிறப்பு : பிரிந்துழிப் பெருகிய சிறப்பின் கண்ணும் தலைவனுக்குக் கூற்று நிகழும்.

28. பேரிசை ஊர்திப் பாகர் பாங்கு : தான் உற்ற இன்பத்தினைப் பாகனுக்குக் கூறும் போதும் தலைவனுக்குக் கூற்று நிகழும்.

29. காமக்கிழத்தி மனையோள் என்றவர் ஏமுறு கிளவி சொல்லிய எதிர் : காமக் கிழத்தியும் மனையாளும் என்று சொல்லும் இருவரும் பாதுகாவலாகக் கூறிய கூற்றின் எதிரும் தலைவன் கூற்று நிகழும்.

30 சென்ற தேஎத்து உழப்புநனி விளக்கி இன்றிச் சென்ற தம்நிலை கிளத்தல் : அங்ஙனம் கூறிய இருவர்க்கும், தான் சென்ற தேயத்தில் வருத்தத்தை மிகவும் விளக்கித் தலைவியை ஒழித்துச் சென்ற தன் நிலைமை கிளக்கும் போதும் கூற்று நிகழும்.

31. அருந்தொழில் முடித்த செம்மற்காலை விருந்தொடு நல்லவை வேண்டல் : அரிய வினையை முடித்துவந்த தலைமைக் காலத்து விருந்தினரோடு கூட நல்லவற்றைக் கிளத்தி, விருப்பமுறுதற்கண்ணும் கூற்று நிகழும்.

32. மாலை ஏந்திய பெண்டிரும் மக்களும் கேளிர் ஒழுக்கத்துப் புகற்சி : தலைவனை எதிர்கொண்டு மங்கலமாகிய மாலை ஏந்தி நின்ற பெண்டிரும் மக்களும் கேளிரும் ஒழுகும் ஒழுக்கத்து விருப்பின் கண்ணும் கூற்று நிகழும்.

33. ஏனைய வாயிலோர் எதிரொடு தொகை : பெண்டிரும் அல்லாத வாயில்கள் ஆயினார் எதிர் கூறும் கூற்றும் தலைவன் மாட்டு நிகழும்.

மேற்சொல்லப்பட்ட 33 இடத்தும் மிகுந்த சிறப்பினை உடைய தலைமகனது கூற்று நிகழும். (5)

### 4.2.1 தலைவனுக்கான பிற மரபுகள்

*"உணர்ப்புவரை இறப்பினும் செய்குறி பிழைப்பினும்*
*புலத்தலும் ஊடலும் கிழ வோற்குரிய"* (15)

10. புலத்தல் ஊடலுக்கான வேறுபாடு யாது?

தலைவி ஊடிய காலத்துத் தலைவன் தேற்றத் தேறாமல் அவ்ஊடல் அளவு கடந்தாலும், களவில் தலைவி செய்த குறியை அவளே தப்பினாலும் புலத்தலும் ஊடலும் அவனுக்கு உரியன. புலத்தல் அண்மைக் காலத்தது. ஊடல் அதனினும் மிக்கது.

தலைவனை வழிபட்டு ஒழுகுதல் தலைவிக்கு இல்லற ஒழுக்கத்தோடுபட்ட இயல்பாகும். ஆனால் ஆராய்ந்து பார்க்குமிடத்துத் தலைவன்பால் காமம் மிகுந்தவிட்டால் அப்போது தன் தலைவியிடத்துப் பணிந்த மொழியினைக் கூறுதல் அவனுக்கு உரியதாகும். (19)

11. தலைவன் விளையாட்டு எதைக் காட்டும்?

*"கிழவோன் விளையாட் டாங்கும் அற்றே"* (23)

தலைவன் விளையாட்டும் காமத்தின் மிகுதியைக் காட்டும்.

தலைவன் இரண்டாம் முறை மணந்து கொண்ட மனைவியை முதல் மனைவி எதிரேற்றினும், முதல் மனைவிதன் மகனைக் கோலம் செய்து பின்முறை மனைவியிடம் வாயிலாகக் கொண்டு செல்லினும் தலைவன் அங்ஙனமாய் இரு தலைவியரைக் கைவிட்டுப் பரத்தமை செய்து ஒழுகியதை நினைத்து அப்பரத்தையர் மீதுள்ள ஆசையைவிட்டு நீங்கலும் உரியன் (31)

12. எண்ணரும் பாசறை ______ புணரார்.

*"எண்ணரும் பாசறைப் பெண்ணொடும் புணரார்"* (34)

நினைத்தற்கு அரிய பாசறைக்கண் தலைமகளிரோடு புணரார் தலைமக்கள்.

13. பாசறைக் கண் எத்தகைய பெண்டிரை அழைத்துச் செல்வர்?

*"புறத்தோ ராங்கண் புணர்வ தாகும்"* (35)

பாசறைக்கண் தலைமகளிரோடு புணராத தலைமக்கள், அவ்விடத்துப் புறப்பெண்டிர் என்று சொல்லக்கூடிய கணிகையர் தாதியரோடு புணர்ச்சி பொருந்துவது உண்டு.

*"கிழவி முன்னர்த் தற்புகழ் கிளவி*
*கிழவோன் வினைவயின் உரிய என்ப"* (40)

தலைவி முன்னர்த் தலைவன், தன்னைப் புகழும் கூற்று வினைவயிற் பிரியும் வழி உரிய என்று சொல்லுவர் புலவர்.

துன்புறு பொழுதிலும் எல்லாப் பிரிவினும் தலைவன் தலைவியை வற்புறுத்தியல்லது செல்லுதல் இல்லை. (43)

*"செலவிடை அழுங்கல் செல்லாமை அன்றே*
*வன்புறை குறித்தல் தவிர்ச்சி யாகும்"* (44)

மேற்கூறியவாறு பிரியக் கருதிய தலைவன் இடையிற் சிலநாள் செலவு தவிர்ந்திருத்தல் போகாமல் நின்று விடுவதற்கன்று. தலைவியை வற்புறுத்திச் செல்லுதற்குத் தவிர்ந்த தவிர்ச்சியேயாம்.

வினைமேற் செல்லுங்காலத்துத் தலைவி பொறாள் எனப் போகாமை இல்லை. வற்புறுத்திப் போவான் என்பதாம்.

வினை காரணமாகப் பிரிந்த தலைவன் அதனை முடித்து மீண்டும் வரும் காலத்து, மனம் நெடுந்தொலைவை ஒரு கணத்தில் சென்று அடையுமாறு போலத் தலைவன் மனம் சென்றவிடத்தே ஒரு கணத்திற் சென்று உதவி செய்யும் பறவை போல நிலத் தீண்டாத செலவினை உடைய கலித்த குதிரையினை உடையவனாதலின் வரும்வழி எத்துணைத் தொலைவு உடையதானாலும் இடைவழியில் தங்கி வருதல் இல்லை. (53)

### 4.3 தலைவி கூற்று

தலைவனுக்கு நிகரான சிறப்பு வாய்ந்தவள் தலைவி. அத்தகு தலைவியின் இலக்கணத்தினை வாயில்கள் குறிப்பிடுகின்றனர்.

*"கற்புங் காமமும் நற்பா லொழுக்கமும்*
*மெல்லியற் பொறையும் நிறையும் வல்லிதின்*
*விருந்து புறந்தருதலும் சுற்றம் ஓம்பலும்*
*பிறவு மனை கிழவோள் மாண்புகள்"* (11)

ஆகும். இத்தகு இயல்பு வாய்ந்த தலைவி பல்வேறான இடங்களில் பேசுகின்றாள்.

1. அவனறிவாற்ற அறியுமாகலின் ஏற்றல் : தலைவனது நினைவை தலைவி மிக அறியுமாகலின் அவனை உயர்த்திக் கூறுமிடத்துக் கூற்று நிகழ்த்துவள்.

*"நின்ற சொல்லர் நீடுதோன் றினியர்*
*என்றும் என்தோள் பிரிபறி யலரே*

*தாமரைத் தண்தா தூதி மீமிசைச்*
*சாந்தின் தொடுத்த தீந்தேன் போலப்*
*புரைய மன்ற புரையோர் கேண்மை*
*நீரின் றமையா உலகம் போலத்*
*தம்மின் றமையா நந்நயந் தருளி*
*நறுநுதல் பசந்த லஞ்சிச்*
*சிறுமை உறுபவோ செய்பறி யலரே"* (நற் : 1)

2. நிறுத்தல் : தலைவனது பண்பினைத் தோழி கூறியவற்றால் தலைவி நிறுத்திக் கூறுதல்.

14. நிறுத்தல் என்பது யாது? இது யாரிடம் நிகழும்?

3. உரிமை கொடுத்த கிழவோன் பாங்கின் பெருமையில் திரியா அன்பு : தனக்கு உரிமையைக் கொடுத்தத் தலைவனிடத்து பெருமையினின்றும் திரியாத அன்பு செய்தல்

எ.டு

*"நிலத்தினும் பெரிதே வானினும் உயர்ந்தன்று*
*நீரினும் ஆரள வின்றே சாரற்*
*கருங்கோற் குறிஞ்சிப்பூக் கொண்டு*
*பெருந்தே னிழைக்கும் நாடனொடு நட்பே"* (குறுந் : 2)

4. கிழவனை மகடூஉப் புலம்பு பெரிதாக்கலின் அலமரல் பெருகிய காமத்து மிகுதி : தலைவனைத் தலைவி நீங்கும் தனிமை பெரிதாகலின் அப்போது அலமரல் (வருத்தம்) பெருகிய காமத்தின் மிகுதி.

5. இன்பமும் இடும்பையும் ஆகிய இடம் : தலைவிக்கு இன்பமும் துன்பமும் ஒருங்கு நிகழும் போது கூற்று நிகழும்.

6. கயந்தலை தோன்றிய காமர் நெய்யணி நயந்த கிழவனை நெஞ்சு புண்ணுறீஇ நளியின் நீக்கிய இளிவருநிலை : புதல்வன் பிறந்த நெய்யணி விழவின் போது தலைவியை விரும்பிய தலைவனை நெஞ்சு புண்ணாகுமாறு செய்து செறிவு நீக்கிய இளிவந்த நிலையில் கூற்று நிகழும்.

எ.டு

*கரும்பு நடு பாத்தியில் கலித்த ஆம்பல்*
*சுரும்புபசி களையும் பெரும்புனல் ஊர*
*புதல்வனை யீன்றவெம் மேனி*
*முயங்கல்மோ தெய்யநின் மார்புசிதைப் பதுவே* (ஐங்கு : 65)

15. ஈரம் என்றால் என்ன?

7. புகன்ற உள்ளமொடு புதுவோர் சாயற்கு அகன்ற கிழவனைப் புலம்பநனி காட்டி இயன்ற நெஞ்சம் தலைப்பெயர்ந்து அருக்கி எதிர்பெய்து மறுத்து ஈரத்து மருங்கு : விருப்பமுடைய உள்ளத்தோடு புதிய பெண்களின் நலத்தினை நாடி தலைவியை விட்டகன்ற தலைவனைத் தனது தனிமை மிகுதியில் அவன்மாட்டுச் செல்கின்ற நெஞ்சத்தைச் செல்லவிடாது

16 'எங்கை' என்பவர் யார்?

மீட்டு அருகம்பண்ணி அவன் காதலித்ததாளை எதிர்பெய்து கொண்டு புணர்ச்சியை மறுத்த ஈரத்தின் கண்கூற்று நிகழும். (ஈராமாவது முற்று மாறாமை)

8. தங்கிய ஒழுக்கத்துக் கிழவனை வணங்கி எங்கையர்க்கு உரை என இரத்தல் : பிறன் மாட்டுத் (பரத்தையரிடம்) தங்கிய ஒழுக்கத்தையுடைய கிழவனைத் தாழ்ந்து எங்கையர்க்கு உரையென வேண்டிக் கொள்ளும் போது கூற்று நிகழும்.

9. செல்லாக் காலைச் செல்கென விடுத்தல் : தலைவன் பரத்தையரிடத்துப் போகாத நேரத்தில் போ எனக் கூறல்.

10. காமக்கிழத்தி தன்மகத் தழீஇ ஏமுற விளையாட்டு இறுதி : தலைவனுடைய காமக்கிழத்தியானவள் தலைவியின் மகனைத் தழுவிக்கொண்டு மகிழ்ச்சியோடு விளையாடும் விளையாட்டின் முடிவின்கண் கூற்று நிகழும்.

11. சிறந்த செய்கை அவ்வழித் தோன்றி அறம்புரி நெஞ்சமொடு தன்வரவு அறியாமை புறம் செய்து பெயர்த்தல் வேண்டியம் : தலைவியும் காமக் கிழத்தியைப் போலத் தன் மகனைக்கொண்டு விளையாடிய நேரத்துத் தலைவன் தோன்றி அறம்புரி நெஞ்சத்தோடு தனது வரவைத் தலைவி அறியாளாக நின்று தலைவியைப் புறம் செய்து அவளிடத்து உண்டாகிய ஊடலைப் பெயர்த்தல் வேண்டிய இடம்.

12. தந்தையர் ஒப்பர் மக்கள் என்பதனால் அந்தமில் சிறப்பின் மகப்பழித்து நெருங்குதல் : தந்தையரை ஒப்பர் மக்கள் என்பதனால் குற்றம் இல்லாத சிறப்பினையுடைய தன் மக்களைப் பழித்து நெருங்குதல்.

13. கொடியோர் கொடுமை சுடும் என ஒடியாது நல்லிசை நயந்தோர் சொல்லோடு தொகைஇப் பகுதியின் நீங்கிய தகுதி : கொடியோரது கொடுமை அவர்களையே சுடும் எனப் புணர்ச்சியை ஒடியாது புகழை விரும்பினோர் சொல்லோடே ஒருப்பட்டு வேறுபடுதலின் நீங்கிய தகுதி. அஃதாவது அக்காலத்துத் தக்கறிதல், புகழை விரும்பினோர் சொல்லும் சொல்லாவது, காமம் விரும்பும் பரத்தையரைப் போலாது அறத்தை விரும்புதல்.

14. கொடுமை ஒழுக்கம் கோடல் வேண்டி அடிமேல் வீழ்ந்த கிழவனை நெருங்கிக் காதல் எங்கையர் காணின் நன்று என மாதர் சான்ற வகை : தலைவனது சொடுமை ஒழுக்கத்தினைத் தலைவியே பொறுக்க வேண்டும் என விரும்பி, அவளது அடிமேல் வீழ்ந்த அவனை நெருங்கி, நின்னிடத்துக் காதல் கொண்ட எங்கையர் (பரத்தையர்) கண்டால் இப்பணிதல் மிக நன்றாயிருக்கும் எனக் காதலமைந்த வகையின் கண்ணும் கூற்று நிகழும்.

15. தாயர் கண்ணிய நல்லணிப் புதல்வனை மாயப் பரத்தை உள்ளிய வழி : தாயரைக் கிட்டிய நல்ல அணியையுடைய புதல்வனை மாயப்பரத்தை குறித்த வழி கூற்று நிகழும். புதல்வனைப் பரத்தமை குறித்தலாவது, தலைவன் புறப்பெண்டிர் மாட்டுப் போகியவழி வெகுளுமாறு போலப்

புதல்வனையும் அவரிடைச் சென்றவழி வெகுளல்.

16. தன்வயிற் சிறப்பினும் அவன் வயிற் பிரிப்பினும் இன்னாத் தொல்சூள் எடுத்தல் : தன்னிடத்து நின்ற மிகுதியானும் அவன் மாட்டு நின்ற வேறுபாட்டானும் இன்னாத பழைய சூளுறவைத் தலைவி எடுத்த வழி.

17. காமக்கிழத்தி நலம் பாராட்டிய தீமையின் முடிக்கும் பொருள் : காமக் கிழத்தியின் நலத்தினைப் பாராட்டிய தீமையின் முடிக்கும் பொருள் அஃதாவது தலைவி, காமக்கிழத்தியின் நலத்தினைப் பாராட்டுவாள். அப்பாராட்டு தீமை பற்றி வருவதால் தீமையின் முடிக்கும் பொருள் ஆனது.

18. கொடுமை ஒழுக்கத்துத் தோழிக்கு உரியவை வடுவறு சிறப்பின் திரியாமைக் காய்தலும் உவத்தலும் பெட்டலும் ஆவியின் வருஉம் பல்வேறு நிலை : தலைவன்கண் நிகழும் கொடுமை ஒழுக்கங்களில் தோழியிடத்துத் தலைவி கூறுவதற்கு உரியவையான : குற்றமற்ற சிறப்பினை உடைய கற்பின்கண் திரியாது தலைவனைக் காய்தல், உவத்தல், இவற்றை நீக்கி நிறுத்தல், பேணிக்கோடல், அவ்விடத்துப் பலவாய் வேறுபட்டு வரும் நிலையில் தலைவி கூற்று நிகழும்.

19. வாயிலின் வருஉம் வகையொடு தொகைஇக் கிழவோள் செப்பல் கிழவதென்ப : வாயில்கள் மாட்டு வரூஉங் கூற்றுவகை உளப்படத் தலைவி கூற்று நிகழும்.

17. 'வாயில்' எத்தனை வகைப்படும்? யாவை?

வாயில்களாவர் : பார்ப்பார், பாங்கன், தோழி, செவிலி, பாணன், விறலி, இளையர், விருந்தினர், கூத்தர், அறிவர், கண்டோர், தலைவியின் ஆற்றாமையும் வாயிலாகக் கொள்ளப்படும். வாயில் என்பது வாயிற்குக் கூறல், வாயில் மறுத்தல், வாயில் நேர்தல் என மூவகைப்படும்.

இவைதவிர இன்னும் சில இடங்களில் தலைவி கூற்று நிகழும்.

18. தலைவன் அன்புறுதற்குத் தக்கனவாகச் சுட்டப்படுவன எவை?

"களவுக் காலத்தில் தலைவனுடன் புணர்ந்து உடன்போக்குச் சென்ற தலைவியானவள், இப்போது அஃதாவது கற்புக் கடன் பூண்டு ஒழுகும் காலத்துத் தம் மனைக்கண் இருந்து, தான் முன்பு இரைச்சுரத்தில் தலைவனுடன் கண்ட விலங்கு, பறவை முதலான கருப்பொருள் முதலியவற்றையும் அவற்றின் தொழிலையும் குறித்துத் தன் தலைவன் அன்புறுதற்குத் தக்கவற்றைக் கூறுதலே, தலைமகன் இயற்றும் தொழிற்கு அஞ்சும் அச்சமாகும். (7)

*"தோழியின் உறுத்த வாயில் புகுப்பினும்*
*ஆவயின் நிகழும் என்மனார் புலவர்"* (8)

தோழி உள்ளிட்ட வாயில்களைத் தன் தலைவன்பால் போகவிட்ட அக்காலத்தும் முற்கூறிய கூற்று நிகழும் என்றுரைப்பர் புலவர்.

19.'ஆய்மனைச் கிழத்தி' என்பவள் யார்?

காமக்கிழத்தியிடத்துத் தாயைப் போல கழறித் தழுவிக்கோடல் 'ஆய்மனைக் கிழத்தி' எனப்படும் தலைவிக்கு உரித்து என்பர் புலவர். (32)

*"அவள்சோர்பு காத்தல் கடனெனப் படுதலின்*
*மகன்தா யுயர்புந் தன்னுயர் பாடுஞ்*
*செல்வன் பணிமொழி இயல்பாக லான"* (33)

தலைமகனது சோர்வு காத்தல் தலைமகளுக்குக் கடனாம். தலைமகள் தன் மகனுக்குத் தாயாகிய காமக்கிழத்தி உயர்வும் தன் உயர்வாகும் எனக் கருதுவாள். இருவரும் தலைமகன் பணித்த மொழியினை ஏற்றுக்கோடல் இயல்பு.

### 4.3.1 தலைவிக்குரிய பிற மரபுகள்

மேற்சுட்டிய கூற்று நீங்கலாக வேறு சில மரபுகளும் தலைவிக்கு உண்டு.

20.வேற்றுமைக் கிளவி எப்பொழுது தோன்றும்?

தலைவன் குறிப்பறிதல் வேண்டியும் தலைவி தனது அகமலிந்த ஊடல் நீங்கும் இடத்தினும் வேற்றுமைக்கிளவு தோற்றவும் பெறும். (18)

*"தற்புகழ் கிளவி கிழவன்முற் கிளத்தல்*
*எத்திறத் தானும் கிழத்திக் கில்லை*
*முற்பட வகுத்த இரண்டலங் கடையே"* (39)

21. முற்பட வகுத்த இரண்டலங் கடை என்பது என்ன?

தலைவன் பரத்தையிற் பிரிந்து வந்துழி இரத்தலும் தெளித்தலும் என்ற இரண்டிடம் தவிர, தலைவன் முன்னால் தன்னைப் புகழ்ந்து கூறும் கூற்று எவ்வழியானும் தலைவிக்கு இல்லை.

தலைவிக்குரிய இயல்பாக

*"அருள்முந் துறுத்த அன்புபொதி கிளவி*
*பொருள்பட மொழிதல் கிழவோட் குரித்தே"* (20)

என்கிறார் தொல்காப்பியர்.

அருள் பண்பினைத் தோற்றுவிக்கக் கூடிய அன்பு நிறைந்த சொல்லைப் பொய்யாகக் கூறாது மெய்யாகக் கூறுதல் தலைவிக்கு உரியதாகும்.

22. 'களவுங் கற்பும் _______ வின்றே'

*"களவுங் கற்பும் அலர்வரை வின்றே"* (21)

களவினும் கற்பினும் அலர் ஆகும் என்று கூறுதல் நீக்கப்படாது.

*"அலரில் தோன்றுங் காமத்து மிகுதி"* (22)

23. எதன் காரணமாக தலைவன் தலைவியரின் அன்பு மிகும்.

அலரின் காரணமாக தலைவன் தலைவியரின் அன்பு மிகுதியாகும்.

எ.டு

*"கண்டது மன்னும் ஒருநாள் அலர்மன்னும்*
*திங்களைப் பாம்பு கொண்டற்று"* (குறள் .: 1146)

இது களவின்கண் அலர்.

எ.டு

*"ஊரவர் கௌவை எருவாக அன்னைசொல்*
*நீராக நீளும்இந் நோய்"* (குறள் : 1147)

இஃது அலரில் தோன்றும் காமத்து மிகுதி.

இவ்வாறாக தலைவியின் கூற்று. இயல்பு மரபு அமைகின்றன.

### 4.4 தோழி கூற்று

களவியலின்கண் தோழி யார், அவளது இயல்பு, மரபு குறித்து விளக்கப்பட்டன. கற்பின் கண்ணும் தோழி கூற்று இடம் பெறுவது உண்டு.

1. பெறற்கருப் பெரும்பொருள் முடிந்த பின்வந்த தெறற் கரு மரபிற் சிறப்பு : பெறுதற்கு அரிய பெரும் பொருளான மணவினை முடித்த பின்னர்த் தோன்றிய தெறுதற்கரிய மரபு காரணத்தால் தலைவனைச் சிறப்பித்துக் கூறுமிடத்துத் தோழி கூற்று நிகழும்.

2. அற்றம் அழிவு உரைத்தல் : களவுக் காலத்தில் பட்ட வருத்தம் நீங்கினமை கூறல்.

3. அற்றம் இல்லாக் கிழவோன் சுட்டிய தெய்வக் கடம் : குற்றமில்லாத தலைமகனைச் சுட்டிய தெய்வத்திற்குப் பரவுக்கடன் கொடுத்தற்கண் கூற்று நிகழும்.

4. சீருடைப் பெரும்பொருள் வைத்தவழி மறத்தல் : சிறப்புடைய பெரும்பொருள் எனப்படும் இற்கிழமைப் பொறுப்பினைத் தலைமகளிடம் கொடுத்த பின்பு அறங்காரணமாகவோ, பொருள் காரணமாகவோ, தலைவன் தனக்குரிய இசையும் கூத்தும் முதலியவற்றான், அவளை மறந்து ஒழுகிய காலத்தில் தலைவி வருந்துவாள். அதுகண்டு ஆற்றாது தோழி தலைவனிடம் கூற்று நிகழ்த்துவாள்.

5. அடங்கா ஒழுக்கத்து அவன்வயின் அழிந்தோளை அடங்கக் காட்டுதற் பொருள் : அடங்கா ஒழுக்கத்தையுடைய் தலைவனிடத்து மனம் அழிந்த தலைவியை அடங்கக் காட்டுதற்கு ஏதுவான பொருட்பக்கத்தில் கூற்று நிகழும்.

6. பிழைத்து வந்திருந்த கிழவனை நெருங்கி இழைத்தாங்கு ஆக்கிக் கொடுத்தல் : பிழைத்து (தவறுசெய்து) வந்த தலைமகனை நெருங்கித் தலையளிக்குமாறு கூறித் தலைமகனிடத்து கொடுத்தலின் போது கூற்று நிகழும்.

7. வணங்கிய மொழியால் வணங்கல் : தாழ்ந்த இயல்பினை உடைய மொழியினால் வணங்குதற்கண்ணும் கூற்று நிகழும்.

8. புறம்படு விளையாட்டுப் புல்லிய புகர்ச்சி : புறம்பட்ட விளையாட்டினைத் தலைவன் பொருந்திய புகர்ச்சிக்கண் கூற்று நிகழும்.

9.சிறந்த புதல்வனைத் தேராது புலம்பல் : தலைவன், தலைவி ஆகிய இருவர்க்கும் சிறந்த புதல்வனை நினையாமையால் தலைமகள் தனிமை உறுதற்கண் கூற்று நிகழும்.

24.'மாண்நலம் தா' என்பவர் யார்? யாரை நோக்கி?

10. 'மாண் நலம் தா' என வகுத்தல் : நீ கொண்ட நலத்தினைத் தந்துபோ என்று கூறுதல்

*"விட்டென விடுக்குநாள் வருக அதுநீ*
*நொந்தனை யாயின் தந்தனை சென்மோ*
*குன்றத் தன்ன குவவுமணல் அடைகரை*

*நின்ற புன்னை நிலந்தோய் படுசினை*
*வம்பநாரை சேக்குந்*
*தண்கடற் சேர்ப்ப நீ உண்டவென் நலனே" (குறுந் : 236)*

11. பேணா ஒழுக்கம் நாணிய பொருள் : தலைமகனைப் பேணாத ஒழுக்கத்தினால் தலைமகள் நாணிய பொருண்மைக்கண் கூற்று நிகழும்.

12. சூள்வயிற் திறத்தால் சோர்வு கண்டு அழிதல் : தலைவி, தலைவன் சூள்வயிற் திறத்தால் சோர்வு கண்டு அழிதல் : தலைவி, தலைவன் சூளுற்ற சூளுறவில் சோர்வு கண்டு அழிந்து கூறுமிடத்தும் கூற்று நிகழும்.

13. பெரியோர் ஒழுக்கம் பெரிது எனக் கிளந்து பெறுதகை இல்லாப் பிழைப்பு : பெரியோர் ஒழுக்கம் பெரியதாகும் எனச் சொல்லித் தலைமகனைப் பெறும் தகைமையில்லாத பிழையின் கண்ணும் கூற்று நிகழும்.

14. அவ்வழி உறுதகையில்லாப் புலவியின் மூழ்கிய கிழவோன்பால் நின்று கெடுத்தல் : மேற் சொல்லியவற்றால் தலைவன் தவறு செய்த காரணத்தால் அவன் சென்று தலைவியை அடைய முடியாது புலவி கொண்ட தலைவி பால் சென்று அப்புலவியைத் தீர்த்தலின் போதும் கூற்று நிகழும்.

15. உணர்ப்புவயின் வாரா ஊடல் உற்றோள்வயின் உணர்த்தல் வேண்டிய கிழவோன்பால் நின்றுதான் வெகுண்டு ஆக்கிய தகுதி : தலைவன் உணர்த்தியும் உணராது ஊடல் கொண்ட தலைவியிடத்து அவ்வூடலைத் தீர்த்தல் வேண்டித் தலைவன் பக்கத்தாளாகி நின்று தலைவனை வெகுண்டு நின்றுண்டாக்கிய தகுதிக்கண் கூற்று நிகழும்.

எ,டு

*"உப்பமைந் தற்றால் புலவி அதுசிறிது*
*மிக்கற்றால் நீள விடல்" (குறள் : 1302)*

16. அருமைக் காலத்துப் பெருமை காட்டிய எளிமைக் காலத்து இரக்கம் : நிலையில்லாத களவுக் காலத்துத் தலைவியின் பெருமையைக் காத்து, எளியராகிய கற்புக் காலத்துப் பெருமையைக் காவாத இரக்கத்திற் கண்ணும் கூற்று நிகழும்.

எ.டு

*"வேம்பின் பைங்காய்யென் தோழி தரினே*
*தேம்பூங்கட்டி என்றனிர் இனியே*
*பாரி பறம்பிற் பனிச்சுனைத் தெண்ணீர்*
*தைஇத் திங்கள் தண்ணிய தரினும்*
*வெய்ய உவர்க்கு மென்றனிர்*
*ஐய வற்றால் அன்பின் பாலே" (குறுந் : 196)*

17. பாணர், கூத்தர், விறலியர் என்றவர் பேணிச் சொல்லிய குறைவினை எதிர்தல் : பாணரும், கூத்தரும், விறலியரும் என

இத்தன்மையர் விரும்பிச் சொல்லிய குறையுறும் வினைக்கு எதிராகவும் கூற்று நிகழும். குறையுறும் வினை என்பது வாயில் வேண்டல் குறையிரத்தல்.

25.'குறையுறும் வினை' என்பது யாது?

18. நீத்த கிழவனை நிகழுமாறு படீஇயர் காத்த தன்மையிற் கண் நின்று பெயர்த்தல் : தலைவியை நீத்த தலைவனை அவளுடன் இல்லறத்தே நிற்கச் செய்ய வேண்டி அவனைப் புறத்தே போகவிடாமல் பாதகாத்தமையால், அவன் தன்னிடத்து வந்தபோது கண்ணோட்டமின்றி அப்பிரிவை நீக்குதற் கண்ணும் கூற்று நிகழும்.

19. பிரியுங்காலை எதிர்நின்று சாற்றிய மரபுடை எதிரும் உளப்பட : தலைவன் சேயிடைப் (நெடுந்தொலைவு) பிரியும் காலத்து முன்னின்று சொல்லிய மரபுடைய மாறுபாடும். அஃதாவது கற்பினுள் பிரிவு மரபு கெடாமல் கூறவேண்டும் என்பதாம்.

இங்ஙனம் 19 இடத்தில் தோழி கூற்று நிகழும். (9)

#### 4.4.1 தோழிக்குரிய பிற மரபுகள்

தோழியின் கூற்றுக்களோடு தோழிக்குரிய இன்னும் சில செய்திகளைத் தொல்காப்பியர் குறிப்பிடுகின்றார்.

*"புலத்தலும் ஊடலும் ஆகிய இடத்துஞ்*
*சொலத்தகு கிளவி தோழிக் குரிய"* (16)

தலைவன் தலைவி ஆகிய இருவரிடமும் புலத்தலும் (மனம் சிறிது வேறுபடல். இன்மைக் காலத்தது) ஊடலும் (அவ்வேறுபாடு மிகுந்து நீளுதல்) ஏற்படும் போது தோழி பேசுதல் உண்டு.

எ.டு

*"அலந்தாரை அல்லல்நோய் செய்தற்றால் தம்மைப்*
*புலந்தாரைப் புல்லா விடல்"* (குறள் : 1303)

இது கற்பின்கண் தோழி கூறியது. அடுத்துத் தோழியின் இயல்பு சுட்டப்படுகிறது.

*"பரத்தை மறுத்தல் வேண்டியுங் கிழத்தி*
*மடத்தகு கிழமை உடைமையானும்*
*அன்பிலை கொடியை என்றலும் உரியள்"* (17)

தலைவன் பரத்தை வழிச் செல்லும்போது அதனைப் போக்குதல் வேண்டியும், தலைவன் கூறியதை உண்மை எனக் கொள்ளும் மடமைக்குணம் தலைவிக்கு உண்மையால் அவருக்கு ஏற்றதை அறிந்து கூறுதல் தோழியின் கடமையானதாலும், தலைவனை நீ தலைவியிடத்து அன்பிலை, மிகவும் கொடியை என்று கூறி ஊடல் தீர்ப்பதற்கும் உரியவளாவள்.

### 4.5 செவிலி கூற்று

செவிலி யார்? அவளது இயல்பு என்ன? என்பன பற்றி களவியலில் விளக்கப்பட்டன.

*"கழிவினும் நிகழ்வினும் எதிர்வினும் வழிகொள*
*நல்லவை உரைத்தலும் அல்லவை கடிதலும்*
*செவிலிக் குரிய ஆகும் என்ப"* (12)

இறந்த காலத்திலும் நிகழ்காலத்திலும் எதிர்காலத்திலும் தன் குலத்தில் உள்ளார் ஏற்றுக் கொள்ளுமாறு நல்லவை கூறுதலும் அல்லவை கடிதலும் செவிலிக்கு உரித்தாகும்.

எ.டு

*"தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற*
*சொற்காத்துச் சோர்விலாள் பெண்"* (குறள் : 56)

இது அறம் பற்றி வந்தது.

*"எறியென் றெதிர் நிற்பாள் கூற்றம் சிறுகாலை*
*அட்டில் புகாதாள் அரும்பிணி - அட்டதனை*
*உண்டி உதவாதாள் இல்வாழ்பேய் இம்மூவர்*
*கொண்டானைக் கொல்லும் படை"* (நாலடி : 363)

இது அல்லவை கடிதலாம்.

### 4.6 காமக்கிழத்தியர் கூற்று

26. காமக் கிழத்தியர் எத்தனை வகைப்படும்?

27. ஒத்த கிழத்தியர் என்பவர் யார்?

28. காமக் கிழத்தியர் கூற்று எத்தனை இடங்களில் நிகழும்?

தலைவன் தலைவியை விட்டுப் புறப்பெண்டிர் மாட்டுப் புறத் தொழுக்கம் மேற்கொள்வாள். அப்பெண்டிரைக் காமக் கிழத்தியர் என்பர். காமக்கிழத்தியர் ஆவார் பின்முறை ஆக்கிய கிழத்தியர். அவர் மூவகைப் படுவர். 1.ஒத்த கிழத்தியர் 2.இழிந்த கிழத்தியர் 3. வரையப்பட்டார். ஒத்த கிழத்தியர் முந்துற்ற மனையாளன்றிக் காமம் பொருளாகப் பின்னும் தன் குலத்துள்ளாள் ஒருத்தியை வரைதல். இழந்தவராவர் - அந்தணர்க்கு அரச குலத்தினும் வணிக குலத்தினும், வேளாண் குலத்தினும் கொடுக்கப்பட்டாரும், அரசர்க்கு ஏனை இரண்டு குலத்தினும் கொடுக்கப்பட்டாரும் வணிகர்க்கு வேளாண் குலத்தில் கொடுக்கப்பட்டாரும் ஆவார். வரையப்பட்டார் - செல்வராயினர் கணிகைக் குலத்தினுள்ளார்க்கும் இற்கிழமை கொடுத்து வரந்துகோடல். அவர், கன்னியில் வரையப்பட்டாரும், அதன் பின்பு வரையப்பட்டாரும் என இருவகையர். அவ்விருவரும் உரிமை பூண்டமையாற் காமக்கிழத்தியர் பாற்பட்டனர். பரத்தையராவார் யாரெனின் அவர் ஆடலும் பாடலும் வல்லராகி அழகும் இளமையும் காட்டி இன்பமும் பொரும் வெஃகி ஒருவர் மாட்டும் தங்காதார்.

இத்தகைய காமக்கிழத்தியர் கூற்று 8 இடங்களில் நிகழும்.

1. புல்லுதல் மயக்கும் புலவி : புல்லுதலைக் கலக்கும் புலவி மாட்டுங் காமக்கிழத்தியர் கூற்று நிகழும். (புலத்தல் - வெகுளுதல்)

2. இல்லோர் செய்வினை இகழ்ச்சி : மனையகத்தோர் செய்த வினையை இகழ்ந்து கூறுமிடத்தும் கூற்று நிகழும்.

எ.டு.

*"கழனிமா அத்து விளைந்துகு தீம்பழம்*
*பழன வாளை கதூஉம் ஊரன்*
*எம்மிற் பெருமொழி கூறித் தம்மிற்*
*கையுங் காலுந் தூக்கத் தூக்கும்*
*ஆடியிற் பாவை போல*
*மேவன செய்யுந்தன் புதல்வன் தாய்க்கே* (குறுந் : 8)

இது தலைவனை இகழ்ந்தது.

3. பல்வேறு புதல்வர்க் கண்டுநனி உவப்பு : பல்வேறு சிறுபிள்ளைகளைக் கண்டு மிகவும் உவக்குமிடத்துக் கூற்று நிகழும்.

4. மறையின் வந்த மனையோள் செய்வினை பொறையின்று பெருகிய பருவரல் : களவொழுக்கத்தினால் வந்த மனைவியானவளின் செயலினைக் கண்டு பொறுமையின்றிப் பெருகிய துன்பத்தின் கண்ணும் கூற்று நிகழும்.

5. காதற் சோர்வில் கடப்பாட்டு ஆண்மையில் தாய்போல் கழறித் தழீஇய மனைவியைக் காய்வின்றி அவன்வயின் பொருத்தல் :தன்மேல் ஏற்பட்ட காதல் சோர்வினாலும் தன்னுடைய உடமை என்னும் கொள்கையினாலும் தாய்போல் நின்று தலைமகனை இடித்துரைத்து, அவள் மனைவியைக் காய்தலின்றித் தலைவனோடு கூட்டி வைக்குமிடத்துங் கூற்று நிகழும்.

6. இன்னகைப் புதல்வனைத் தழீஇ இழை அணிந்து பின்னை வந்த வாயில் : இனிய நகையுடைய புதல்வனைத் தழுவி அணிகலன்கள் அணிந்து, அவனையே வாயிலாகக் கொண்டு வந்த தலைமகளிடத்தும் கூற்று நிகழும்.

7. மனையோள் ஒத்தலின் தன்னோர் அன்னோர் மிகையெனக் குறித்த கொள்கை : தான் தலைவியோடு ஒத்தவளாகக் கருதித் தன்னைப் போல்வார் தலைவனுக்கு மிகுதியாக உண்டு என்ற கொள்கையிடத்தும் கூற்று நிகழும்.

8. எண்ணிய பண்ணை என்ற இவற்றோடு : தலைவனுடன் ஆறு, குளம், சோலை முதலான இடங்களுக்குச் சென்று விளையாடுமிடத்தும் கூற்று நிகழும்.

எ.டு

*"கூந்தல் ஆம்பல் முழுநெறி யடைச்சீப்*
*பெரும்புனல் வந்த இருந்துறை விரும்பி*
*கிளையொடு நுகர்கதன் கொழுநன் மார்பே"* (குறுந் : 80)

இவ்வாறாகக் காமக் கிழத்தியர் கூற்று நிகழும்.

### 4.7 வாயில்கள் மரபும் கூற்றும்

29.வாயில்கள் மொத்தம் எத்தனை?

தலைவன், தலைவியரின் அகவொழுக்கம் சிறப்படைவதற்கும், கற்பு வாழ்வு மேன்மை அடைவதற்கும் உறுதுணையாக இருப்பவர்கள் வாயில்கள் ஆவர். இவ்வாயில்கள் பன்னிருவர் ஆவர்.

*"தோழி தாயே பார்ப்பான் பாங்கன்*
*பாணன் பாடினி இளையர் விருந்தினர்*
*கூத்தர் விறலியர் அறிவர் கண்டோர்*
*யாத்த சிறப்பின் வாயில்கள் என்ப"* (51)

தோழி, தாய், பார்ப்பான், பங்கன், பாணன், பாட்டி (பாடினி), இளைர், விருந்தினர், கூத்தர், அறிவர், கண்டோர் என்ற இப்பன்னிருவரும் கற்பின்கண் வாயில்கள் ஆவர்.

30.தலைவனின் கொடுமைகதிள் தலைவி முன்னர் சுட்டப்படுமா?

*"எல்லா வாயிலும் இருவர் தேஎத்தும்*
*புல்லிய மகிழ்ச்சிப் பொருள என்ப"* (37)

மேற்கூறிய 12 வாயில்களும் தலைவன் தலைவி என்ற இருவரிடத்தும் பொருந்திய மகிழ்ச்சி உண்டாக்குதலைப் பொருளாக உடையவரார்.

இவ்வாயில்கள் மகிழ்ச்சிப் பொருண்மை கூறுதலன்றி அன்பு நீங்கிய கடுஞ்சொற்களை கூறுவார்களேயானால் தலைவன் சிறைப்புறத்தானாகிய வழி கூறுவர். (38)

தலைவியின் முன்னர் தலைவனின் கொடுமையைக் (புறத்தொழுக்கம் போன்றன) கூறுதல் வாயில்களுக்கு இல்லை. (24)

மனைவி முன்னர்ச் செயலற்று கூறும் சொல் வாயில்களுக்கு உண்டு. எப்பொழுது எனில் தலைவிக்கு உள்ள உறுதி இருக்கும் தருவாயில். (25)

பன்னிரு வாயில்களும் முன்னிலைப் பிறமொழி கூறுவர். எப்பொழுது எனில் அவரிடம் இறந்து பின்னிற்கும்போது. இது தலைமகனை நோக்கியே நடக்கும். முன்னிலைப் புறமொழி என்பது முன்னிலையில் உள்ளாரை படர்க்கை போல் கருதிப் பேசுதல். (26)

பன்னிரு வாயில்களும் கூற்று நிகழ்த்துதற்குரியவர்களாவார்.

கற்பெனும் திண்மை, அன்பு, இல்லற ஒழுக்கம், மென்மைத் தன்மையான பொறை, அடக்கம் விருந்து பேணல், சுற்றத்தாரைப் பாதுகாத்தல் போன்றன தலைவியின் மாண்புகள் ஆகும். இத்தகு மாண்புகளைத் தலைவனது குறிப்பறிதல் முறையால் தலைமகனுக்கு எடுத்துரைத்தல் வாயில்களுக்கு உரிய மரபுகளாகும். (11)

எ.டு

*"முளிதயிர் பிசைந்த காந்தள் மெல்விரல்*
*கழுவுறு கலிங்கம் கழாஅ துடீஇக்*
*குவளை உண்கண் குய்ப்புகை கழுமத்*
*தான்துழந் தட்ட தீம்புளிப்பாகர்*

*இனிதெனக் கணவன் உண்டலின்*
*நுண்ணிதில் மகிழ்ந்தன் றொண்ணுதல் முகனே"*
*(குறுந் : 167)*

31. பார்ப் பார்க்குரிய கூற்று எத்தனை?

**பார்ப்பார்க்குரிய கூற்று :**

பார்ப்பார்க்கு உரிய கூற்று 6 ஆகும்.

1. காமநிலை உரைத்தல் : தலைவனிடம் நீ பிரிந்தால் தலைவியின் காமம் மிகும் எனக் கூறல்.

எ.டு

*"உடையிவள் உயிர்வாழாள் நீநீப்பின் எனப்பல*
*இடைக் கொண்டியாம் இரப்பவம் எமகொள்ளாய் ஆயினை*
*கடைஇய வாற்றிடை நீர்நீத்த வறுஞ்சுனை*
*அடையொடு வாடிய அணிமலர் தகைப்பன" (கலித் : 3)*

2. தேர்நிலை உரைத்தல் : தலைமகனது செலவு காரணமாக நிகழும் நிகழ்ச்சியினை ஆராய்ந்து கூறுதல்.

3. கிழவோன் குறிப்பினை எடுத்துக் கூறல் : தலைவனது குறிப்பினைத் தலைவிக்கு விளங்கக் கூறல்.

4. ஆவொடு பட்ட நிமித்தங்கூறல் : ஆ(பசு), கலம் நிறையப் பால் சொரிதலானும், குறைதலானும் உரிதாய நிமித்தம் பற்றி நன்மை தீமை கூறல். பட்டநிமித்தம் என்றதனால் எல்லா நிமித்தமும் கொள்ளலாம்.

5. செலவுறு கிளவி : செலவுற்ற சொல்லும் அஃதாவது தலைமகன் போயினான் என்று கூறதல்.

6. செலவழுங்கு கிளவி : செலவினைத் தவிர்க்க வேண்டுமெனக் கூறுதல்.

என்பன பார்ப்பார் என்னும் வாயில்களுக்குரிய கூற்றுகளாகும்.

**பாங்கன் கூற்று :**

*"மொழிஎதிர் மொழிதல் பாங்கற் குரித்தே"* (41)

32. தலைவரை எதிர் கூறுதல் யாருக்குரியது?

இது களவிற்கும் கற்பிற்கும் பொதுவானதாகும். தலைவன் கூறிய கூற்றுக்கு எதிர்கூறுதல் பாங்கற்கு உரித்தாகும். எதிர் கூறுதலாவது மாறுபடக் கூறுதல். அவை களவுக் காலத்துக் கழறலும் கற்புக் காலத்துப் பரத்தையிற் பிரிவிற்கு உடம்படாது கூறலும்.

எ டு

*"காமம் காமம் என்ப காமம்*
*அணங்கும் பிணியும் அன்றே நுணங்கிக்*
*கடுத்தலும் தணிதலும் இன்றே யானை*
*குளகுமென்று ஆள்மதம் போலப்*
*பாணியும் உடைத்தது காணுநர்ப் பெறினே" (குறுந் : 136)*

இது களவுக் காலத்தின்போது பாங்கன் உரைத்தது.

**இளையோர் கூற்று :**

33.இளையோர் கூற்று எத்தனை?

இளையோர் என்பவர் ஏவல் தொழில் செய்பவர் இளையோருக்குரிய கூற்று ஏழு ஆகும்.

1. ஆற்றது பண்பு : செல்லக்கூடிய வழியின் இயல்பினைக் கூறல்.

2. கருமத்து வினை : செய்யும் செயலின் வினையையும் பயனையும் உரைத்தல்.

3. ஏவல் முடிவு : தலைமக்கள் ஏவியவற்றைச் செய்து முடித்தல்

4. வினாவல் : தலைவன் ஏவலைத் தாம் கேட்டல் அல்லது செய்கை யாவை? எனத் தலைவனைக் கேட்டல்.

5. செப்பல் : தலைவன் வினவியவற்றுக்கு விடை கூறல்.

6. ஆற்றிடைக் கண்ட பொருள் : செல்லும் சுரத்திடைக் கண்ட நிமித்தம் முதலிய பொருள்களைத் தலைவனுக்கும் தலைவிக்கும் உறுதி பயக்குமாறு கூறல்.

7. இறைச்சி : அச்சுரத்திடைத்தாய்க் கண்ட மாவும் புள்ளும் புணர்ந்து விளையாடுவனவற்றைத் தலைவன் தலைவி ஆகிய இருவருக்கோ, அல்லது தலைவனுக்கு மட்டுமோ சுட்டிக் கூறல்.

இவ்வேழும் இளையோர்க்குரிய கூற்றாம். (29)

**கூத்தர் பாணர் கூற்று :**

வாயில்களுள் கூத்தர், பாணர் என்பவர்களும் உண்டு.

1. தொல்லவை உரைத்தல் : முன்பு அன்பு மிக்கவர்கள் இவ்வாறு செய்வரெனக் கூறுதல்.

2. நுகர்ச்சி ஏத்தல் : மனை வாழ்க்கை நுகர்ச்சியைப் புகழ்தல்

3. பல்லாற்றானும் ஊடலில் தகைத்தல் : பலநெறியாலும் ஊடலினின்றும் தலைமக்களை மீட்டல். அஃதாவது இவ்வாறு செய்தல் குற்றம் என்றாலும் அன்புடையார் செய்யார் என்றானும் மனைக்கிழத்தியார் செயலன்று என்றானும் கூறுதல்.

4. உறுதி காட்டல் : ஊடல் தணிவதனால் ஏற்படுகின்ற நன்மைகளைச் சுட்டுதல்.

5. அறிவு மெய்ந் நிறுத்தல் : தான் துணிந்ததே மெய்யாகும் என்று துணிந்த தலைமகளது கெட்ட அறிவை இது தக்கதன்று என அறிவு கொளுத்துதல்.

6. ஏதவின் உரைத்தல் : இவ்வாறு செய்யின் இவ்வாறு குற்றம் பயக்கும் என ஏதுவினால் கூறுதல் (காரணத்தினால்). அது பிறள் ஒருத்தி இங்ஙனம் கெட்டாள் என்பதனை உண்மையென்று எண்ணும்படி கூறுதல்.

7. துணியக் காட்டல் : அவள் துணியுமாறு காரணம் காட்டுதல்.

8. அணிநிலை உரைத்தல் : நின்தோள் முதலானவற்றில் எழுதப்பட்ட அணியை எவ்விதப் பயனுமின்றிப் புலரவிடுகின்றதனால் பயன் என்ன என்று கூறுதல். (27)

மேற்கூறப்பட்ட அனைத்தும் கூத்தர்க்கு மட்டும் உரியனவாகும். இனி கூத்தர்க்கும் பாணர்க்கும் உரியவை விளக்கப்படும்.

*"நிலம்பெயர்ந் துரைத்தல் அவள்நிலை உரைத்தல்*
*கூத்தர்க்கும் பாணர்க்கும் யாத்தவை உரிய"* (28)

தம் இடத்தில் இருந்து பெயர்ந்து தலைமகன் இருக்கின்ற இடம்சென்று கூறுதல். தலைவியின் நிலையினைத் தலைவனுக்கு எடுத்துரைத்தல் இவை இரண்டும் கூத்தர்க்கும் பாணர்க்கும் உரியவையாகும்.

34. 'சொல்லிய கிளவி _____ உரிய".

**அறிவர் கூற்று :**

*"சொல்லிய கிளவி அறிவர்க்கும் உரிய"* (13)

செவிலிக்கு உரியதாகச் சொல்லப்பட்ட 'இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம் ஆகிய முக்காலத்திலும் தன் குலத்தில் உள்ளவர்கள் வழி கொள்ளுமாறு நல்லவை கூறுதலும் அல்லவை கடிதலும் ஆகியவை அறிவர்க்கும் உரியதாகும்.

*"இடித்துவரை நிறுத்தலும் அவர தாகும்*
*கிழவனுங் கிழத்தியும் அவர்வரை நிற்றலின்* (14)

பிழை கண்டவழி கழறிய எல்லையின் கண்ணே நிறுத்தலும் அறிவர்க்கும் உரிய, தலைவனும் தலைவியும் அவர் ஏவல்வழி நிற்றலின்.

### 4.8 பிரிவும், பிரிவிற்கான காலமும்

பாலை நிலத்திற்கான உரிப்பொருள் பிரிவு என்றாலும், ஓதல் முதலான அறுவகைப் பிரிவுகள் பற்றி அகத்திணையியலில் விளக்கப்பட்டுள்ளன. இருப்பினும் இங்கு பிரிவும் பிரிவிற்கான கால வரையறைகளும் விளக்கப்படுகின்றன.

தலைமகன் தான் மேற்கொண்ட வினையில் ஈடுபடுமிடத்துத் தலைவியை நினைத்துப் பார்த்தல் இல்லை. ஆனால் மேற்கொண்ட வினையில் வெற்றியடைந்தால் தலைவியை நினைத்தல் உண்டு. வினையிடத்துள் நினைத்தாலும் உரைக்கப்பெறார். (45)

35. கல்விப் பிரிவிற்கான காலவரையறை யாது?

**பரத்தையிற் பிரிவு**

*"பூப்பின் பிறப்பா டீராறு நாளும்*
*நீத்தகன் றுரையார் என்மனார் புலவர்*
*பரத்தையிற் பிரிந்த காலை யான"* (46)

'தலைவன் பரத்தையிற் பிரிவின்கண் தலைவிக்குப் பூப்பு உண்டானபோது, பூப்பு நிகழ்ந்த மூன்று நாள் கழிந்த பின்பு பன்னிரண்டு நாளும் தலைவன் - தலைவி ஆகிய இவ்விருவரும் பிரிந்து உரையார் என்று சொல்லுவர் புலவர்'

**ஓதற் பிரிவு :**

*"வேண்டிய கல்வி யாண்டுமூன் றிறவாது"* (47)

விரும்பப்பட்ட கல்விகற்கப் பிரியும் காலம் மூன்று ஆண்டிற்கு மேல் மிகாது.

**தூது காவல் பிரிவு :**

*"வேந்துறு தொழிலே யாண்டின தகமே"* (48)

36. தூது, காவலுக்கான கால வரையறை யாது?

வேந்தனுக்குற்றவழி, தூது, காவல் என அவ்வழிப் பிரிவிற்கும் உரிய காலம் ஓர் ஆண்டினது அகமே".

**பொருள்வயிற் பிரிவு :**

*"ஏனைப் பிரிவும் அவ்வியல் நிலையும் "* (49)

ஒழிந்த பொருள் வயிற் பிரிவிற்கும் காலம் ஓர் ஆண்டினது அகமே.

## 4.9 தலைமக்களுக்குரிய பொது மரபுகள்

*"யாறுங் குளனுங் காவும் ஆடிப்*
*பதிஇகந்து நுகர்தலும் உரிய என்ப"* (50)

ஊரைவிட்டு நீங்கி, ஆறுகளிலும், குளங்களிலும், சோலைகளிலும் விளையாடி இன்பம் நுகர்தலும் தலைவன், தலைவிக்குரிய மரபுகள் ஆகும்.

தலைவனும் தலைவியும் இன்பம் நுகர்ந்து முடிந்த முதுமைக் காலத்தில் பெருமை பொருந்திய மக்களோடு இணைந்து அறத்தையே நாடுகின்ற சுற்றத்துடன் கூடி வாழ்ந்து பின்பு பேரின்பமான அறத்தின்பால் மனத்தினைச் செலுத்துதலே பிறப்பினதுடைய பயனாக அமையும். (51)

## 4.10 தொகுப்புரை

தலைவனும் தலைவியும் கூடி இல்லறம் நடத்துவதன் வாயிலாக வரக்கூடிய இன்ப துன்பங்கள் பற்றியும் இல்லற வாழ்வில் ஒவ்வொருவரது கடமைகள் குறித்தும், இவர்களது இல்லற வாழ்வு சிறக்க துணைபுரியும் வாயில்கள் பற்றியும் பிரிவு குறித்தும், இல்லறத்தின் பயனாம் அறம் என்பது குறித்தும் விளக்கப்பட்டன.

**வினாவிற்கேற்ற விடைகள்**

| | | | |
|---|---|---|---|
| 1,2,3,4,5 | - | 4.1 ஐப் பார்க்க | |
| 6,7,8,9 | - | 4.2 | " |
| 10, 11, 12, 13 | - | 4.2.1 | " |
| 14,15,16,17,18,19 | - | 4.3 | " |
| 20,21,22,23 | - | 4.3.1 | " |
| 24,25 | - | 4.4 | " |
| 26,27,28 | - | 4.6 | " |
| 29,30,31,32,33,34 | - | 4.7 | " |
| 35,36 | - | 4.8 | " |

**பக்க வினாக்கள்**

1. கரணம் என்றால் என்ன? விளக்குக
2. செவிலி கூற்று குறித்து எழுதுக.
3. வாயில்கள் எத்தனை? விளக்குக.
4. பிரிவும் பிரிவிற்கான காலமும் குறித்து விளக்குக.
5. காமக் கிழத்தியர் எத்தனை வகைப்படுவர்? குறிப்பிட்டு எழுதுக.

**கட்டுரை வினாக்கள்**

1. கற்பு வாழ்வில் தலைமகன் கூற்று குறித்துக் கட்டுரைக்க
2. தலைவியின் நிலைப்பாட்டைக் கற்பியல் கொண்டு விளக்குக.
3. கற்பு வாழ்வில் தோழியின் பங்கு குறித்துக் கட்டுரை வரைக.
4. வாயில்கள் குறித்துக் கட்டுரை எழுதுக.

# அலகு - 5

# பொருளியல்

**அறிமுகம்**

பொருளியல் என்னும் இப்பகுதியின்கண் பொருள் இயைபு, களவு, கற்பு என்ற இருநிலையின்கண்ணும் தலைவன் தலைவி, தோழி ஆகியோரது இயல்பும், மரபும் கூற்று முறைகளும், அறத்தொடு நிற்றல், வரைவுகடாதல், வழக்குகள், இறைச்சி போன்றன விளக்கப்படுகின்றன.

**நோக்கம்**

கற்பியலை அடுத்து வைக்கப்பட்ட பொருளியலின் வாயிலாக மாணவர்கள், 'பொருள்' என்றால் என்ன என்பது பற்றியும், களவியல், கற்பியல் என்னும் பகுதியில் சுட்டப்படாத அறத்தொடு நிற்றல், வரைவு கடாதல் குறித்த மரபினை அறிந்து கொள்ளும் வகையில் அமைக்கப்பட்டுள்ளது.

## பாடம் - 5 பொருளியல்

## பொருளடக்கம்

5.1 பொருள் இயைபு

5.2 காழூப் பொருண்மை பற்றிய கிளவி, தலைவன் தலைவிக்குரிய ஒருபால் கூற்று

5.2.1 தலைவியின் இயல்பு

5.2.2 தலைவி மடனழிதல்

5.2.3 தாய்க்கு உரிய மரபு

5.2.4 தோழி முதலியோர்க்கு உரிய ஒருபால் கூற்று

5.3 அறத்தொடு நிற்கும் நிலை

5.3.1 தலைவி அறத்தொடு நிற்றல்

5.3.2 தோழி அறத்தொடு நிற்றல்

5.3.3 செவிலி உணர்தல்

5.3.4 பெண்டிர்க்குரிய இயல்பு

5.4 வரைவு கடாதல்

5.4.1 தோழி கூற்றினால் பயன்

5.4.2 தலைவி தோழி இயல்பு

5.4.3 தலை மகனுக்குரிய மரபு

5.4.4 பேசுவதன் வகை

5.4.5 தலைமகன் இயல்பும் திறனும்

5.5 புலனெறி வழக்குகள்

5.5.1 செய்யுள் வழக்கு

5.5.2 அறக்கழிவுடையன

5.5.3 வழுவமைத்தல்/முறைப்பெயர்

5.5.4 பொருள் கொள்ளும் தியம்

5.5.5 பரத்தையிற் பிரிவுக்குரியார்

5.6 பொது மரபுகள்

5.6.1 களவின்கண் தலைமகளுக்குரிய மரபு

5.6.2 கற்பில் தலைமகளுக்குரிய மரபு

5.6.3 இறைச்சி

5.6.4 தோழிக்குரிய திறன்

5.6.5 தலைமக்கள் மரபு

5.6.6 வாயில்கள் மரபு

5.6.7 பொது மரபுகள்

5.7 தொகுப்புரை

## பாடம் - 5 பொருளியல்

தலைவன் தலைவியருக்கான கற்புவாழ்வை சுட்டிச் சென்ற பாடமான கற்பியலைத் தொடாந்து பொருளியல் என்ற இயலை அமைத்தார் தொல்காப்பியர். இது தொல்காப்பியத்தின் ஐந்தாவது இயலாகும். இது 'பொருள் இயல்பு' உணர்த்தினமையில் 'பொருளியல்' ஆனது. பொளியலில் தலைவன் தலைவி கூற்று, அறத்தொடு நிற்றல், வரைவு கடாதல், உடன்போக்கு, இறைச்சி, தலைவன் தலைவிக்கான மரபும் இயல்பும் குறித்தும் நுண் பொருட்கள் போன்றன விளக்கப்படுகின்றன.

### 5.1 பொருள் இயைபு

*"இசை திரிந்து இசைப்பினும் இசையுமன் பொருளே*
*அசைதிரிந் திசையா என்மனார் புலவர்"* (1)

இசைதிரிந்து ஒலிப்பினும் பொருள் இயையும் அவ்வழி அச்சொற்கு அங்கமாகிய அசை திரிந்தொலியா என்பர் புலவர்.

### 5.2 காமப் பொருண்மை பற்றிய கிளவி/தலைவன் தலைவிக்குரிய ஒருபால் கூற்று

நோயும் இன்பமும் இருவகை நிலையில் காமங்கண்ணி மரபிடை தெரிய எட்டன் பகுதியும் விளங்க ஒட்டிய உறுப்புடையது போல் மறுத்துரைப்பது போல் நெஞ்சொடு புணர்த்தும் கூறல். துன்பமும் இன்பமும் ஆகிய இருவகை நிலையினையுடைய காமத்தைக் குறித்த மரபு, இடையீடுபடுதலான் மெய்ப்பிரிவு எட்டாகிய எட்டன் பகுதியும் விளங்கப் பொருந்திய உறுப்புடையது போலவும், உணர்வுடையது போலவும் மறுத்துரைப்பது போலவும் நெஞ்சோடு புணர்த்தும் கூறுதல் (2)

தலைவனும் தலைவியும் காமத்தால் துன்புறு நிலையில் எட்டு மெய்ப்பாடும், இன்புறு நிலையில் எட்டு மெய்ப்பாடும் தோன்ற நெஞ்சை உறுப்பும் உணர்வும் உடையது போலவும் மறுத்துரைப்பது போலவும் கூறுவர். இங்கு சுட்டப்படும் எட்டன் பகுதியாவன நகை, அழுகை, இளிவரல், மருட்கை, அச்சம், பெருமிதம், வெகுளி, உவகை என்பதாகும். இவை அடுத்த பாடத்தில் விளக்கப்படும்.

1. எட்டன் பகுதி யாவை?

எ.டு

*"அவர் நெஞ் சவர்க்காதல் கண்டு எவனெஞ்சே*
*நீயெமக் காகா தது"* (குறள் : 1291)

இது தன் நெஞ்சை மறுத்துரைப்பது போல் இளிவரல் என்ற மெய்ப்பாடு தோன்றத் தலைவி கூறியது.

*"கனவும் உரித்தால் அவ்விடத் தான"* (3)

மேற்கூறியவற்றால், காமம் இசையீடு பட்ட விடத்துக் கனாக்கண்டு கூறுதலும் உண்டு.

எ.டு

"கேட்டிசின் வாழி தோழி அல்கற்
பொய்வ லாளன் மெய்யுறல் மரீஇ
வாய்த்தகைப் பொய்க்கனா மருட்ட ஏற்றெழுந்து"
(குறுந் : 30)

இது தலைவி கனாக்கண்டு கூறியது.

### 5.2.1 தலைவியின் இயல்பு

2. தலைவி தனிமையுறும் போது வேறுபடுவது எது?

தலைமகள் வண்ணம் (நிறம்) வேறுபட்டுத் தனிமை உறும்போது தலைமகனது பிரிவைத் தன் உறுப்புக்கள் உணர்ந்தன போலப் பொருந்தும் வகையாற் கூறவும் பெறும். (7)

எ.டு

"தன்னந் துறைவன் தணந்தமை நம்மினும்
முன்னம் உணர்ந்த வளை" (குறள் : 1277)

இதில் தலைமகனது பிரிவை வளையல் உணர்ந்தன போலப் பொருந்தும் வகையில் தலைவி கூறியது.

கூட்டம் இன்மையால் உடம்பும் உயிரும் மெலிந்த காலத்தும் இவை (உடம்பும் உயிரும்) என்ன வருத்தமுற்றன கொல்? என்று தனக்கு வருத்தம் இல்லது போலக் கூறினல்லது, தலைவி தானே சென்று தலைவனை அடைவது என்பது கிடையாது. (8)

எ.டு

"ஓஒ இனிதே எமக்கிந்நோய் செய்தகண்
தாஅம் இதற்பட் டது" (குறள் : 1176)

3.கிழவோனைச் சேர்தல் உரியதாகலும் உண்டு எப்போது?

எனக்கு இதத்கைய துன்பம் வந்ததே எனத் தலைவி கூறியது.

"ஒருசிறை நெஞ்சோ டுசாவுங் காலை
உரிய தாகலும் உண்டென மொழிப" (9)

தலைவி தனித்து நெஞ்சோடு உசாவும் காலத்து, கிழவோனைச் சேர்தல் உரியதாகலும் உண்டு.

### 5.2.2 தலைவி மடனழிதல்

"தன்வயிற் சுரத்தலும் அவள்வயின் வேட்டலும்
அன்ன இடங்கள் அல்வழி யெல்லாம்
மடனொடு நிற்றல் கடனென மொழிப" (10)

தலைமகன் தனதொழுக்கந் தலைமகள் மாட்டு மறைந்து உணர்த்தும் வழியும் தலைமகள் மாட்டுப் புணர்ச்சி வேட்கை தோற்றிய வழியுமாகிய அத்தன்மைப்பட்ட இடங்கள் அல்லாத வழி எல்லாம் தலைமகள் மடனொடு நிற்றல் கடன் என்று சொல்லுவர்.

எ.டு

*முத்தேர் முறுவலாம் நல்வலைப் பட்டதோர்*
*புத்தியானை வந்தது காண்பான் தங்கினேன்''*
*என்று தலைவன் தன்வயிற் சுரந்தவழி அதற்கு உடம்படாது*
*"அவ்வியானை வனப்புடைத் தாகலுங் கேட்டேன்''*
*(கலி.99)*

என்றவழி, பொய் கூறினாள் என்னும் கருத்தினளாகிக் கூறுதலின் மடனழிதல் ஆயிற்று.

மடம் என்பது, சொன்னதை மெய்யெனக் கொண்டு அதை விடாமல் இருக்கும் மனவடக்கம்.

4. மடம் என்றால் என்ன?

### 5.2.3 தாய்க்கு உரிய மரபு

*"தாய்க்கும் உரித்தாற் போக்குடன் கிளப்பின்''* (4)

தலைவன் தலைவி கனாக்கண்டு கூறுதல் மட்டுமன்றி தலைமகள் உடன் போய காலத்து நற்றாயும் கனவு கண்டு கூறுவாள்.

5. கனவுகண்டு கூறுதற்கு உரியவர்கள் யாவர்?

### 5.2.4 தோழி முதலியோர்க்கு உரிய ஒருபால் கூற்று

நட்பின் வழங்கும் வழக்கம் அல்லாதவிடத்து பான்மை கெழுமப்பட்ட கிளவி (அகத்திணை இலக்கணத்தின் கண் ஒரு கூற்றுச் சொல்) பெண்பாலாராகிய தலைவி, தோழி, நற்றாய், செவிலி என்ற நால்வர்க்கும் உரியதாகும். (5)

6.பான்மை கெழுமப்பட்ட கிளவி யாருக்குரியது?

*"உயிரும் நாணும் மடனும் என்றிவை*
*செயிர்தீர் சிறப்பின் நால்வர்க்கும் உரிய''* (6)

உயிர், நாணம், மடன் என்று சொல்லப்பட்டவை குற்றம் தீர்ந்த தலைவி, தோழி, நற்றாய், செவிலி என்ற நால்வர்க்கும் உரியதாகும்.

7. உயிர், நாணம், மடன் இம்மூன்றிற்கும் உரியவர்கள் யாவர்?

## 5.3 அறத்தொடு நிற்கும் நிலை

இயற்கைப் புணர்ச்சியில் ஈடுபட்ட தலைவன், தலைவி பகற்குறி, இரவுக்குறி என்பதில் சந்தித்த பின், இரவுக்குறியில் தலைவன் வரும் வழியின் ஏதங்களை நினைந்து தலைவியின் உடல் மெலிவடை நின்றது. இதனை அறிந்த செவிலித்தாய் வெறியாட்டு நிகழ்த்த முற்படுகின்றாள். இச்சூழ்நிலையாலும், தலைவியை மாற்றாருக்கு மணம் முடித்து வைக்க முயலும் சூழ்நிலையின் போதும் (இது நொதுமலர் வரைவு) தோழியானவள் இக்களவினைத் தமர்க்கு வெளிபடச் செய்து அவரால், குறித்தத் தலைவனுக்கே கொடுக்கச் செய்தல் தக்கது என்று கொண்டு அவர்க்குக் களவொழுக்கத்தை மெல்ல வெளிப்படுத்தத் தொடங்குவாள். இங்ஙனம் வெளிப்படுத்தலையே 'அறத்தொடு நிற்றல்' என்று ஆன்றோர் வழங்குவர். இதற்கு 'அறனழியாமை நிற்றல்' என்பதும் 'கற்பின் நிலை நிற்றல்' என்பதும் பொருளாகும்.

### 5.3.1 தலைவி அறத்தொடு நிற்றல்

8. தோழி எப்பொழுது அறத்தொடு நிற்பாள்?

*"அறத்தொடு நிற்குங் காலத் தன்றி*
*அறத்தியல் மரபிலள் தோழி என்ப"* (11)

தலைவி அறத்தொடு நிற்கும் காலத்தல்லாமல் தோழி தானே அறத்தொடு நிற்கும் மரபு இல்லை.

### 5.3.2 தோழி அறத்தொடு நிற்றல்

9. தோழி செவிலியிடம் அறத்தொடு நிற்கும் நிலை எத்தனை?

தோழி செவிலியிடம் அறத்தொடு நிற்கும் நிலை எழுவகைபபடும். அவை எளித்தல், ஏத்தல், வேட்கை, உரைத்தல், கூறுதல், உசாவுதல், ஏதீடு தலைப்பாடு, உண்மை, செப்புங்கிளவி ஆகும்.

10. 'ஏத்தல்' என்றால் என்ன?

1. எளித்தல் : தலைவன் நம்மாட்டு மிக எளியன் என்று கூறி அறத்தொடு நிற்பாள்

2. ஏத்தல் : தலைவன் மிக உயர்ந்தான் என உயர்த்திக் கூறி அறத்தொடு நிற்றல்

3.வேட்கையுரைத்தல் : தலைவனிடத்துத் தலைவி கொண்ட வேட்கையினையும் தலைவியிடத்துத் தலைவன் கொண்ட வேட்கையினையும் கூறி அறத்தொடு நிற்பாள்

எ.டு

*"அன்னாய் - ஓங்குமலை நாடன்*
*மலர்ந்த மார்பிற் பாயல்*
*தவநனி வெய்ய நோகோ யானே"* (ஐங் : 235)

இது தலைவி வேட்கை கூறியது.

4. கூறுதல் : நம் தலைவியை இத் தலைவனுக்கே கொடுக்க வேண்டும் என்று கூறி அறத்தொடு நிற்பாள்

5. உசாவுதல் : வெறியாட்டும், கழங்கும் இட்டுரைத்தபோது வேலனோடோ, பிறரோடோ உசாவி அறத்தொடு நிற்பாள்

6. ஏதீடு தலைப்பாடு : ஏதேனும் ஓர் ஏதுவை இடையீட்டுக் கொண்ட தலைப்பட்டமையைக் கூறி அறத்தொடு நிற்பாள்.

7. உண்மை செப்பும் : தலைவனுக்கும் நம் தலைவிக்கும் உண்டான நட்பு இத்தகையது என உள்ளது உள்ளவாறே உரைத்து அறத்தொடு நிற்பாள்.

### 5.3.3 செவிலி உணர்தல்

காமம் மிக்கவழியல்லது சொல் நிகழ்ச்சி இன்மையின் தலைமகள் தான் கருதிய பொருள் மேல் உண்டாகும் வேட்கையைத் தலைமகள் தன்னாலே அறிவர். (13)

எ.டு

*"அன்னாய் வாழிவேண் டன்னை நின்மகள்*
*பாலும் உண்ணாள் பழங்கண் கொண்டு*
*நனிபசந் தனளென வினவுது (அகம் : 18)*
*இதன்கண், செவிலி குறிப்பினால் உணர்ந்தமை அறியலாம்.*

### 5.3.4 பெண்டிர்க்குரிய இயல்பு

*"செறிவும் நிறைவும் செம்மையுஞ் செப்பும்*
*அறிவும் அருமையும் பெண்பா லான" (14)*

செறிவு என்பது அடக்கம். நிறைவு என்பது அமைதி, செம்மை என்பது மனங்கோடாமை, செப்பு என்பது சொல்லுதல்.

அறிவு என்பது நன்மை பயப்பனவும் தீமை பயப்பனவும் அறிதல். அருமை என்பது உள்ளக் கருத்தறிதலருமை இவை எல்லாம் பெண்பாலர்க்குரியன.

11. செறிவு என்பது யாது?

12. நிறைவு என்றால் என்ன?

13. அறிவு என்றால் என்ன?

### 5.4 வரைவு கடாதல்

களவியலில் கூறியவாறு தலைவன் பகற்குறி, இரவுக்குறி என பகலாலும் வருமிடத்து இக்களவு வெளிப்படச் சுற்றத்தார் தலைவியை இற்செறிப்பரோ என்றும் வரும் வழியாலோ பொழுதாலோ தலைவனுக்குத் துன்பம் வருங்கொல் என்றும் தோழி அச்சங் கொள்வாள். அதன் பொருட்டு அவள், தலைவனிடம் இங்ஙனம் களவொழுக்கத்தில் ஒழுகுவது நம் குடிப்பிறப்புக்கும் சிறப்புக்கும் பொருந்தாமையின் இனி நீ எம் தலைவியை மணந்து கொள்வதே தகுதி என்று கூறவதே வரைவு கடாதல் ஆகும். இது வெளிப்படை, குறிப்பு என இருவகைப்படும்.

14. வரைவு கடாதல் எத்தனை வகைப்படும்?

### 5.4.1 தோழி கூற்றினால் பயன்

1. **பொழுதும் ஆறும் காப்பும் என்று இவற்றின் வழுவின் ஆகிய குற்றம் காட்டல்** : தலைமகன் வருகின்ற இராப்பொழுதும் வழியும் ஊரின் கண் காவலும் என்று சொல்லப்பட்டவற்றின் கண் வரும் தப்பினால், அவனுக்கு உண்டாகும் குற்றத்தை எடுத்துக் காட்டல்.

2. **தன்னை அழித்தல்** : தான் மனன் அழிந்து கூறல்

3. **அவள் ஊறு அஞ்சல்** : தலைமகளுக்கு வரும் இடையூறு கூறல்

15. தன்னை அறிதல் என்றால் என்ன?

எ.டு

*"அன்னையும் அறிந்தனள் அலரு மாயின்று*

*நன்மனை நெடுநகர் புலம்புகொள உயிர்க்கும்*
*இன்னா வாடையும் மலையும்*
*நம்மூர்ச் செல்கம் எழுகமோ தெய்யோ"*

**4. இரவினும் பகலினும் நீவா என்றல் :** தலைமகனைப் பகற்குறி விலக்கி இரவுக்குறி நீ வா என்றால். இரவுக்குறி விலக்கிப் பகற்குறி நீவா என்றல்.

**5. கிழவோன் தன்னை வாரல் என்றல் :** தலைமகனைப் பார்த்து 'நீ வாராதொழி' எனல்

**6. நன்மையும் தீமையும் பிறிதினைக் கூறல் :** நன்மையாகவும் தீமையாகவும் பிறபொருளை எடுத்துக் கூறல்.

**7. புரைபட வந்த அன்னவை பிற :** இத்தன்மையவாகிக் குற்றம் பயப்ப வந்த அத்தன்மைய பிற; அஃதாவது தலைவனைக் கொடியன் என்றலும், நொதுமலர் வரைகின்றார் என்றலும் அன்னை வெறி எடுக்கின்றாள் என்றலும் பிறவும் (15)

### 5.4.2 தலைவி, தோழி இயல்பு

களவொழுக்கம் நீட்டித்த காலத்து வரைதல் வேட்கைப் பொருளாற் கூறுதலை மறுத்து உள்ளது உள்ளவாறே உரைத்தலும் தலைவி, தோழி ஆகியோர்க்கு உரிய இயல்பு என்பர். (16)

16. களவுக் காலத்தில் எத்தகைய ஊர்தியில் தலைவன் வருவான்?

### 5.4.3 தலைமகனுக்குரிய மரபு

*"தேரும் யானையும் குதிரையும் பிறவும்*
*ஊர்ந்தனர் இயங்கலும் உரியர் என்ப"* (17)

களவுக் காலத்துத் தேரும், யானையும் குதிரையும் பிற ஊர்திகளும் ஊர்ந்து சென்று கூடுவதற்குத் உரியர் தலைவர்

### 5.4.4 பேசுவதன் வகை

உண்ணுந் தொழிலை நிகழ்த்துவதற்கு உரியவல்லாத பொருளை உண்டன போலக் கூறுதலும் மரபு என்பர். (18)

### 5.4.5 தலைமகன் இயல்பும் திறனும்

தலைமகளைத் தமர் (தாய், தந்தை முதலானோர்) காக்கும் காவல் மிகுதியான போது அன்பு, அறன், இன்பம், நாணம் முதலாயின நீங்கப்பெறும். தலைவி வெளியே செல்ல முடியாதவாறு காப்பு மிகுதல் உண்மையான போது, பொருள்வயிற் பிரிதல் வேண்டும். (19)

*"சுரமென மொழிதலும் வரைநிலை யின்றே"* (20)

தலைமகன் பொருள்வயிற் பிரியும் வழி உடன்பாக்குக் கருதிய தலைமகளுக்கு யான் போகின்ற நெறி கல்லும் காடுமாகிய சுரம் எனக் கூறுதலும் நீக்கப்படாது.

## 5.5 புலனெறி வழக்குகள்

17. வழக்கு எத்தனை வகைப்படும்? யாவை?

வழக்கு உலகவழக்கு, நாடகவழக்கு என இருவகைப்படும். மக்கள் வாழ்க்கையில் இயல்பாகக் காணப்படும் ஒழுக்கம் 'உலகவழக்கு' எனப்படும். சுவைபட வருவனவெல்லாம் ஓரிடத்து வந்தனவாகத் தொகுத்துக் கூறுதல் நாடகவழக்கு. இவ்விரண்டும் சேர்ந்ததே 'புலனெறி வழக்கு' அல்லது 'செய்யுள் வழக்கு' ஆகும்.

### 5.5.1 செய்யுள் வழக்கு

உயர்ந்தோர் கூறும் வழக்கு வழிப்படுதலின் அவ்வழக்கினது நெறியிலே நடத்தல் செய்யுட்குக் கடனே. (21)

### 5.5.2 அறக்கழிவுடையன

அறத்திற்கு மாறுபட்ட கூற்றுக்கள் அகப்பொருட்குப் பயன்படுமாறு வருமாயிற் அவற்றையும் மரபென்று கொள்ளுதல் பழியுடைத்து என்று சொல்லுவர் புலவர். பொருளாவது அகப்பொருளும் புறப்பொருளும் அறத்திற் கழிவுடைய அகப்பொருள் என்பது பிறர்மனைக் கூட்டம். அறத்திற் கழிவுடைய புறப்பொருள் என்பது பகைவரது நாட்டின் ஆநிரை கோடலும் அழித்தலும். (22)

*"மிக்க பொருளினுட் பொருள்வகை புணர்க்க*
*நாணுத்தலைப் பிரியா நல்வழிப் படுத்தே"* (23)

மேற்கூறப்பட்ட அகப்பொருட்கண்ணே நாண் நீங்காத நல்வழிக் கட்படுத்துப் பொருள் வகை புணர்க்க

### 5.5.3 வழுவமைத்தல் / முறைப்பெயர்

18. முறைப் பெயர் என்றால் என்ன?

*"முறைப்பெயர் மருங்கினற் கெழுதகைப் பொதுச் சொல்*
*நிலைக்குறி மரபின் இருவீற்றும் உரித்தே"* (24)

முறைப்பெயராவது இயற்பெயர் முதலிய பெயரானன்றி முறைமைப்பற்றி வருவது. முறைப் பெயரிடத்து இருபாற்கும் பொருந்தின தகுதியுடைய எல்லா என்னும் சொல் நிற்றற்குரிய மரபுனானே ஆண்பாற்கும், பெண்பாற்கும் ஒப்ப உரியதாய் வழங்கும்.

முறைப்பெயர் என்பது தந்தை மகனைக் கூறும் பொழுது தம்முன், தம்பி என்பவனவும் கிழவன் தோழன் என்பனவும் போலவரும். கெழுதகைப் பொதுச் சொல் என்பது பயிற்சியாற் கூறும் 'எல்லா' என்பது.

அடுத்து மரபு வழுவமைத்தலைக் கூறுகின்றார் தொல்காப்பியர்.

தந்தை பொருள் மகனுக்கு உறுதல் ஒருவன் கொடுப்ப ஒருவன் கொள்ளுதல். உழவு முதலியனவற்றால் வருதல். வேறுபடுத்திக் கொள்ளுதல் (அதாவது பகையினால் வந்தது கொள்ளுதல்) என்ற இந்நான்கினும் வரும் பொருளினது உரிமைத் தோற்றம் அல்லவாயினும் பொருந்துவ உள. (25)

### 5.5.4 பொருள் கொள்ளும் திறம்

ஒரு பக்கத்துக் கூடிய பொருண்மை ஒழிந்த பக்கத்துக் கண்ணும் வரும் வகைத்தாம் வழக்கு நெறி (26)

அஃதாவது மனையோள் மாட்டும் காமக்கிழத்தி மாட்டும் நிகழும் புணர்ச்சியும், பிரிவும். ஊடலும் பரத்தையர் மாட்டும் நிகழும்.

எ.டு

*"அன்னை கடுஞ்சொல் அறியாதாள்*
*சிறுகாலை இற்கடை வந்து குறி செய்த*
*அவ்வழி என்றும் யான் காணேன்"* (கலி : 97)

இது பரத்தை மாட்டு உண்டாய புணர்ச்சி குறித்தது.

*"எல்லா உயிர்க்கும் இன்பம் என்பது*
*தாமர்ந்து வரூஉம் மேவற் றாடும்"* (27)

எல்லா உயிர்க்கும் இன்பம் என்பது தான் மனம் பொருந்தி வரும் விருப்பத்தையுடையது. எனவே மனம் பொருந்தியவழிப் பரத்தையர் மாட்டும் இன்பம் உள என்பதாம்.

### 5.5.5 பரத்தையிற் பிரிவுக்குரியர்

19.பரத்தையர் மாட்டு வாயில் விடுதல் யாருக்கு உரித்து?

பரத்தையர் மாட்டு வாயில் விடுதல். நான்கு வருணத்தார்க்கும் உரித்து. அவ்வழிப் பிரியும் பிரிவு நிலம் பெயர்தல் இல்லை. (28)

எ.டு

*"யாரிவன் எங்கூந்தல் கொள்வான் இதுவுமோர்*
*ஊரண்மைக் கொத்த படிறுடைத்து"* (கலி : 99)

## 5.6 பொது மரபுகள்

இப்பகுதியில் தலைவன், தலைவி, தோழி ஆகியோர்க்குரிய பொது மரபுகள் குறித்தும் பிற செய்திகள் குறித்தும் விளக்கப்படுகின்றன.

### 5.6.1 களவின் கண் தலைமகளுக்குரிய மரபு

1. இடைவிடாது துன்பம் நுகர்ந்து இல்லறம் நடத்தும் உரிமையை விரும்பியவிடத்தும் 2. பொருள் தேடும் கடமை உள்ளமையால் தலைவன் பிரிவான் என்று அஞ்சும் அச்சம் பெண்பாற்கு இயல்பாதலாலும் 3. களவொழுக்கத்தை வெளிப்படுத்திவிடும் என்று அஞ்சும் படியாக வந்த அம்பலும் அலரும் ஆகிய இவ்விருவகையின் கண்ணும் 4. தலைமகனது வரவை எதிர்பார்த்திருந்தபோது தாய் துஞ்சாமை, நிலவு வெளிப்பாடு முதலான இடையூறாகிய பொருளின் கண்ணும் தலைமகனுடன் போதற்குறிப்பும் (அதாவது உடன் போக்குக் குறிப்பும்) வரைவு கடாதற் குறிப்பும் தலைமகள் மாட்டுத் தோன்றும். (29)

எ.டு

"சிலரும் பலரும் கடைக்கண் நோக்கி
மூக்கின் உச்சிச் சுட்டுவிரல் சேர்த்து
மறுகிற் பெண்டிர் அம்பல் தூற்றச்
சிறுகோல் வலந்தனள் அன்னை
..........................................
அலர்சுமந் தொழிகஇவ் வழுங்கலூரே" (நற் : 149)

இதன்கண், தலைமகனுடன் போக்கற்குறிப்பு (உடன்போக்கு)ச் சொல்லப்பட்டுள்ளது.

தலைமகளுக்கும் தோழிக்கும் உரிய திறன் :

வருத்த மிகுதியைக் குறித்த வழி, மணவாழ்க்கையுள் இரக்கம் உரித்து என்று சொல்லுவர். (30)

எ.டு

"செல்லாமை உண்டேல் எனக்குரை மற்றுநின்
வல்வரவு வாழ்வார்க் குரை" (குறள் : 1151)

### 5.6.2 கற்பில் தலைமகளுக்குரிய மரபு

"மனைவி உயர்வுங் கிழவோன் பணிவும்
நினையுங் காலைப் புலவியுள் உரிய" (31)

தலைவியைவிடத் தலைமகன் உயர்வுடையனாகவும் இருப்பான். அத்தகைய தலைமகனும் தன் தலைவிபால் பணிந்து நிற்றலும் உண்டு.

களவொழுக்கத்தின்போது தலைவியின் நலம் பாராட்டிய தலைமகன், கற்புக்காலத்தின் போதும் அவளது எழில் நலம் பாராட்டுவான். (32)

எ.டு

"ஆக வனமுலை யரும்பிய சுணங்கின்
மாசில் கற்பின் புதல்வன் தாயென
மாயப் பொய்ம்மொழி சாயினை பயிற்றி (அகம் : 6)

இது புலவிக்கண் தலைவன் புகழ்ந்தது.

தலைவன், தலைவியைப் பாராட்டும் பாராட்டானது தான் பொருள் வயிற் பிரியுமிடத்து செல்லும்வழி இன்மையாய் உண்டாகும் அச்சத்தையும், வினைவயிற் பிரிவையும் உண்மையாகத் தலைவிக்கு உணர்த்தும். (36)

"கற்புவழிப் பட்டவள் பரத்தை ஏத்தினும்
உள்ளத் தூட லுண்டென மொழிப" (37)

கற்பின் வழி நின்று ஒழுகுபவளாகிய தலைவி தன் தலைவனின் பரத்தையைப் புகழ்ந்து கூறினாளாயினும் உள்ளத்தின்கண் ஊடல் நிகழும் என்மனார் புலவர்.

20.தலைவனின் பரத்தையைத் தலைவி புகழ்ந்து கூறுமிடத்து உள்ளம் எப்படி இருக்கும்?

தலைவி வேறொருத்தியின் குணங்கள் இத்தன்மையை என்று தலைவனுக்குக் கூறி அதன் வாயிலாகத் தலைவனது குறிப்பினை அறிதற்கும் உரியவள். (38)

எ.டு

*"கண்டிகு மல்லமோ கொண்கநின்கேளே*
*பொள்ளிழை யுயர்மணல் வீழ்ந்தென*
*வெள்ளாங் குருகை வினவு வோளே"* *(ஐங் : 122)*

இது வேறொருத்தியை இத்தன்மையள் என்று கூறி, அவள்மாட்டுத் தலைவன் எத்தன்மையன் என்று அறிய விரும்பிக் கூறியவாறாம்.

பரத்தையர் தாமுற்ற துன்பத்தினைத் தலைமகளுக்குக் கூறிய வழியும் அவரிடத்துத் துன்பத்தை மெய்ம்மையாக உணர்ந்து வைத்துத் தலைமகன் மாட்டுக் கழறுதல் தலைவன் எதிர்ப்பட்ட பொழுது இல்லை. மகிழ்ச்சியும் புலவியும் அல்லாத காலத்து. (39)

இதுவரையிலும் தலைமகளுக்குரிய மரபு உணர்த்தப்பட்டது. அடுத்ததாகத் தலைமகளுக்குரிய வழுகாத்தல் உணர்த்தப்படுகிறது.

யாதானும் ஒரு பருவத்தைக் குறித்த வழி அப்பருவம் இரண்டு திங்களை எல்லையாக உடையதாக இருந்தாலும் அப்பருவம் தொடங்கும் காலத்தையே கண்டு செயலற்ற போது அக்காலம் கழிந்தது போலக் கூறுதலும் உண்டு. அங்ஙனம் கூறுதல் அறியாமையினாலோ வருத்தத்தினாலோ மயக்கத்தினாலோ அக்காலத்திற்குரிய பொருள் மிகத் தோன்றுதலாலோ இந்த நான்கு பொருளாலும் நிகழும். (40)

இது பருவம் வந்தபோது தலைமகளுக்கு உரியதோர் வழுக்காத்தல் ஆகும்.

### 5.6.3 இறைச்சி

இறைச்சி என்பது அகப்பாடல்களின் அடிப்படையான கூறுகளுள் ஒன்றாகும்.

21. 'இறைச்சி தானே

*"இறைச்சி தானே உரிப்புறத் ததுவே"* *(33)*

இறைச்சிப்பொருள் என்பது உரிப்பொருளின் புறத்தாகித் தோன்றும் பொருள்.

கருப்பொருளாகிய நாட்டிற்கும் ஊர்க்கும் துறைக்கும் அடையாகி வருவது இறைச்சியாம்.

*"நிலத்தினும் பெரிதே வானினும் உயர்ந்தன்று*
*நீரினும் ஆரள வின்றே சாரற்*
*கருங்கோற் குறிஞ்சிப் பூக்கொண்டு*
*பெருந்தேன் இழைக்கும் நாடனொடு நட்பே"*

*(குறுந் : 3)*

இதில் கருப்பொருளாகிய நாட்டிற்கு அடையாகி வந்த

குறிஞ்சிப்பூவும் பெருந்தேனும் இறைச்சிப் பொருள்களாம்.

*"இறைச்சியிற் பிறக்கும் பொருளுமா ருளவே*
*திறத்தியன் மருங்கில் தெரியு மோர்க்கே"* (34)

பொருள் திறத்து இயலும் பக்கத்து ஆராய்வார்க்கு இறைச்சிப் பொருள்வயின் தோன்றும் பொருளும் உள.

இவ் இறைச்சிப்பொருள் இருவகைப்படும் 1. வேறோர் பொருள் கொள்ளக்கிடத்தல் 2. கிடவாதிருத்தல்

எ.டு

*"ஒன்றேன் அல்லேன் ஒன்றுவென் குன்றத்துப்*
*பொருகளிறு மிதித்த நெரிதாள் வேங்கை*
*குறவர் மகளிர் கூந்தற் பெய்ம்மார்*
*நின்று கொய்ய மலரு நாடனொடு*
*ஒன்றேன் தோழி ஒன்றி னானே"* (குறுந் : 208)

இது வேறோர் பொருள் கொள்ளக் கிடந்த இறைச்சி.

பிரிவாற்றாத காலத்து, இறைச்சிப் பொருள்களுள் தலைவன் அன்பு செய்வதற்குத் தருவனவற்றைக் கருதிக் கூறலும் வற்புறுத்தலாகும். (35)

22. ________ ________ பொருளுமா ருளவே'

23. இறைச்சி எத்தனை வகைப்படும்? யாவை?

### 5.6.4 தோழிக்குரிய திறன்

களவுக் காலத்துத் தோழிக்குரிய திறன் குறித்துத் தொல்காப்பியர் குறிப்பிடுகின்றார்.

தன் எண்ணத்தை நிறைவேற்றித் தருமாறு இரந்து கேட்கும் தலைவனைத் தோழி, மிகத் தொலைவில் நீங்கி நிறுத்துதல் அல்லாமலும்; நும் கூட்டத்தை யான் முன்பே அறிவேன் என மெய்யாகக் கூறுதலும், தலைவன் அப்புணர்ச்சி இல்லை என்றால் அவனைப் பொய்யன் எனக் கூறுதலும்; நல்ல கூறுபாடுடைய சொற்களைக் கேலியாகக் கூறியும் இங்ஙனம் பல்வேறு வகையாலும் படைத்து மொழிந்து சொல்லவும் பெறும்.

எ.டு

*"வெள்ளாங் குருகின் பிள்ளையும் பலவே*
*அவையினும் பலவே சிறுகருங் காக்கை*
*அவையினும் அவையினும் பலவே குவிமடல்*
*ஓங்கிரும் பெண்ணை மீமிசைத் தொடுத்த*
*தூங்கணங் குரீஇக் கூட்டுவாழ் சினையே"*

இது மடலேறுவல் என்ற தலைவனைப் பழித்து அருளுடையீர் ஆதலால் மடலேறுவது அரிது எனத் தோழி கூறியது.

*"உறுகண் ஓம்பல் தன்னியல் பாகலின்*
*உரியதாகும் தோழிகண் உடனே"* (43)

24. உயர் மொழிக் கிளவி யாருக்குரியது?

தலைமகனுக்கு உண்டாகும் துன்பத்தைப் போக்குதல் தோழிக்குக் கடனாதலின் தோழி அறிவுடையவள் என்று கூறுதலும் உரித்தாகும்.

*"உயர்மொழிக் கிளவியும் உரியவால் அவட்கே"* (44)

உயர்த்திச் சொல்லும் கூற்றும் தோழிக்கு உரித்தாகும்.

எ.டு

*"தாமரைக் கண்ணியை தண்நறுஞ் சாந்திணை*

.....................................

*அணங்கென அஞ்சுவர் சிறுகுடி யோரே"* (கலி : 52)

இது தலைவனைத் தோழி உயர்த்திக் கூறியது.

### 5.6.5 தலைமக்கள் மரபு

*"உயர்மொழிக் கிளவி உறழுங் கிளவி*
*ஐயங் கிளவி ஆடூஉவிற் குரித்தே"* (42)

25. ஐயக் கிளவி யாருக்குரியது?

உயர்த்திச் சொல்லுவதற்குரிய சொல்லானது தலைமகனுக்கும் தலைமகளுக்கும் ஒத்த கிளவியாம் ஐயக் கிளவி தலைமகனுக்கே உரியதாகும்.

*"மாதர் முகம்போல் ஒளிவிட வல்லையேல்*
*காதலை வாழி மதி"* (குறள் : 118)

இது தலைவன், தன் தலைவியை உயர்த்திச் சொல்லியது.

சினமும் பேதைமையும் பொறாமையும் வறுமையும் என்று சொல்லப்பட்ட அந்நான்கு வகையும் யாதானும் ஒரு பொருளைச் சிறப்பித்தல் காரணமாக வரும். (49)

### 5.6.6 வாயில்கள் மரபு

வாயில்கள் பன்னிருவர் ஆவர். வாயில்கள் பற்றிக் கற்பியலில் விளக்கப்பட்டது.

அவரவர் சொல்லத்தகும் கூறுபாட்டினால் வாயில்கள் கூறும் கிளவி வெளிப்படக் கிளத்தல் கேடின்றி உரிய (45)

### 5.6.7 பொது மரபுகள்

அன்னை என்னை என்று சொல்லுதலும் உள. அவை முன்புள்ளார் சொல்லிச் சென்ற முறைமை. அவை தாம் சொல்லினாலும் சொல்லிற்கு அங்கமாகிய எழுத்தினாலும் பொருள் தோன்றாத மரபினை உடைய என்று சொல்லுவர் புலவர். (50)

மேற்பொருட் பாகுபாடு முதல், கரு, உரிப்பொருள் என உணர்த்தி அவற்றின் பாகுபாடு அத்துணையும் ஓதினார். அவற்றுள் பாகுபடுத்திக் காட்டலாகாதன சிலபொருள் கண்டு அவற்றைத் தொகுத்து உணர்த்தியுள்ளார் தொல்காப்பியர்.

1. ஒப்பு : தந்தையை ஒக்கும் மகன் என்பது அவ்விருவருக்கும் பிறப்பு வேளாயின வழி ஒப்பாகிய பொருள் யாது? என்றார்க்கு இது எனக் காட்டலாகாமையின் அவ்விருவரையும் கண்டவன். அவ்வொருவர் ஒருவரை ஒக்குமது பிறன் ஒருவன் மாட்டுக் காணாமையின் தானே அப்பொருண்மையை உணரும் என்பதாம்.

2. உரு : உட்கு, அது பயிலாத பொருளைக் கண்டபோது வருவதோர் மனநிகழ்ச்சி. இவர் உட்கினார் என்றபோது மனத்தினால் உணரக் கிடந்தது.

3. வெறுப்பு : செறிவு. அது அடக்கம் குறித்து நின்றது. அவர் அடக்கமுடையவர் என்றபோது அதுவும் மனத்தினால் உணரக் கிடந்தது.

4. கற்பு : மகளிர்க்கு மாந்தர் மாட்டு நிகழும் மனநிகழ்ச்சி. அதுவும் மனத்தால் உணரக் கிடந்தது. 26. கற்பு விளக்கம் யாது?

5. ஏர் : தளிரின்கண் தோன்றுவதோர் பொலிவு போல, எல்லா உறுப்பினும் ஒப்பக் கிடந்து, கண்டார்க்கு இன்பத்தைத் தருவதோர் நிற வேறுபாடு. அது எல்லா வண்ணத்திற்கும் பொதுவாகலின் வண்மை அன்று. ஆனால் வண்ணம் பற்றி வரும். இவன் 'ஏருடையன்' என்றால் அதுவும் மனங்கொளக் கிடந்தது.

6. எழில் : அழகு. அது மிக்கும் குறைந்து நீண்டும் குறுகியும் தாழ்ந்தும் உயர்ந்தும் மெலிதாகவும் வலிதாகவும் உள்ள உறுப்புக்கள் அவ்வளவிற் குறையாமல் அமைத்தவழி வருவதோர் அழகு. இதுவும் 'இவன் அழகன்' என்ற வழி அவ்வழகைப் பிரித்துக் காட்டல் ஆகாமையின் ஈண்டுச் சொல்லப்பட்டது. 27. எழில் என்றால் என்ன?

7. சாயல் : மென்மை, அது நாயும் பன்றியும் போலாது மயிலும் குயிலும் போல்வதோர் தன்மை. அதுவும் காட்டலாகாமையின் இங்கு சொல்லப்பட்டது. 28. சாயல் என்றால் என்ன?

8. நாண் : பெரியோரது ஒழுக்கத்துக்கு மாறுபட்டன செய்யாமைக்கு நிகழ்வதோர் நிகழ்ச்சி. அதுவும் காட்டல் ஆகாமையின் இங்கு கூறப்பட்டது.

9. மடன் : பெண்டிர்க்கு உள்ளதோர் இயல்பு. அது உய்த்துணர்ந்து நோக்காது கேட்டவற்றால் உணரும் உணர்ச்சி. அதுவும் காட்டலாகாது. 29. மடன் யாருக்குரிய இயல்பு?

10. நோய் : துன்பம். இவன் துன்பமுற்றான் என்றவழி அஃது எத்தன்மைத்து என்றார்க்குக் காட்டலாகாமையின் அதுவும் இங்கு ஓதப்பட்டது.

11. வேட்கை : யாதானும் ஒன்றைப் பெற வேண்டும் எனச் சொல்லும் மன நிகழ்ச்சி. இவன் வேட்கையுடையான் என்றவழி அஃது எத்தன்மைத்து என்று கேட்பவர்க்குக் காட்டல் ஆகாமையான் அதுவும் இங்கு சொல்லப்பட்டது. 30. வேட்கை என்றால் என்ன?

12. நுகர்வு : இன்ப துன்பங்களை நுகரும் நுகர்ச்சி. அதுவும் காட்டலாகாமையான் ஈண்டு உரைக்கப்பட்டது.

இவை தவிர அன்பு, அழுக்காறு, பொறை, அறிவு என்பவனவும் இவை போல்வனவும் கொள்ளலாம். (51)

*"இமையோர் தேஎத்தும் எறிகடல் வரைப்பினும்*
*அவையில் காலம் இன்மை யான"* (52)

இது மேற்கூறப்பட்ட பொருள், பொருள்தான் என்று கூறுகிறது.

தேவருலகத்திலும், கடல் ஆழ்ந்த இவ்வுலகத்திலும் மேற் சொல்லப்பட்ட பொருள் இல்லாத காலம் இன்மையான் உள்பொருள் என்றே கொள்ளப்படும். (உள்ளுறை முதல் பாடத்தில் விளக்கப்பட்டது)

## 5.7 தொகுப்புரை

பொருளதிகாரப் பகுதியில் பொருளியல் என ஒரு தனி இயலை வகுத்து அதன்கண் அகப்பொருள் குறித்த, பல்வேறான செய்திகளைத் தொல்காப்பியர் விளக்கியுள்ளார். ஏனென்றால் பொருளதிகார முதல் ஐந்து இயல்களில் பெரும்பான்மையும் ஆட்சி செய்வது அகப்பொருளே, மற்ற இயல்களில் விடுபட்ட செய்திகள் அனைத்தையும் இப்பகுதியில் விளக்கிச் சென்றுள்ளார் என்பதே உண்மை.

**வினாவிற்கேற்ற விடைகள்**

| | | |
|---|---|---|
| 1 | - | 5.2 ஐப்பார்க்க |
| 2,3 | - | 5.2.1 " |
| 4 | - | 5.2.2 " |
| 5 | - | 5.2.3 " |
| 6,7 | - | 5.2.4 " |
| 8,9,10 | - | 5.3.1 " |
| 11,12,13 | - | 5.3.1 " |
| 14 | - | 5.4 " |
| 15 | - | 5.4.1 " |
| 16 | - | 5.4.3 " |
| 17 | - | 5.5 " |
| 18 | - | 5.5.3 " |
| 19 | - | 5.5.5 " |
| 20 | - | 5.6.2 " |
| 21,22,23 | - | 5.6.3 " |
| 24 | - | 5.6.4 " |
| 25 | - | 5.6.5 " |
| 26,27,28,29,30 | - | 5.6.7 " |

**பக்க வினாக்கள்**

1. தலைவியின் இயல்பு குறித்து எழுதுக.
2. தலைவி மடனழிதல் குறித்து எழுதுக.
3. செவிலி தலைவியின் களவை உணருமாற்றை விளக்குக.
4. பெண்டிர்க்குரிய இயல்புகள் யாவை?
5. தோழியின் இயல்பும், தோழி கூற்றினால் ஏற்படும் பயனும் குறித்து விளக்குக.
6. பரத்தையிற் பிரிவுக்குரியோர் யார்?
7. இறைச்சி என்றால் என்ன? விளக்குக.
8. வாயில்கள் மரபு குறித்து விளக்குக.

**கட்டுரை வினாக்கள்**

1. பொருளியலில் சுட்டப்படுகின்ற தலைவியின் இயல்பும் மரபும் குறித்துக் கட்டுரைக்க
2. 'அறத்தொடு நிற்றல்' - கட்டுரைக்க
3. வரைவு கடாதல் என்றால் என்ன? அதில் தலைவன், தலைவி தோழிக்குரிய செயல்பாடுகளை விளக்கி எழுதுக.

# அலகு - 6

# மெய்ப்பாட்டியல்

### அறிமுகம்

மெய்ப்பாட்டியல் என்னும் இப்பகுதியில் மெய்ப்பாடு என்றால் என்ன? மெய்ப்பாட்டின் வகைகள், மெய்ப்பாட்டின் நிலைக்களன்கள், அகத்திணைக்குரிய மெய்ப்பாடுகள், கைக்கிளைக்குரிய மெய்ப்பாடுகள், தலைவன், தலைவிக்குரிய ஒப்புமைப் பண்புகளும் வேண்டாத பண்புகளும் போன்றவை விளக்கப்படுகின்றன.

### நோக்கம்

பொருளியல் பற்றி சென்ற பாடத்தில் அறிந்த மாணவர்கள் இப்பாடத்தின் வழியாக மெய்ப்பாடு பற்றிய சிந்தனையினைப் பெறுவர்.

மனித உடலினை அடிப்படையாகக் கொண்டு தோன்றுவது மெய்ப்பாடு. அந்த மெய்ப்பாடு அதற்கான நிலைக்களன்கள் குறித்த தெளிவினைப் பெற வைப்பதே நோக்கமாகும்.

**பாடம் - 6 மெய்ப்பாட்டியல்**

**பொருளடக்கம்**

6.1 மெய்ப்பாடு

6.2 மெய்ப்பாட்டின் வகை

6.3 எண்வகை மெய்ப்பாடுகள்

6.4 பிற மெய்ப்பாடுகள்

6.5 ஐந்திணைக்குரிய மெய்ப்பாடு

6.6 கைக்கிளைக்குரிய மெய்ப்பாடு

6.7 பெருந்திணைக்குரிய மெய்ப்பாடு

6.8 மனன் அழியாத நிலையில் நிகழ்வன

6.9 தலைவன் தலைவிக்குரிய ஒப்புமைப் பண்புகள்

6.9.1 காமக்குறிப்பிற்கு ஆகாதன

6.9.2 மெய்ப்பாட்டின் நுட்பம்

6.10 தொகுப்புரை

## பாடம் - 6 மெய்ப்பாட்டியல்

மெய்ப்பாடு செய்யுளுக்கு அடிப்படையான ஒரு கூறாகும். இம் மெய்ப்பாட்டின் வகைகள் குறித்தும் அவற்றின் நிலைக்களன்கள் குறித்தும், தலைவன் தலைவிக்குரிய ஒப்புமைப் பண்புகள், வேண்டாத பண்புகள் குறித்தும் விளக்கப்படுகின்றன.

### 6.1 மெய்ப்பாடு

மெய் என்பது உடம்பையும் உண்மையையும் குறிக்கும். மெய்யிற்படுதல் மெய்ப்பாடு ஆகும். அச்சம் தரும் பொருளைக் கண்டு மனிதன் உள்ளத்தில் தோன்றுவது அச்சச் சுவை எனப்படும். அது காரணமாக அவன் உள்ளத்திலே தோன்றும் கலக்கமும் மறைதற் கருத்தும் குறிப்பு எனப்படும். அக்குறிப்பின்வழி அவனது உடம்பில் வெளிப்பட்டுத் தோன்றும் நடுக்கமும் வியர்த்தலும் சத்துவம் எனப்படும். நடுக்கமும் வியர்ப்பும் ஆகிய சத்துவங்கள் அச்சமுற்றானாகிய அவனுக்கேயன்றி, அஞ்சி ஓடிவரும் அவனைக் கண்ட ஏனையோருக்கும் நன்கு புலனாவன குறிப்பும் அவையுணர்வும் ஆகிய ஏனையவை அவன் மன நிகழ்ச்சிகளாகும். அச்சமுற்றோன் மனத்தே நிகழும் அச்சம், அவனுடம்பில் தோன்றும் நடுக்கம், வியர்ப்பு முதலிய புறக்குறிகளால் காண்போர்க்குப் புலனாகும் தன்மையே மெய்ப்பாடு எனக் கொள்ளப்படும்.

*"உய்த்துணர் வின்றித் தலைவரு பொருண்மையின்*
*மெய்ப்பட முடிப்பது மெய்ப்பா டாகும்"*

(செய் : 196)

உய்த்துணர்ச்சியின்றிச் செய்யுளிடத்துச் சொல்லப்படும் பொருள்தானே வெளிப்பட்டாங்கு கண்ணீர் அரும்பல், மெய்ம்மயிர் சிலிர்த்தல் முதலாகிய சத்துவம் படுமாற்றான் வெளிப்படச் செய்வது மெய்ப்பாடு என்னும் உறுப்பாம்.

### 6.2 மெய்ப்பாட்டின் வகை

*"பண்ணைத் தோன்றி எண்ணான்கு பொருளும்*
*கண்ணிய புறனே நானான் கென்ப"* (1)
*"நாலிரண் டாகும் பாலுமா ருண்டே"* (2)

1. புறத்து நிகழும் பொருள் எத்தனை?

விளையாட்டு ஆயத்தின்கண் தோன்றி 32 பொருளையுங் குறித்ததன் புறத்து நிகழும் பொருள் 16 என்று கூறுவர்.

புறத்து நிகழும் 16 என்பன சுவை; குறிப்பு என்ற இரண்டனுள் அடங்கும். அவற்றுள் சுவை 9. அவை : வீரம், அச்சம், இழிப்பு, வியப்பு, காமம், அவலம், உருத்திரம், நகை, நடுவு நிலைமை.

குறிப்பு - 9 அவை : வீரக்குறிப்பு, அச்சக் குறிப்பு, இழிப்புக் குறிப்பு, வியப்புக் குறிப்பு, காமக் குறிப்பு, அவலக் குறிப்பு, உருத்திரக் குறிப்பு, நகைக் குறிப்பு, நடுவு நிலைமைக் குறிப்பு.

இப்பதினெட்டனுள் நடுவு நிலைமை (சுவை) நடுவுநிலைமைக் குறிப்பு (குறிப்பு) என்ற இரண்டு நீங்கலாக உள்ள 16 ஆகும்.

மேற்கூறப்பட்ட 16 பொருளும் எட்டாக வரும் இடமும் உண்டு. அவை : குறிப்புப் பதினெட்டனையும் சுவையுள் அடக்கிச் சுவை எட்டுமாக்கி நிகழ்த்தல்.

*"நகையே அழுகை இளிவரல் மருட்கை*
*அச்சம் பெருமிதம் வெகுளி உவகையென்று*
*அப்பால் எட்டே மெய்ப்பா டென்ப"* (3)

2.மெய்ப்பாடு எத்தனை வகை?

நகை, அழுகை, இளிவரல், மருட்கை, அச்சம், பெருமிதம், வெகுளி, உவகை என்ற இவ்வெட்டினையும் மெய்ப்பாடு என்று சொல்லுவர் சான்றோர்.

நகை என்பது இகழ்ச்சியிற் பிறப்பது. அழுகை என்பது அவலத்திற் பிறப்பது. இளிவரல் என்பது இழிப்பிற் பிறப்பது. மருட்கை என்பது வியப்பிற் பிறப்பது. அச்சம் என்பது அஞ்சத் தகுந்தனவற்றால் பிறப்பது. பெருமிதம் என்பது வீரத்திற் பிறப்பது. வெகுளி என்பது வெறுக்கத்தக்கனவற்றாற் பிறப்பது. உவகை என்பது சிருங்காரத்திற் பிறப்பது.

## 6.3 எண்வகை மெய்ப்பாடுகள்

மேற்கூறியவாறு மெய்ப்பாடுகள் எட்டு. இந்த எட்டு வகை மெய்ப்பாடுகள் தோன்றுவதற்கான களன்கள் மொத்தம் 32 (8 x 4 = 32) ஆகும்.

3. நகை தோன்றும் பொருள்கள் யாவை?

நகை :

*"எள்ளல் இளமை பேதைமை மடனென்று*
*உள்ளப்பட்ட நகைநான் கென்ப"* (4)

எள்ளல், இளமை, பேதைமை, மடன் எனப்பட்ட நான்கும் நகை தோன்றுவதற்குரிய பொருள்களாகும்.

| | | |
|---|---|---|
| எள்ளல் | : | தான் பிறரை எள்ளுதல்; பிறர் தன்னை எள்ளுதல் (எ.டு) 'நகையாகின்ற தோழி' |
| இளமை | : | 'குழவி கூறும் மழலை' |
| பேதைமை | : | கவற்சி பெரிதுற்றரைப் போர் கூற்று |
| மடன் | : | மடவோர் சொல்லும் சொல் |

4. அழுகை தோன்றும் பொருள்கள் யாவை?

அழுகை :

*"இழிவே இழவே அசைவே வறுமையென*
*விளிவில் கொள்கை அழுகை நான்கே"* (5)

இழிவும், இழித்தலும், அசைதலும், வறுமையும் என்ற நான்கிடத்தும் அழுகை தோன்றும்.

இழிவு : "ஐயோ எனில் யான்புலியஞ் சுவலே"

இழிவு : உயிர் பொருள் இழத்தல்

அசைவு : தன்னிலை தாழ்தல்

வறுமை : நல்குரவினால் அழுதல்

இளிவரல் : *"மூப்பே பிணியே வருத்தம் மென்மையோடு*
*யாப்புற வந்த இளிவரல் நான்கே"* (6)

மூப்பும், பிணியும், வருத்தமும், மென்மையும் என்னும் நான்கின் பொருளிலும் இளிவரல் தோன்றும்.

5.பிணியினால் உண்டாகும் மெய்ப்பாடு எது?

மூப்பு : 'தாழாந் தளராக தலைநடுங்காத் தண்டூன்றா'

பிணி : 'மாக்கேழ் மடநல்லாய்'

வருத்தம் : 'தொடர்ப்படு ஞமலியின்

மென்மை : 'அறஞ்சாரா நல்குரவு ஈன்றாதாயினும்
பிறன்போல் நோக்கப்படும்' (குறள் : 1047)

மருட்கை : *"புதுமை பெருமை சிறுமை ஆக்கமொடு*
*மதிமை சாலா மருட்கை நான்கே"* (7)

புதுமை, பெருமை, சிறுமை, ஆக்கம் என்னும் நான்கிடத்தும் அறிவு நிரம்பப்பெறாத வியப்புத் தோன்றும்.

6. மருட்கை தோன்றும் பொருள்கள் யாவை?

புதுமை : "பொலம்பூ வேங்கை நலங்கிளர் கொழுநிழல்

..............................................

இறும்பூது போலும் அஃதறிந்தருள் நீயென

பெருமை : "..........பெருந்தேர்யானும் ஏறிய தறிந்தன் றல்லது"

சிறுமை : "கடுகின்கண் பலதுளை"

ஆக்கம் : "நல்கூர்ந்தான் ஒருவன் ஆக்கமுறுதல்"

அச்சம் : *"அணங்கே விலங்கே கள்வர்தம் இறையெனப்*
*பிணங்கல் சாலா அச்சம் நான்கே* (8)

தெய்வம், விலங்கு, கள்வர், அரசர் என்னும் நால்வகையாலும் அச்சம் உண்டாகும்.

7. விலங்கு காரணமாகத் தோன்றும் மெய்ப்பாடு யாது?

அணங்கு : "யானை தாக்கினும் அரவு மேற்செலினும்"

விலங்கு : "மையல் வேழம் மடங்கலின் தெரிதர"

கள்வர் : திருடரால் வரும் அச்சம்

8. அணங்கு என்றால் என்ன?

இறை : கொலை, களவு, கள், காமம், பொய் என்பனவற்றை நிகழ்த்தியதற்குத் தம் அரசனால் வரும் அச்சம்.

பெருமிதம்: "கல்வி தறுகண் புகழ்மை கொடையெனச்
சொல்லப்பட்ட பெருமிதம் நான்கே" (9)

9. பெருமிதம் எவற்றின் காரணமாகத் தோன்றும்?

கல்விச்சிறப்பு, தறுகண்மை, புகழ்மை, கொடைத்தன்மை என்று சொல்லப்பட்ட நான்கு வகையாலும் பெருமிதமானது தோன்றும்.

*"அடன்மாமேல் ஆற்றுவேன் என்னை மடன்மா மேன்*
*மன்றம் படர்வித் தவள்"* (கலி. 141)

இது தறுகண் பற்றிய பெருமிதம்.

வெகுளி : *"உறுப்பறை குடிகோள் அலைகொலை என*
*வெறுப்பின் வந்த வெகுளி நான்கே"* (10)

உறுப்புக்களைக் குறைத்தல், குடிப்பிறப்புக்குக் கேடு சூழ்தல். கோல் கொண்டலைத்தல் கொலைக்கு ஒருப்படுதல் என்னும் நால்வகையான வெறுக்கத்தக்க செயல்களால் வெகுளி உண்டாகும்.

எ.டு

10.கொலையினரால் வரக் கூடிய மெய்ப்பாடு?

*"உறுதுப் பஞ்சா துடல் சினஞ் செருக்கி*
*சிறுசொற் சொல்லிய சினங்கெழு வேந்தரை*
*அருஞ்சமஞ் சிதையத் தாக்கி முரசமொடு"* (புறம் : 72)

இது கொலை பொருளாக வந்த வெகுளி.

உவகை :

11. உவகை எவற்றுள் காரணமாகத் தோன்றும்?

*"செல்வம் புலனே புணர்வு விளையாட்டென*
*அல்லல் நீத்த உவகை நான்கே"* (11)

செல்வநுகர்ச்சி, ஐம்புலன்களால் நுகர்தல், காமநுகர்ச்சி, விளையாட்டு ஆகிய நான்கினாலும் உவகை தோன்றும்.

எ.டு

*"தம்மிலிருந்து தமது பாத் துண்டற்றால்*
*அம்மா அரிவை முயக்கு"* (குறள் : 1107)

இதன்கண் 'தமதுபாத்துண்டற்றால்' என்றதனால் செல்வ உவகையும், அரிவை முயக்கு என்றதனால் புணர்வு உவகையும் வந்தன.

## 6.4 பிற மெய்ப்பாடுகள்

மேலே விளக்கப்பட்ட எண்வகை மெய்ப்பாடுகள் தவிர உடைமை தொடங்கி நடுக்கம் ஈறாக உள்ள 32 மெய்ப்பாடுகளும் உண்டு.

12. நடுவு நிலைமை என்பது யாது?

1. உடைமை : யாதானும் ஒரு பொருளை உடையனாயினால் உண்டாகும் மனநிகழ்ச்சி
2. இன்புறல் : நட்டாராகிப் பிரிந்து வந்தோரைக் கண்டவழி வருவதோர் மனநிகழ்ச்சி
3. நடுவுநிலைமை : ஒரு மருங்கு ஓடாது நிகழும் மனநிகழ்ச்சி
4. அருளல் : எல்லா உயிர்க்கும் அளிசெய்தல்

5. தன்மை : ஒருவரிடத்து இயற்கையாகக் கிடக்கும் இயல்பு

6. அடக்கம் : மனம், மொழி, மெய்யின் அடங்குதல், பணிந்த மொழியினைக் கூறுதல் ஆடையினை மடக்குதல், வாய் புகைத்தல் போல்வன 'அடக்கம்' எனப்படும்.

13. அடக்கம் என்றால் என்ன?

7. வரைவு : செய்ய வேண்டியவைகளை செய்தும் நீக்க வேண்டியவைகளை நீக்கியும் ஒழுகுதல்

14. வரைவு என்றால் என்ன?

8. அன்பு : பயின்றார் மாட்டு செய்யும் காதல்

9. கைம்மிகல் : குற்றமாயினும் குணமாயினும் அளவில் மிகுதல்

10. நலிதல் : பிறரை வருத்தல்

11. சூழ்ச்சி : சூழ்ச்சி என்பது எண்ணம்

12. வாழ்த்தல் : பிறரை வாழ்த்துதல்

13. நாணல் : தமக்குப் பழி வருவன செய்யாமை

14. துஞ்சல் : உறக்கம்

15. அரற்று : உறக்கத்தின்கண் வரும் வாய்ச் சோர்வு

15. வெரூ உதல் என்றால் என்ன?

16. களவுநிலை : கனவு காண்டல்

17. முனிதல் : வெறுத்தல்

18. நினைதல் : கழிந்து போன ஒன்றினை நினைத்தல்

19. வெரூஉதல் : அச்சம்போல நீடு நில்லாது விரைவாகத் தோன்றி மறையும் ஒரு குறிப்பு

20. மடி : சோம்பல்

16. மடி என்பது யாது?

21. கருதல் : குறிப்பு

22. ஆராய்ச்சி : ஒரு பொருளைக் குறித்து அதன் இயல்பு எத்தன்மைத்து' என ஆராய்தல்

23. விரைவு : கடிதின் முடித்தல் வேண்டுமெனக் குறித்த மனநிகழ்ச்சி

24. உயிர்ப்பு : எப்போதும் போல் அல்லாது மூச்சினை நீளவிடுதல். (பெருமூச்சு)

17. 'உயிர்ப்பு' என்பது யாது?

25. கையாறு : காதலர் பிரிந்தால் வருந்துன்பமும் அந்நிகரனவும் வருவது.

26. இடுக்கண் : துன்பமுறுதல்

27. பொச்சாப்பு: மறத்தல்

28. பெறாமை : பிறர்க்கு ஆக்கம் முதலிய கண்டவழி அதனைப் பெறாது நடக்கும் மனநிகழ்ச்சி அழுக்காறு என்பதும் இதுவே.

29 வியர்த்தல் : தன் மனத்தின் வெருட்சி தோற்றியவழிப் பிறப்பதோர் புழுக்கம்

18. வியர்த்தல் எப்போது ஏற்படும்?

30. ஐயம் : ஒரு பொருளைக் கண்டவழி இதுவெனத் துணியாத நிலைமை

31. மிகை : ஒருவனை நன்கு மதியாமை

32. நடுக்கம் : யாதானும் ஒரு பொருளை கிழக்கின் றோமென வரும் மனநிகழ்ச்சி (12)

## 6.5 ஐந்திணைக்குரிய மெய்ப்பாடுகள்

தொல்காப்பியர் ஐந்திணைக்குரிய மெய்ப்பாடுகளை 8 நூற்பாக்களில் குறிப்பிடுகின்றார். அவை அனைத்தும் அகத்திற்கே உரிய மெய்ப்பாடுகள் ஆகும்.

*"புகுமுகம் புரிதல் பொறிநுதல் வியர்த்தல்*
*நகுநய மறைத்தல் சிதைவு பிறர்க் கின்மையொடு*
*தகுமுறை நான்கே ஒன்றென மொழிப"* (13)

களவியலில் சுட்டப்பட்ட அவத்தைகள் (துன்பங்கள்) பத்து. அவை காட்சி முதல் சாக்காடு வரையிலாகும். இவை அனைத்தும் பெண்பாலர் குறிப்பினால் வருவன.

19. முதல் அவத்தையின் மெய்ப்பாடுகள் யாவை?

தலைமகன் புணர்ச்சிக்குறிப்பினாய்ப் புகு முகத்தினை மாறுபடாது பொருந்துதல். நெற்றி வியர்வை அடையப்பெறுதல், நகை உண்டாதலை மறைத்தல், மனன் அழிதலைப் பிறர்க்குப் புலனாகாது மறைத்தல். இவ்வாறு தகுதியுடைத்தாய் முறைப்பட வரும் நான்கும் முதல் அவத்தைக்கண் நிகழும் மெய்ப்பாடு ஆகும்.

**இரண்டாம் நிலைக்குரிய மெய்ப்பாடு**

20. ஊழலை கைவரல் எதற்குரிய மெய்ப்பாடு?

1. கூழை விரித்தல் : காதல் மேல் வேட்கை செல்லுமானால் வாளாது நிற்றலாற்றாது மயிரினைக் குறைத்தல்.

2. காதொன்று களைதல் : காதில் அணிந்தது ஒன்றை விழப்பண்ணி அதனை தேடுகின்றார் போல நிற்றல்.

3. ஊழணி தைவரல் : முறைமுறையாக அணிந்த அணியைத் தடவுதல்.

4. உடைபெயர்த்து உடுத்தல் : ஆடையைக் குறைத்து உடுத்தல் ஆகிய நான்கும் இரண்டாவது அவத்தையின் மெய்ப்பாடுகளாகும். (14)

**மூன்றாம் நிலைக்குரிய மெய்ப்பாடு :**

21.மூன்றாவது நிலைக்குரிய மெய்ப்பாடுகள் யாவை?

1. அல்குல் தைவரல் : மேல் உடை பெயர்த்து உடுத்தவள் அதனைப் பேணும் மதிப்பு உள்வழித் தம்மைப் பேணுதல். இது பெண்டிர்க்கு அழகு.

2. அணிந்தவை திருத்தல் : அணிந்த அணிகலன்களைத் திருத்தல்.

3. இல் வலியுறுத்தல் : தம் இற்பிறப்புச் சொல்லி இசைவில்லாரைப் போல் மறுத்துக் கூறுதல்.

4. இருகையும் எடுத்தல் : அங்ஙனம் மறுத்துக் கூறினும், தன் இரண்டு

கையினையும் வேறோர் காரணம் பற்றிக் கிளர்த்தல். தலைமகன் முன்னர்ப் பெண்டிர் கை கிளர்த்தல் மரபன்று. ஆனால் புணர்ச்சிக்கு ஒருப்பட்ட உள்ளத்தையுடைய தலைவி கிளர்த்துவாள். இந்நான்கும் மூன்றாவது அவத்தையின் மெய்ப்பாடுகள் ஆகும். (15)

**நான்காம் நிலைக்குரிய மெய்ப்பாடு :**

1. பாராட்டெடுத்தல் : தலைமகள் நின்ற நிலையும் கூறிய கூற்றையும் தனித்திருக்கும் போது எடுத்து மொழிதல்.

2. மடந்தப உரைத்தல் : பெண்டிரது இயல்பாகிய மடப்பம் கெடச்சில கூறுதல்.

3. ஈரமில் கூற்றம் ஏற்று அலர் நாணுதல் : ஊராரும், சேரியாரும் கூறும் அருள் இல்லாத கூற்றைக் கேட்டு அலர் ஆயிற்று என நாணுதல்.

4. கொடுப்பவை கோடல் : கண்ணி ஆயினும் தழை ஆயினும் பிற ஆயினும் தலைமகன் கொடுத்தவற்றை ஏற்றுக் கொள்ளுதல்.

இந்நான்கும் நான்காம் நிலைக்குரிய மெய்ப்பாடுகள் ஆகும். (16)

**ஐந்தாம் நிலைக்குரிய மெய்ப்பாடுகள் :**

1. தெரிந்துடம் படுதல் : தலைமகன் கொடுப்பவை கொண்ட தலைமகள் ஆராய்ந்து உடம்படுதல்

2. திளைப்பு வினை மறுத்தல் : விளையாட்டு ஆயமொடு திரிபவள் வேட்கை நலிதலால் அவ்விளையாட்டு வினையை மறுத்தல்.

22.கரந்திடத்து ஒழிதல் என்றால் என்ன?

3. கரந்திடத்து ஒழிதல் : தலைமகனைக் காணும் வேட்கையால் ஒளிந்திருந்து படத்தின்முன் நின்று மொழிதல்.

4. கண்டவழி உவத்தல் : தலைமகனைக் கண்டபோது மகிழ்தல்.

என்னும் நான்கும் ஐந்தாம் நிலைக்குரிய மெய்ப்பாடுகள் ஆகும்.(17)

**ஆறாம் நிலைக்குரிய மெய்ப்பாடுகள் :**

1. புறஞ் செயச் சிதைத்தல் : தலைமகள் கோலம் செய்யும் வழி அதற்கு மகிழ்ச்சியின்றிச் சிதைவுடையவள் ஆதல்.

2. புலம்பித் தோன்றல் : பொலிவு அழிந்து தோன்றல்

3. கலங்கி மொழிதல் : கூறும் கூற்றுக் கலக்கமுற்றுக் கூறுதல்.

4. கையறவு உரைத்தல் : செயலறவு தோன்றக் கூறுதல் என்னும் நான்கும் ஆறாம் நிலைக்குரிய மெய்ப்பாடுகள் ஆகும். இம்மெய்ப்பாடுகள் புணர்ச்சி இல்லாதபோது தோன்றுதலே பெரும்பான்மை. (18)

மேற் கூறப்பட்டனவும், அத்தன்மையன பிறவும் அவற்றோடு பொருந்தி நிலைபெற்ற வினையுடைய நிமித்தமாம் என்பர். அன்ன பிறவுமாவன, நோக்கானை நோக்கி இன்புறல், நோக்குங்காலைச் செற்றார் போல நோக்குதல், மறைந்து காண்டல், தற்காட்டுறுத்தல் போல்வன.

மொத்தம் அவத்தைகள் பத்து. அவற்றுள் ஏழாவது அவத்தை

(நோக்குவ எல்லாம் அவையே போறல்) பெருந்திணைப் [illegible]ற்படும். எட்டாவது அவத்தை உன்மத்தம். ஒன்பதாவது அவத்தை மயக்கம், பத்தாவது அவத்தை சாக்காடு, முதல் ஆறு அவத்தை மட்டுமே ஐந்திணைக்குரியனவாகும். (19)

உயிர் மெலிந்த விடத்துக் கரண நிகழ்ச்சி (திருண நிகழ்வு) இல்லாமற் போதலும் உண்டு. அதாவது இயற்கைப் புணர்ச்சி நிகழும். கரண நிகழ்ச்சி நடப்பதே பெரும்பான்மை. (20)

### 6.6 கைக்கிளைக்குரிய மெய்ப்பாடு

*"அவையும் உளவே அவையலங் கடையே"* (21)

களவும், கற்பும் ஆகிய ஐநதிணை அல்லது கைக்கிளைப் பொருண்மைக் கண்முற் கூறிய 'புகுமுகம் புரிதல்' முதலான மெய்ப்பாடுகளும் உண்டு.

### 6.7 பெருந்திணைக்குரிய மெய்பாடு

பெருந்திணைக்குரிய மெய்ப்பாடுகளாக தொல்காப்பியர் சுட்டுவன 20 ஆகும்.

23. பெருந் திணைக்குரிய மெய்ப்பாடுகள் எத்தனை?

இன்பத்தை வெறுத்தல், துன்பத்தின் கண்ணே புலம்புதல், தலைமகன் முன்னின்று அவனின்றாகச் செய்துகொண்டு வருந்துதல் (எதிர் பெய்து பரிதல்) குற்றம் ஆராய்தல், உண்ணாமை (பசியட நிற்றல்), பசலை பரத்தல், உணவு சுருங்குதல், உண்ணாமை காரணமாகத் தன் உடம்பு மிகச் சுருங்குதல், உறங்காமை, கனவை நனவென மயங்குதல், தலைவன் கூற்றுத் தன்னைப் பொய்யாக் கோடல், உரைத்த மாற்றத்தை மெய் எனக் கூறுதல், தலைவன் குறிப்புக் கண்டு ஐயப்படுதல். தலைவனின் தமரைக் (உறவினர்) கண்டபோது உவத்தல், அறத்துணை அழித்துக் கூறுதல், அறன் அழிந்து உரைக்குமிடத்து நெஞ்சு அழிந்து கூறுதல், யாதானும் ஓர் உடம்பாயினும் தன்னோடு கோடல், தலைமகனோடு ஒக்கும் எனப் பிறிதொன்று கண்ட வழி உவத்தல். தலைவனின் பெயர் கேட்டு மகிழ்தல், கலங்குதல் என்னும் 20 ம் பெருந்திணைக்குரிய மெய்ப்பாடுகள் ஆகும். (22)

### 6.8 மனன் அழியாத நிலையில் நிகழ்வன

இதனை வரைதல் வேட்கைக்குரிய மெய்ப்பாடுகள், வரைந்தபின் நிகழும் மெய்ப்பாடுகள் என இரண்டாகப் பகுப்பர்.

வரைவு வேட்கைக்குரிய மெய்ப்பாடுகள்

24. வரைவு வேட்கைக்குரிய மெய்ப்பாடுகள் எத்தனை?

*"முட்டுவயிற் கழநல் முனிவு மெய்ந் நிறுதல்*
*அச்சத்தின் அகறல் அவன் புணர்வு மறுத்தல்*
*தூதுமுனிவின்மை துஞ்சிச் சேர்தல்*
*காதல் கைம்மிகல் கட்டுரை யின்மையென்று*
*ஆயிரு நான்கே அழிவில் கூட்டம்"* (23)

களவு இடையீடுபட்டவிடத்து வருந்தாது இவ்வாறாகி நின்றதென அவனைக் கழிறியுரைத்தல், வெறுப்பினைப் பிறர்க்குப் புலனாகாமல் மெய்க்கண் நிறுத்தல். அச்சத்தினால் கூட்டத்தின் அகன்று ஒழுகுதல். அவனுடைய சேர்க்கைளை விலக்குதல். தூது விட்ட வழி வெறுக்காமை, கவலையால் உறங்காமையின்றி உரிமை பூண்டமையால் உறக்கம் நிகழ்தல். காதல் அளவு கடந்து வருதல் கூற்று நிகழ்த்தாமல் உள்ளக் கருத்தினை மறைத்து அமர்ந்திருத்தல் என்னும் எட்டும் வரைவு வேட்கைக்குரிய மெய்ப்பாடுகள் ஆகும்.

**வரைந்தபின் நிகழும் மெய்ப்பாடுகள் :**

வரைந்தபின் நிகழும் மெய்ப்பாடுகள் பத்து ஆகும். அவை, தெய்வத்தினை அஞ்சுதல், குற்றமற்ற அறத்தினைத் தேர்ந்து தெளிதல், இல்லாததனை உள்ளதாகக் கொண்டு வெறுத்தல், தலைவனது தலையளியை வெறுத்தல், மனநிகழ்ச்சி உண்மையைக் கூறல், பொழுதினை மறுத்தல், அருள் புலப்பட நிற்கும் நிலை, அன்பு புலப்பட நிற்றல், பிரிவினைப் பொறாமை, மறைத்த ஒழுக்கத்தைக் கூறிய புறஞ்சொல் ஆகும்.

25. வரைந்த பின் நிகழும் மெய்ப்பாடுகள் எத்தனை?

## 6.9 தலைவன் தலைவிக்குரிய ஒப்புமைப் பண்புகள் :

தலைவன் தலைவிக்குரிய ஒப்புமைப் பண்புகளாகத் தொல்காப்பியர் பத்தினைக் குறிப்பிடுகின்றார்.

*“பிறப்பே குடிமை ஆண்மை ஆண்டோடு*
*உருவு நிறுத்த காம வாயில்*
*நிறையே அருளே உணர்வொடு திருவென*
*முறையுறக் கிளந்த ஒப்பினது வகையே”* (25)

26. தலைவன் தலைவிக்கான ஒத்த பண்புகள் எத்தனை?

ஒத்தக் குலப்பிறப்பு, ஒத்த ஒழுக்கம், ஒத்த ஆள்வினையுடைமை, ஒத்த ஆண்டு (வயது) ஒத்த அழகு, ஒத்த அன்பு, ஒத்த நிறை (சால்பு) ஒத்த அருள், ஒத்த அறிவு, ஒத்த செல்வம் ஆகிய பத்தும் தலைவன் தலைவிக்குரிய ஒப்புமைகளாகும்.

### 6.9.1 காமக் குறிப்பிற்கு ஆகாதன

| | | |
|---|---|---|
| நிம்பிரி | : | அழுக்காறு |
| கொடுமை | : | அறன் |
| வியப்பு | : | தம்மைப் பெரியராக நினைத்தல் |
| பிறமொழி | : | புறங்கூறுதல் |
| வன்சொல் | : | கடுஞ்சொற் கூறல் |
| பொச்சாப்பு | : | தம்மைக் கடைபிடியாமை |
| மடிமை | : | முயற்சியின்மை |
| குடிமை இன்புறல் | : | தன் குலத்தினாலும் தன் குடிப்பிறப்பினாலும் தம்மை மதித்து இன்புறல் |

ஏழைமை : பேதைமை

மறப்பு : யாதென்றாலும் கற்றதனையும் கேட்டதனையும் பயின்றதனையும் மறத்தல்

ஒப்புமை : தான் காதலிக்கப்பட்டாரைப் போல்வாரைக் கண்டவழி அவர் போல்வார் என ஒப்பிட்டு நினைத்தல்

இவை அனைத்தும் காதலுக்கு ஆகாத குற்றங்கள் ஆகும். (26)

### 6.9.2 மெய்ப்பாட்டின் நுட்பம்

*"கண்ணினும் செவியினும் திண்ணிதின் உணரும்*
*உணர்விடை மாந்தர்க் கல்லது தெரியின்*
*நன்னயப் பொருள்கோள் எண்ணருங் குரைத்தே"* (27)

கண்ணினாலும் செவியினாலும் நன்றாக அறிந்து கொள்ளும் அறிவுடைய மக்கட்கல்லாது மெய்ப்பாட்டுப் பொருள் கொள்ளுதல் ஆராய்தற்கு அருமையுடையது ஆகும்.

### 6.10 தொகுப்புரை

இலக்கியங்களைப் படித்து இன்புறுவதற்கு இங்கு சுட்டப்படுகின்ற எண்வகை மெய்ப்பாடுகள் அடிப்படையான கூறாகும்.

இம்மெய்ப்பாடுகள் அன்பின் ஐந்திணைக்குரியதாகவும், கைக்கிளைக்கும் பெருந்திணைக்கும் உரியனவாகவும் காணப்படுகின்றன. இவை இலக்கியங்களைப் படித்து இன்புறுதற்குப் பயன்படுகின்றன.

**வினாவிற்கேற்ற விடைகள்**

| | | |
|---|---|---|
| 1,2 | - 6.2 | ஐப் பார்க்க |
| 3,4,5,6,7,8,9,10,11 | - 6.3 | " |
| 12,13,14,15,16,17,18 | - 6.4 | " |
| 19,20,21,22 | - 6.5 | " |
| 23 | - 6.7 | " |
| 24,25 | - 6.8 | " |
| 26 | - 6.9 | " |

**பக்க வினாக்கள்**

1. மெய்ப்பாடு என்றால் என்ன? விளக்குக
2. மெய்ப்பாட்டின் வகை குறித்து எழுதுக.
3. கைக்கிளை, பெருந்திணைக்குரிய மெய்ப்பாடுகள் யாவை?
4. மனன் அழியாத நிலையில் நிகழ்வன குறித்து விளக்கு.
5. தலைவன், தலைவிக்கான ஒத்த பண்புகளும், ஒவ்வாத பண்புகளும் குறித்து எழுதுக.

**கட்டுரை வினாக்கள்**

1. மெய்ப்பாடு, அது தோன்றுவதற்கான களன்கள் குறித்து விளக்கிக் கட்டுரைக்க.
2. ஐந்திணைக்குரிய மெய்ப்பாடுகள் குறித்து விளக்கிக் கட்டுரை வரைக.
3. எண்வகை மெய்ப்பாடுகள் நீங்கலான பிற மெய்ப்பாடுகள் குறித்துக் கட்டுரைக்க.

# அலகு - 7

## உவமவியல்

### அறிமுகம்

உவமவியல் என்னும் இப்பகுதியில் உவமை, உவமையின் பாகுபாடு, உவமையின் நிலைக்களன்கள், உவம உருபுகள் உள்ளுறை உவமம் போன்றன விளக்கப்படுகின்றன.

### நோக்கம்

இப்பாடத்தைப் பயில்வதன் வாயிலாக உவமையின் இயல்பினை அறிவதோடு செய்யுளுக்கு அழகு சேர்ப்பது உவமை என்னும் தெளிவினை மாணவர்கள் பெறுவார்கள்.

மேலும் செய்யுளின்கண் எந்தெந்த அடிப்படையில் உவமைகள் கையாளப்படும் என்பதை அறிவதோடு உவமையில் இருந்து உள்ளுறை எங்ஙனம் வேறுபடுகின்றது என்னும் தெளிவினையும் மாணவர்கள் பெறுவர்.

**பாடம் - 7 உவமவியல்**

**பொருளடக்கம்**

7.1 உவமை

7.2 உவமைப் பாகுபாடு

7.3 உவமைக்குரிய நிலைக்களன்

7.3.1 முதலும் சினையும் பற்றி வருதல்

7.3.2 உருபின்றி வரல்

7.4 உவமையின் சிறப்பியல்புகள்

7.5 உவம உருபுகள்

7.5.1 வினை உவம உருபுகள்

7.5.2 பயனுவம உருபுகள்

7.5.3 மெய்யுவம உருபுகள்

7.5.4 உருவுவம உருபுகள்

7.6 உவமை வேறுபாடு

7.7 உள்ளுறை உவமம்

7.8 உவமை கூறுதற்குரியார்

7.8.1 தலைவி

7.8.2 தோழி

7.8.3 தலைவன்

7.8.4 நற்றாய், செவிலி முதலானோர்

7.9 வேறுபட வந்த உவமத் தோற்றம்

7.10 தொகுப்புரை

**பாடம் - 7 உவமவியல்**

மெய்ப்பாட்டியல் என்னும் பாடத்தின்கண் செய்யுளின்கண் மெய்பாடு எவ்வாறு பயன்படுத்தப்படும். அதன் வகைகள் முதலானவை விளக்கப்பட்டன. இப்பாடத்தில் உவமை, அதன் பாகுபாடு, அதன் நிலைக்களன், உவம உருபுகள், உள்ளுறை உவமம் போன்றவை விளக்கப்படுகின்றன.

**7.1 உவமை**

மனிதன் என்று தோன்றினானோ அன்றே உவமை என்பதும் தோன்றியிருக்க வேண்டும். இலக்கியத்தை அழகுபடுத்தும் முதல் அணி அல்லது தாயணி உவமையேயாகும். அது காலத்தால் முற்பட்டது. அதன் பொருட்டே தொல்காப்பியர் உவமையியலில் விளக்கியுள்ளார். உவமையே தொன்மை மிக்க அணி என்பதில் ஐயமில்லை. தமிழ்க் கவிதைக்கே உரிய தனிப்பட்ட சிறப்புடையது உள்ளுறை உவமம் ஆகும். இவற்றை எல்லாம் உள்ளடக்கிய ஓர் இயலாக விளங்குவது தொல்காப்பியம் கூறிய உவமையியல், 'போலச் செய்தல்' என்ற உள்ளுணர்வால் உருவானதே.

உவமை என்பது ஒரு பொருளோடு ஒரு பொருளினை ஒப்புமை கூறுமுகமாக அப்பொருளினுடைய வண்ணம், வடிவு, தொழில், பயன் முதலிய இயல்புகளை நன்கு புலப்படும்படி செய்வதாகிய பொருட் புலப்பாட்டு நெறியாகும். மெய்ப்பாடு பற்றித் தோன்றி வழங்குவது உவமையாதலின் மெய்ப்பாட்டியலுக்குப் பின்னர் உவமையியலை வைத்தார்.

**7.2 உவமப் பாகுபாடு**

உவமேயம் (பொருள்) உவமானம் (உவமை) என்பதனை அடிப்படையாகக் கொண்டு தோன்றுகின்ற உவமை நான்காகப் பாகுபடுத்தப்படுகிறது.

1. உவமை எத்தனை வகையாகப் பாகுபடுத்தப் படுகிறது?

*"வினைபயன் மெய்உரு என்ற நான்கே*
*வகைபெற வந்த உவமைத் தோற்றம்* (1)

உவமையானது வினை உவமை, பயன் உவமை, மெய் அல்லது வடிவ உவமை, உரு, அல்லது நிற உவமை என நால் வகையாகப் பாகுபாடு செய்யப்படுகிறது.

2. பயன் உவமைக்குச் சான்று தருக.

**வினை உவமை** : புலி போலப் பாய்ந்தான்

**பயன் உவமை** : 'மாரியன்ன வண்கை'

**மெய் / வடிவ உவமை** : 'துடிபோலும் இடை'

**உரு / நிற உவமை** : 'தளிர் போலும் மேனி'

3. "________ மேற்றே உள்ளுங் காலை"

ஒரு பொருளோடு ஒரு பொருளைக் கூறுங்கால் மேற்கூறிய நான்கு பாகுபாடுகளில் ஒன்றும் பலவும் ஓர் உவமையில் விரவியும் வரும் என்பர்.2

*"உயர்ந்ததன் மேற்றே உள்ளுங் காலை* (3)

உவமை அமைக்கும் பொழுது உவமிக்கப்படும் பொருளாகிய உவமேயத்தைவிட அதன் இயல்பினைப் புலப்படுத்தற் பொருட்டு எடுத்துக் கூறப்படும் உவமை உயர்ந்த பொருளாக அமைய வேண்டும்.

எ.டு

*"அரிமா அன்ன அணங்குடைத் துப்பின்*

*(பட்டி.பாலை. 298)*

வலிமையான பொருள்கள் பல இருந்தாலும், அரிமா (சிங்கம்) உயர்ந்தது ஆதலில் அஃது உவமையாகக் கூறப்பட்டது.

### 7.3 உவமைக்குரிய நிலைக்களன்

4. உவமைக் குரிய நிலைக்களன் யாவை?

*"சிறப்பே நலனே காதல் வலியோடு*
*அந்நாற் பண்பும் நிலைக்களன் என்ப"* (4)

உவமையானது சிறப்பு, நலன், காதல், வலி என்ற நான்கனுள் ஒன்றை நிலைக்களமாகக் கொண்டு தோன்றும்.

சிறப்பு : "முரசு முழங்கு தானை மூவரும் கூடி அரசவை இருந்த தோற்றம் போலப் பாடல் பற்றிய பயனுடை எழாஅல் கோடியர் தலைவ கொண்ட தறிந" (பொருந : 54 - 57)

*நலன் : "ஓவத் தன்ன வியனுடை வரைப்பின்* *(புறம் : 25)*
*காதல் : "பாவை யன்ன பலராய் மாண்கவின்"* *(அகம் : 98)*
*வலி : "அரிமான் அன்ன அணங்குடைத் துப்பின் திருமா வளவன்"*
*(பட்டி : பாலை : 298)*

5. '______ ______ ஐந்தும் ஆகும்'

*"கிழக்கிடும் பொருளோ டைந்தும் ஆகும்"* (5)

மேற்கூறப்பட்ட நான்கும் ஒழியத் தாழ்ந்த பொருளோடு உவமை தோன்றும்.

எ.டு

*அரவுநுங்கு மதியின் நுதல் ஒளி கரப்பு* *(அகம் : 33)*

இராகு என்ற பாம்பினால் விழுங்கப்பட்டு ஒளியிழந்த திங்கள் போன்ற தலைவியின் நெற்றி என்பது இதன் பொருள்.

#### 7.3.1 முதலும் சினையும் பற்றி வரல்

உவமை கூறுமிடத்து முதலும் சினையும் என்று கூறப்படும் இருவகைப் பொருட்கும் கருதிய மரபினால் அவற்றிற்கு ஏற்பவை உவமையாதற்கு உரியனவாம். அஃதாவது முதலொடு முதலும், சினையோடு சினையும், சினையோடு முதலும் வேண்டிய வற்றால் உவமம் செய்வதற்கு உரிய அங்ஙனம் செய்யுங்கால் மரபு பிறழாமல் செய்ய வேண்டும். (6)

எ.டு

*"அடைமரை ஆயிதழ்ப் போதுப்போல் கொண்ட*
*குடைநிழல் தோன்றும் நின் செம்மலைக் காணூஉ*
*(கலி: 4)*

செம்மல் - முதல், போது - சினை. இங்கு முதல் பொருளுக்குச் சினைப்பொருள் உவமமானது.

### 7.3.2 உருபின்றி வரல்

*"சுட்டிக் கூறா உவமம் ஆயின்*
*பொருளெதிர் புணர்த்துப் புணர்ந்தன கொளலே"* (7)

குறிப்பிட்டுச் சொல்லாத உவமமாக இருக்குமானால் உவமச் சொல்லோடு பொருந்த உவமிக்கப்படும் பொருளோடு சேர்ந்து உவமை வாய்பாடு கொள்ளுதல் வேண்டும்.

6. சுட்டிக் கூறா உவமம் என்றால் என்ன?

உவமிக்கப்படும் பொருளுக்கு உவமை இது எனச் சுட்டிக் கூறாதது சுட்டிக் கூறா உவமம் ஆகும்.

எ.டு

*"மோப்பக் குழையும் அனிச்சம் முகந்திரிந்து*
*நோக்கக் குழையும் விருந்து"* *(குறள் : 90)*

அனிச்சப்பூ மோந்தால் குழையும், விருந்தினர் மாறுபட்டு நோக்கக் குழைவர். என்பது இதன் பொருள். இதன்கண் 'அதுபோல்' என்பது சுட்டிக் கூறப் பெறவில்லை. ஆகையால் இது சுட்டிக் கூறா உவமம் எனப்படும்.

7. '________ ________ ஒத்தல் வேண்டும்'

### 7.4 உவமையின் சிறப்பியல்புகள்

*"உவமையும் பொருளும் ஒத்தல் வேண்டும்"* (8)

இரட்டைக் கிளவியாயினும் நிரல் நிறுத்து அமைத்த நிரல்நிறைச் சுண்ணமாய் வரினும் மிக்கும் குறைந்தும் வருதலன்றி, உவமை அடை அடுத்து வரினும் தொழிற்பட்டு வரினும் ஒன்றும் பலவுமாகிய வரினும் வருமொழியும் அவ்வாறே வருதல் வேண்டும். அவ்வழி வராது. மிகக் குறைந்து வருவது குற்றம் என்றவாறாம். எனவே உவமை பொருள் என்னும் இரண்டும் ஒத்ததாகவே அமைந்திருத்தல் வேண்டும்.

உவமிக்கும் பொருளை உவமமாக்கிக் கூறினும், மயக்கமற்ற சிறப்பு நிலைமையான் எய்தும் உவமமாகும். (9)

உவமையும் பொருளும் முற்கூறியவாறு ஒத்தன கூறலேயன்றிப் பெருகக் கூறலும் சிறுகக் கூறலும் முன் சொல்லப்பட்ட சிறப்பு என்ற நிலைக்களத்தினின்று நீங்காச் சிறப்பின் வரவேண்டும். இதுவே நெறியாகும். (10)

### 7.5 உவம உருபுகள் :

உவமத்தினையும் பொருளினையும் ஒப்புமைப்படுத்திக் கூறுங்கால் இவற்றிடையே உவமை உணர்த்தும் சொற்கள் அல்லது உருபுகள் இடம் பெறல் உண்டு. அங்ஙனம் வருகின்ற உருபுகளாக 36 உருபுகளைச் சுட்டுகிறார் தொல்காப்பியர்.

8. தொல்காப்பியத்தில் இடம் பெறும் உவம உருபுகள் எத்தனை?

அன்ன ஏய்ப்ப, உறழ, ஒப்ப, என்ன, மான என்று சொல்லப்பட்டட ஆறும் ஒன்ற, ஒடுங்க, ஒட்ட, ஆங்க, என்ற, வியப்ப என்று சொல்லப்பட்ட ஆறும், எள்ள, விழைய, இறப்ப, நிகர்ப்ப, கள்ள, கடுப்ப என்று சொல்லப்பட்ட ஆறும் காய்ப்ப, மதிப்ப, தகைய, மருள, மாற்ற, மறுப்ப என்று சொல்லப்பட்ட ஆறும், புல்ல, பொருவ, பொற்ப, போல, வெல்ல, வீழ என்று சொல்லப்பட்ட ஆறும் நாட, நளிய, நடுங்க, நந்த, ஓட, புரைய என்று சொல்லப்பட்ட ஆறும் என 36 உருபுகளும் இவை போலவன பிறவும் உவம உருபுகளாக வரும். (11)

#### 7.5.1 வினையுவம உருபுகள்

9. வினை உவம உருபுகள் எத்தனை?

அன்ன, ஆங்க, மான, இறப்ப, என்ன, உறழ, தகைய, நோக்கு என்னும் இவ்வெட்டும் வினையுவம உருபுகள் ஆகும். (12)

10. 'அன்னவென் கிளவி ______ சிவனும்'

எ.டு

*"பலர் புகழ் ஞாயிறு கடற்கண்டா ஆங்கு"*
*"அன்னவென் கிளவி பிறவொடுஞ் சிவணும்"* (13)

அவற்றுள் அன்ன என்னும் சொல் வினை உவமைக்கு மட்டுமின்றி பிற உவமைக்கும் வரும்.

எ.டு

"மாரி அன்ன வகை" - பயனுவமை

"அருவிருந்தன்ன கண் கூடு சிறுதுளை' - மெய்யுவமை

செவ்வான் அன்ன மேனி - உருவவுமை

#### 7.5.2 பயனுவம உருபுகள்

11. பயனுவம உருபுகள் இரண்டினைச் சுட்டுக.

எள்ள, விழைய, புல்ல, பொருவ, கள்ள, மதிப்ப, வெல்ல, வீழ என்னும் எட்டும் பயனுவமைக்குரிய சொற்களாகும். (14)

எ.டு *"மழைவிழை தடக்கை வாய்வாள் எவ்வி"*

#### 7.5.3 மெய்யுவம உருபுகள்

12. மெய்யுவம உருபுகள் எத்தனை?

கடுப்ப, ஏய்ப்ப, மருள, புரைய, ஒட்ட, ஒடுங்க, ஓட்ட, நிகர்ப்ப என்னும் எட்டும் மெய்யுவம உருபுகள் ஆகும். (15)

எ.டு *"விண்ணதிர் இமிழிசை கடுப்ப"*

### 7.5.4 உருவுவம உருபுகள்

13. நளிய, நந்த எவ்வகை உவம உருபுகள்?

போல, மறுப்ப, ஒப்ப, காய்ந்த, நேர, வியப்ப, நளிய, நந்த என்ற எட்டும் உருவுவமச் சொற்களாம். (16)

எ.டு

*"தன்சொல் உணர்ந்தோர் மேனி*
*பொன்போற் செய்யும் ஊழ் கிழ வோனே"*
*"தத்தம் மரபில் தோன்றுமன் பொருளே"* (17)

மேலே பாகுபாடு உணர்த்தப்பட்ட சொற்கள் முன் கூறி வகையாளன்றித் தத்தம் மரபில் தோன்றும் பொருளும் உள என்பர்.

### 7.6 உவமை - வேறு பாகுபாடு

*"நாலிரண் டாகும் பாலுமா ருண்டே"* (18)

மேற் சொல்லப்பட்ட உவமை நான்கு வகையாதலே அல்லாமல் எட்டாதலும் உண்டு. அவை வினை, வினைக்குறிப்பு, நன்மை, தீமை, வடிவு, அளவு, நிறம், குணம் என்ற எட்டாகும்.

பெருமை பற்றியும் சிறுமை பற்றியும் ஒப்புமை கொள்ளப்படும் உவமை, மேற்கூறிய மெய்ப்பாடு எட்டின் வழிப் பக்கம் புலப்படத் தோன்றுமென்று புலவர் கூறுவர். (19)

**உவமும் பொருளும் :**

உவமப் பொருளாலே சொல்லுவான் குறிக்கப்பட்ட பொருளை உணர்ந்து தெளியும் பக்கமும் கூறுபாட்டியலான் உள்ளதாம். (20)

உவமப் பொருளை உவமிக்கப்படும் பொருளாக உணரும் போது பொருந்திய மரபினால் ஆகிய வழக்கோடு வரும். (21)

**இரட்டைக் கிளவி :**

*"இரட்டைக் கிளவியும் இரட்டை வழித்தே"* (22)

இரட்டைக் கிளவியாவது உவமை இரண்டு சொல்லோடு அடுத்து வருவதனோடு உவமிக்கப்படும் பொருளும் இரண்டு பொருளாகி வருதல் வேண்டும்.

### 7.7 உள்ளுறை உவமம்

உள்ளுறை உவமம் பற்றி அகத்திணையியல் என்னும் முதல் பாடத்திலும் விளக்கப்பட்டுள்ளது.

14. உள்ளுறை உவமத்தில் உவமேயம் எங்ஙனம் வரும்?

உவமைப் பொருளைத் தந்து மேலும் அவை முழுவதும் சேர்ந்து உள்ளே ஒரு பொருளை அடக்கி நிற்குமாறு கவிதை செய்யும் முறை ஒன்று உண்டு. இதனையே 'உள்ளுறை உவமம்' எனத் தமிழறிஞர் கூறுவர். அகப்பொருள் பாடல்களில் பெரும்பாலும் பயின்று வருவது உள்ளுறை உவமம். இதில் வெளிப்படையாகத் தோன்றும் கருத்துக்கள் உள்ளே

அடிப்படையாக உறைந்து கொண்டிருக்கும் கருத்துக்களுக்கு உவமையாக வரும்படி அமைக்கப் பெற்றிருக்கும். வெளிப்படை உவமத்தில் அதாவது ஏனை உவமத்தில் உவமேயம் நன்கு தெரியும். உள்ளுறை உவமத்தில் உவமேயம் வெளிப்படையாகப் புலனாகாது.

*"பிறிதொடு படாது பிறப்பொடு நோக்கி*
*முன்ன மரபிற் கூறுங் காலைத்*
*துணிவொடு வரூஉம் துணிவினோர் கொளினே"* (23)

உவமைப் பொருள் தான் அல்லாதபடியினால் உவமைப் பொருளோடு படாது பொருள் தோன்றிய இடத்தோடு நோக்கி, முன்னம் மரபினாற் சொல்லுங் காலத்துத் துணிவுடையோர் கொளின் அவர் துணிந்த துணிவின் கண்ணே உள்ளுறை உவமம் வரும்.

உள்ளுறை உவமத்தை உவமப் போலி என்றும் கூறுவர்.

*"உவமப் போலி ஐந்தென மொழிப"* (24)

உவமப்போலி ஐந்து என்று கூறுவர்.

கெடுதற்கரிய சிறப்பினை உடைய அதன் தன்மையை ஆராய்ந்தால் வினை, பயன், மெய், உரு, பிறப்பு எனவரும் தன்மை உடையன. (25)

### 7.71 வினை உவமப் போலி

எ.டு *"கரும்பு நடு பாத்திக் கலித்த தாமரை*
*சுரும்பு பசி களையும் பெரும்புன லூர* (குறுந் : 65)

15. உவமப் போலி எத்தனை?

தலைக்கு என அமைந்த இல்லறத்தில் இற்பரத்தைப் புகுந்து தலைவனின் காமப்பசியைத் தீர்க்கின்றதைத் தலைவி கூறுவதாக இப்பாடல் உள்ளது. இங்கு சுரும்பு பசிகளையும் தொழிலோடு தலைவனின் காமப்பசி இணைக்கப்பட்டதால் இது தொழில் உவமப் போலி ஆனது.

**பயன் உவமப் போலி :**

*"கரைசேர் வேழம் கரும்பிற் பூக்கும்*
*துறைகேழ் ஊரன்.....* (ஐங் : 12)

நீர் நிலைகளின் கரையிலே நிற்கும் வேழக் கரும்பு அல்லது பொய்க் கரும்பு உண்மைக் கரும்பு போலவே பூக்கின்ற துறைகளுடைய ஊரன்' என்ற பொருள்பட நிற்கிறது இப்பாடல். கரும்பு போல் பயன்தராத வேழக் கரும்பு பூத்து நிற்பது சுட்டப்படுவதால் இது பயன் உவமப்போலி.

**மெய் உவமப் போலி :**

*"ஒன்றேன் அல்லென் ஒன்றுவென் குன்றத்துப்*
*பொருகளிறு மித்த நெறிதாள் வேங்கை*
*குறவர் மகளிர் கூந்தற் மெய்ம்மார்*
*நின்றுகொய மலரும் நாடனொடு*
*ஒன்றேன் தோழி ஒன்றி னானே"* (குறுந் : 208)

இதில் நானும் யானை போன்ற தலைவனால் மிதியுண்ட வேங்கை போலாகி, அவ்வேங்கை (மரம்) குறை உயிரோடு மலர்ந்தாற் போல் ஊரார் எல்லாம் அலர்தூற்றக் குற்றுயிரோடு உள்ளேனாயினேன்" என்று சுட்டப்படுவதால் இது மெய் உவமப் போலி ஆனது.

**உரு உவமப் போலி**

*"கண்ணறுங் குவளை நாறித்*
*தண்ணென் றிசினே பெருந்துறைப் புனலே"* (ஐங் : 73)

குவளை மலர் போன்ற கண்களைக் கொண்ட தலைவி களவு மணம் தந்து தண்ணென்றாள் என்பதே உட்பொருள். இப்பொருள் அமைவதால் இஃது உரு உவமப் போலி ஆனது.

**பிறப்புவமைப் போலி**

*"பொங்கைப் பற்றிப் புலவுநாறு நீர்நாய்*
*வளை நாளிரை பெறூஉ மூர*
*எந்நலந் தொலைவ தாயினும்*
*தன்னலம் பெருமபிறர் தோய்ந்த மார்பே"* (ஐங் : 63)

'நல்ல குலத்திற் பிறந்தும் இழிந்தாரைத் தோய்ந்தமையால் அவர் நாற்றமே நாறியது. அவரையே பாதுகாவாய் மேற்குலத்துப் பிறந்த எம்மைத் தீண்டற்க" என்ற பொருள் தந்து நிற்றலால் இது பிறப்புவமைப் போலி ஆனது.

### 7.8 உவமை கூறுதற்குரியார்

தலைவி, தோழி, தலைவன், நற்றாய், செவிலி முதலானோர் உவமை கூறுதற்குரியராவர்.

#### 7.8.1 தலைவி

16. 'கிழவி சொல்லின்

*"கிழவி சொல்லின் அவளறி கிளவி"* (26)

உவமப் பொருளைத் தலைமகள் கூறுவாளானால் அவளறிந்த பொருட் கண்ணே உவமை கூறுதல் வேண்டும். எனவே தானறியாத பொருட்கண் உவமை கூறினாள் எனச் செய்யுள் செய்தல் கூடாது.

எ.டு

*"தாமரைத் தண்தா தூதி மீமிசைச்*
*சாந்தின் தொடுத்த தீந்தேன்"* (நற்: 1)

17. கிழவோட் குவமை

தலைமகள் உவமை கூறுங்கால் மகிழ்ச்சியளிக்கும் கூற்றும் துன்பம் அளிக்கும் கூற்றும் என ஈரிடத்தும் உரித்தாகும். (30)

*"கிழவோட் குவமை ஈரிடத் துரித்தே"* (31)

உவமைக்கண் மகிழ்ச்சியும் துன்பமும் தோன்றும். இது தலைமகளுக்கும் உரித்தாகும்.

### 7.8.2 தோழி

18. தோழிக் காயின் ————

*"தோழிக் காயின் நிலம்பெயர்ந் துரையாது"* (27)

தோழி உவமை சொல்லின் அந்நிலத்தில் உள்ளன அல்லாமல் பிறநிலத்தில் உள்ளவைகளைக் கூறப்பெறாள்.

*"சிறுகோட்டுப் பெரும்பழம் தூங்கியாங்கிவள்*
*உயிர்தவச் சிறிது காமமோ பெரிதே"*

தோழியும் செவிலியும் உவமை கூறும்போது கேட்போர் கொள்ளும் வகையாற். பொருந்துமிடம் பார்த்துக் கூறுதற்குரியர் ஆவர். (33)

### 7.8.3 தலைவன்

19.'________ உரனொடு கிளக்கும்'

*"கிழவோற் காயின் உரனொடு கிளக்கும்* (29)

தலைமகன் உவமை கூறுவானாயின் அறிவொடு கூறப்படும்.

எ.டு

*"கிளிபுரை கிளவியாய் எம்மொடு நீவரின்*
*தளிமொழி தளிரன்ன எழில்மேனி கவின்வாட்"*
*(கலி. பாலை: 12)*

20.'கிழவோற் காயின் ________'

*"கிழவோற் காயின் இடம் வரைவின்றோற்"* (32)

தலைமகன் உவமை கூறுங்கால் எப்பொருட் கண்ணும் உவமை கூறலாம்.

### 7.8.4 நற்றாய், செவிலி முதலானோர்

21. 'ஏனோர்க் கெல்லாம் ________'

*"ஏனோர்க் கெல்லாம் இடம்வரை வின்றே"* (29)

தலைமகன், தலைமகள், தோழி என்னும் இம்மூவரும் அல்லாத நற்றாய், செவிலி முதலாயினார்க்கு உவமை கூறுமிடம் வரையறுக்கப்பட்டது.

## 7.9 வேறுபட வந்த உவமத் தோற்றம்

*"வேறுபட வந்த உவமைத் தோற்றம்*
*கூறிய மருங்கிற் கொள்வழிக் கொளாஅல்"* (34)

உவமையின்றி சொல்லப்பட்ட உவமை இலக்கணத்தின் வேறுபட்டு வந்த உவமைத் தோற்றம் முன்னர்ச் சொல்லிய நெறியில் கொள்ளும் வழி கொள்ளுதல் வேண்டும் என்பர்.

உவமையை உவமிக்குப்படும் பொருளினின்றும் நீக்கிக் கூறலும் பொருந்திய இயல்பாகும். (35)

#### உவமைத் தன்மை கூறல்

பயனிலை புரிந்த வழக்கின்கண் உவமிக்கப்படும் பொருளோடு உவமை தோன்ற வருதலேயன்றி உவமையது தன்மை கூறலும் உவமையாதற்கு உரித்து என்பர். (36)

**உவமையில் ஐயம் :**

*"தடுமாறு வரலுங் கடிவரை வின்றே"* (37)

உவமைக்கண் தடுமாறுதல் (ஐயப்படுதல்) வருதலும் நீக்கப்படாது.

எ.டு

*"கூற்றமோ கண்ணோ பிணையோ மடவரல்*
*நோக்கம் இம் மூன்றும் உடைத்து"* (குறள் : 1085)

உவமை பல அடுக்கித் தோற்றுதல் ஒரு பொருளோடு தோற்றும் தொடரையுடையதாகப் பல உவமை வருதல் வரிசை வரிசையாக அமைத்தல். உவமையையும் பொருளையும் துணிந்து ஒட்டுதல் என்பனவற்றுள், ஆமென்று வரையறுக்கப்பட்ட நிரல் நிறுத்தமைத்தல் முதலிய மூன்றும் அல்லாதவிடத்து, அடுக்கியல் உவமை கடியப்படும். (38)

## 7.10 தொகுப்புரை

எல்லா அணிகளுக்கும் தாயாக விளங்கும் உவமையணியே எல்லா அணிகளிலும் எளிமையானது. இவ்வுமையானது மனிதனது உணர்வோடும், அறிவோடும் தொடர்புடையது எனில் மிகையில்லை.

மெய்ப்பாடு, உவமை போன்றன செய்யுளுக்கு அழகு சேர்ப்பதற்கே. அதன் பொருட்டே இவ்வியல்களுக்குப் பின்னே செய்யுளியலைத் தொல்காப்பியர் அமைத்துள்ளார்.

**வினாவிற்கேற்ற விடைகள்**

| | | |
|---|---|---|
| 1,2,3 | - | 7.2 ஐப் பார்க்க |
| 4,5 | - | 7.3 ” |
| 6 | - | 7.3.2 ” |
| 7 | - | 7.4 ” |
| 8 | - | 7.5 ” |
| 9,10 | - | 7.5.1 ” |
| 11 | - | 7.5.2 ” |
| 12 | - | 7.5.3 ” |
| 13 | - | 7.5.4 ” |
| 14,15 | - | 7.7 ” |
| 16,17 | - | 7.8.1 ” |
| 18 | - | 7.8.2 ” |
| 19,20 | - | 7.8.3 ” |
| 21 | - | 7.8.4 ” |

**பக்க வினாக்கள்**

1. உவமை என்றால் என்ன? அது எங்ஙனம் பாகுபாடு செய்யப்படுகிறது?
2. உவமைக்குரிய நிலைக்களன்கள் யாவை?
3. உவமை கூறுதற்குரியவர்கள் யாவர்? விளக்குக.
4. உவமையின் சிறப்பியல்புகள் குறித்து விளக்கி எழுதுக.

**கட்டுரை வினாக்கள்**

1. ‘உவமை’ குறித்துக் கட்டுரைக்க.
2. உவம உருபுகள் குறித்து விளக்கிக் கட்டுரை வரைக.
3. உள்ளுறை உவமம் குறித்துக் கட்டுரை வரைக.

# அலகு - 8

# செய்யுளியல் - யாப்பியல் உறுப்புகள்

### அறிமுகம்

செய்யுளியல் - யாப்பியல் உறுப்புகள் என்னும் இப்பகுதியில் செய்யுள் உறுப்புகளுள் யாப்பியல் உறுப்புகளான மாத்திரை, எழுத்து, அசை, சீர், அடி, யாப்பு, மரபு, தூக்கு, தொடை, நோக்கு, பா, அளவியல், துணை, கைகோள், கூற்று, கேட்போர், களன், காலம், பயன், மெய்ப்பாடு, எச்சம், முன்னம், பொருள், துறை, மாட்டு, வண்ணம் ஆகியன விளக்கப்படுகின்றன.

### நோக்கம்

மெய்ப்பாடு, உவமை என்பனவற்றைச் செய்யுளின்கண் பயன்படுத்துவதற்கு செய்யுளுக்குரிய உறுப்புகளைச் சரியாகப் பயன்படுத்தவும், கண்டறியவும் வேண்டும். அதன் பொருட்டே மாணவர்கள் செய்யுள் பற்றிய தெளிவான சிந்தனையினைப் பெறும் வகையில் இப்பகுதி அமைக்கப்பட்டுள்ளது.

**பாடம் - 8 செய்யுளில் - யாப்பியல் உறுப்புகள்**

**பொருளடக்கம்**

## பாடம் - 8 செய்யுளியல் - யாப்பியல் உறுப்புகள்

மெய்ப்பாடு, உவமை என்னும் கூறுகள் செய்யுளுக்கு அடிப்படையானவையாகும். அதன் பொருட்டே இவ்விரு இயல்களுக்குப் பின்னால் செய்யுளியலை வைத்தார் தொல்காப்பியர். பொருளதிகாரத்தின் எட்டாவது இயலாக விளங்குவது செய்யுளியல். இது செய்யுள் இலக்கண உணர்த்தினமையால் இப்பெயர் பெற்றது. முன்னைய இயல்களில் சொல்லப்பட்ட பொருள் அனைத்திற்கும் இஃது இடமாதலின் அவற்றின் பின் வைக்கப்பட்டது என்பர் இளம்பூரணர்.

இச் செய்யுளியலில் உள்ள செய்யுள் உறுப்புகளை யாப்பியல் உறுப்புகள் என்றும் செய்யுள் உறுப்புகள் பிரிக்கலாம். யாப்பியல் உறுப்புகள் என்னும் இப்பகுதியில் 34 செய்யுள் உறுப்புகளுள் மாத்திரை முதல் வண்ணம் வரையிலான யாப்பியல் உறுப்புகள் விளக்கப்படுகின்றன.

எழுத்து மொழி தோன்றியதும் இலக்கியம் எழுந்தது, தமிழில் உரைநடைக்கு முன் பாட்டே தோன்றி வளர்ந்தது. பாட்டின் வாயிலாகவே தம் கருத்தை வெளிப்படுத்தினர்.

தொல்காப்பியத்திலேயே வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா என்னும் நால்வகைப் பாக்கள் காணப்படுகின்றன. இதிலிருந்து தொல்காப்பியர் காலத்திற்கு முன்பே பாக்களைப் பற்றிய இலக்கணநூல்கள் வழக்கில் இருந்திருக்க வேண்டும். இவ்விலக்கணங்களையெல்லாம் மனத்துள் கொண்டே தொல்காப்பியர் செய்யுளியலை வகுத்து அதறக்கான இலக்கணத்தினைத் தொகுத்துரைத்தார். செய்யுளியலில் மட்டுமின்றி எழுத்து, சொல்லிலும் செய்யுள் தொடர்பான செய்திகள் காணப்படுகின்றன. எழுத்ததிகாரத்தில் மொழி மரபு - 17, உயிர் மயங்கியல், 86 சொல்லதிகாரத்தில் எச்சவியல் - 1, 67 போன்ற நூற்பாக்களில் செய்யுள் பற்றிய செய்திகள் காணப்படுகின்றன.

### 8.1 செய்யுளுறுப்புகள்

1.செய்யுளுறுப்புகள் எத்தனை?

செய்யுள் உறுப்புகள் மொத்தம் 34 ஆகும். அவை மாத்திரை, எழுத்து, அசை, சீர், அடி, யாப்பு, மரபு, தூக்கு, தொடை, நோக்கு, பா, அளவியல், திணை, கைகோள், கூற்றுவகை, கேட்போர், களன், காலம், பயன், மெய்ப்பாடு, எச்சவகை, முன்னம், பொருள், துறை;; மாட்டேறு, வண்ணம் அம்மை, அழகு, தொன்மை, தோல், விருந்து, இயைபு, புலன், இழைபு என்பனவாகும். (1)

### 8.2 மாத்திரையும் எழுத்தும்

எழுத்தின் கால அளவே மாத்திரை எனப்படும்.

*"கண்ணிமை நொடியென அவ்வே மாத்திரை*
*நுண்ணிதின் உணர்ந்தோர் கண்ட வாறே"* (எழுத்து: 7)

என்று தொல்காப்பிய எழுத்ததிகாரத்திலே மாத்திரைக்கான

இலக்கணத்தினை வகுத்துள்ளார்

எழுத்தியல் வகைகளாக

"எழுத்தெனப் படுப
அகர முதல்
னகர இறுவாய் முப்பஃதென்ப
சார்ந்து வரல் மரபின் மூன்றலங் கடையே" (எழுத்து : 1)
அவற்றுள்
குற்றியலிகரம் குற்றியலுகரம் ஆய்தம் என்ற
முப்பாற் புள்ளியும் எழுத்தோ ரன்ன" (எழுத்து : 2)

என்று குறிப்பிடுகின்றார் தொல்காப்பியர் அதன் பொருட்டே

அவற்றுள்

மாத்திரை வகையும் எழுத்தியல் வகையும்
மேற்கிளந் தனவே என்மனார் புலவர்

என்று இலக்கணம் வகுக்கப்பட்டுள்ளது. அதாவது மேற்கூறப்பட்டவற்றுள், மாத்திரை வகையும் எழுத்தியல் வகையும் எழுத்ததிகாரத்தில் கூறப்பட்டன என்று புலவர் கூறவர் என்பதாம்.

### 8.3 அசை

2. அசை என்பது யாது?

அசை என்பது எழுத்துக்கள் சேர்ந்து வரும் முறை, சீருக்கு உறுப்பாய் வருவது. (2)

"குறிலே நெடிலே குறிலிணை குறில்நெடிலே
ஒற்றொடு வருதலொடு மெய்ப்பட நாடி
நேரும் நிரையும் என்றுசிற் பெயரே"

3. அசை எத்தனை வகைப்படும்? யாவை?

அசை நேரசை, நிரையசை என இரண்டு வகைப்படும்.

நேரசை, நிரையசை என இரண்டு வகைப்படும்.

4.நேரசைக்குச் சான்று ஒன்று தருக.

நேரசை

| | | |
|---|---|---|
| குறில் தனித்து வருவது | - | ப |
| குறில் ஒற்றொடு வருவது | - | பல் |
| நெடில் தனித்து வருவது | - | பா |
| நெடில் ஒற்றொடு வருவது | - | பால் (4) |

5. 'படா' எத்தகைய அசை?

நிரையசை

| | | |
|---|---|---|
| குறில் இணைந்து வருவது | - | பல |
| குறில் இணைந்து ஒற்றொடு வருவது | - | பலம் |
| குறில் நெடில் இணைந்து வருவது | - | படா (5) |

குறில் நெடில் இணைந்து ஒற்றொடு வருவது - படாம்.

6.குற்றியலுகரம் முற்றியலுகரம் பெற்றுவரின் ‘அசை’ எத்தகைய பெயர் பெறல்.

மேற்கூறப்பட்ட நேர், நிரை என்ற இரண்டசைகளும் குற்றியலுகரம், முற்றியலுகரம் என்பவற்றுள் ஒன்றை இறுதியில் பெற்றுப் பிளவுபடாது ஒரு சொல் தன்மை எய்திவரின், அவை முறையே நேர்பு, நிரைபு என்னும் இருவகை அசைகளாகும். ஆனால் தனிக் குறிறெழுத்தாகிய நேரசையின் பின் இங்ஙனம் இருவகை உகரமும் வந்து நேர்பு அசையாதல் இல்லை.(6)

எ.டு

நேர்பு - காது, காற்று, கன்று

காவு, சார்பு, கல்லு

7. இயலசை என்பது யாது?

நிரைபு- வரகு, அரக்கு, மலாடு

பனாட்டு, கதவு

8. ‘நேர்பு’, ‘நிரைபு’ என்ற அசைகளின் பெயர் என்ன?

*“இயலசை முதலிரண் டேனவை உரியசை”* (7)

நேரசை, நிரையசை - இயலசை

நேர்பசை, நிரைபசை - உரியசை (8)

என்று பெயர் பெறும்.

தொடர்மொழிக் கண் மொழி சிதைந்து தனிக்குறில் நேரசை ஆகாது. (9)

9. தொடர் மொழிக் கண் குறில் நேரசை யாகுமா?

எ.டு

*“அணிநிழ லசோகமர்ந் தருளெறி நடாத்திய”*

இதனை

அ
ணி
நி
ழ

} இவை அனைத்தும் குறில் தனித்து வந்த நேரசை எனப் பிரித்தல் கூடாது.

10.குற்றியலு கரம் அலகு பெறுமா?

குற்றியலுகரம் ஒற்றெழுத்தின் இயல்பினை உடையதாகும். அலகு பெறாதபோது ஒற்றின் தன்மையைப் பெறும். (10)

முற்றியலுகரம் மொழி சிதைந்து நேர்பசை, நிரைபசை என்று உரைக்கப்படாது. அஃது ஈற்றடி மருங்கின் தனியசையா நிற்றலும் இல்லை.

எ.டு

*“அங்கண் மதியம் அரவுவாய்ப் பட்டெனை”*

‘அரவு’ என்ற முற்றுகர வீற்றுச் சொல்லை அர+வு எனப் பிரித்தல் மொழி சிதையும். எனவே ‘அரவு’ எனக் கொண்டு நிரைபசை எனல் வேண்டும்.

*“பெருமுத் தரையர் பெரிது வந் தீயும்”*

பெருமு என்பது, ‘அரவு’ என்பது போன்ற தனிச்சொல் இல்லை

'பெரு முத்தரையர்' என்ற ஒரு சொல். எனவே பெருமு என்பதை நிரைபு எனக் கொண்டால் மொழி சிதைவு ஏற்படும். எனவே

பெரு - நிரை } புளிமா எனக்
முத் - நேர் } கொள்ளல் வேண்டும்.

குற்றியலுகரமும், முற்றியலுகரமும் ஒற்றோடுத் தோன்றித் தனியசையாக நிற்கவும் பெறும்.

*"அசையுஞ் சீரும் இசையொடு சேர்த்து*
*வகுத்தனர் உணர்த்தல் வல்லோர் ஆறே"*

அசையையும் சீரையும் ஓசையோடு சேர்த்துப் பாகுபாடு உணர்தல் வல்லோர்கள் வகுத்த நெறியாகும். அஃதாவது பொருளோடு சொல்லை அறிந்தவழித் தளையும் சீரும் சிதைந்தால் அவ்வழி ஓசையை நோக்கி அதன்வழி சேர்த்துக் கொள்ள வேண்டும். இதனை 'வகையுளி' என்பர்.

எ.டு

*"மலர்மிசை யேகினான் மாணடி சேர்ந்தார்*
*நிலமிசை நீடுவாழ் வார்"*

ஈற்றடியில் 'நீடுவாழ்' என்றும் 'வார்' என்றும் பிரிந்தால் மட்டுமே வெண்பாவுக்குரிய செப்பலோசையோடு வரும்.

**8.4 சீர்**

அசைகளால் ஆனது சீர் ஆகும்.

*"ஈரசை கொண்டு மூவகை புணர்ந்தும்*
*சீரியைந் நிற்றது சீரெனப் படுமே"*

இரண்டு அசைகொண்டு புணர்ந்தும் மூன்றசை கொண்டு புணர்ந்தும் ஓசை பொருந்தியது சீர் எனப்படும். 11. சீர் எத்தனை வகைப்படும்?

சீர் இரண்டு வகைப்படும். (11)

1. இயற்சீர் : மேற் சொல்லப்பட்ட அசைகளில் இயலசை மயங்கி வருவன இயற்சீர் எனப்படும். (12) 12. 'இயற்சீர்' எவ்வாறு வரும்?

2. உரிச்சீர் : உரியசை மயங்கி வருவன உரிச்சீர் எனப்படும்.

மயங்குதலாவது ஒருங்கு வருவது. (13) 13. உரிச்சீர் எவ்வாறு வரும்?

நேர் நேர் - தேமா

நிரை நேர் - புளிமா

நிரை நிரை - கருவிளம்

நேர் நிரை - கூவிளம்

இவை இயற்சீர் எனப்படும்.

நேர்பு நேர்பு - ஆற்றுநோக்கு

நிரைபு நேர்பு - வரகு சோறு

நிரைபு நிரைபு - வரகு தவிடு

நேர்பு நிரைபு - ஆற்று வரவு

இவை உரிச்சீர் எனப்படும்.

*"முன் நிரை யுறினும் அன்ன வாகும்"*

நேர்பு, நிரைபு என்னும் அசைகளுக்குப் பின் நிரை வந்தால் உரிச்சீர் ஆகும்.

நேர்பு நிரை - ஆற்று மடை

நிரைபு நிரை - குளத்து மடை (2)

14.உரியசைக்குப் பின் நேர்வரின்

இவை உரிச்சீர்.

உரியசைக்குப் பின் நேர்வரின் இயற்சீர் ஆகும். (14)

நேர்பு நேர் - ஆற்றுக் கால்

நிரைபு நேர் - குளத்துக் கால்

இவை (2) இயற்சீர் ஆகும்.

15. ஈரசைச் சீர்கள் மொத்தம் எத்தனை?

இயலசைக்குப் பின் உரியசைவரின் நிரையசை வந்ததுபோல் கொண்டு இயற்சீர் என்பார்.

நேர் நேர்பு - மாங் காடு

நிரை நேர்பு - களங்காடு

நேர் நிரைபு - பாய் குரங்கு

16. இயற்சீர் மொத்தம் எத்தனை?

நிரை நிரைபு - கடி குரங்கு

இவை (4) இயற்சீர் எனப்படும்.

ஈரசைச் சீர்கள் மொத்தம் - 16

17. உரிச்சீர் எத்தனை?

இயற்சீர் - 10

உரிச்சீர் - 6

அளபெடை :

18.அளபெடைகள் எத்தனை வகைப்படும்? அவை?

*"அளபெடை அசைநிலை ஆகலும் உரித்தே"*
*"ஒற்றள பெடுப்பினும் அற்றென மொழிப"*

அளபெடைகள் இரண்டாகும். அவை உயிரளபெடை, ஒற்றளபெடை ஆகும். இவ் அளபெடைகள் அசையாக நிற்கவும் பெறும். (18)

எ.டு

கடா அ உருவொடு

இதனை கடா - நிரை } புளிமா
அ - நேர்

என்றால்தான் வெண்பாவின் இலக்கணம் பொருந்தும். இதில் அளபெடையாக வந்த 'அ' என்ற எழுத்தை வெறும் அசையாகத் தள்ளிவிடாமல் நேரசையாகக் கொள்ள வேண்டும்.

*'கண்ண் டண்ண்ணெண்ணக் கண்டும் கேட்டும்'*

உயிரளபெடை போன்றே ஒற்றளபெடையையும் கொள்ள வேண்டும்.

**உரிச்சீர் :**

இயற்சீரின் இறுதியில் நேர் அசை நிற்குமானால், அவ்வாறு வருகின்ற நான்கும் வெண்பா உரிச்சீர் ஆகும். 18

19. வெண்பா உரிச்சீர் எத்தனை?

நேர் நேர் நேர் - மா வாழ் கான்

நிரை நேர் நேர் - புலி வாழ் கான்

நிரை நிரை நேர் - புலி வரு கான்

நேர் நிரை நேர் - மா வரு கான்

இவற்றை முறையே தேமாங்காய், புளிமாங்காய், கூவிளங்காய், கருவிளங்காய் என்றும் கூறுவர்.

**வஞ்சி உரிச்சீர் :**

முன்னர் கூறப்பட்ட ஈரசைச் சீர்கள் - 16. இவற்றுடன் 'நேர்' என்ற அசையினைச் சேர்த்தால் மூவகைச் சீர் 16 ஆகும்.

20. வஞ்சி உரிச்சீர் எத்தனை?

நேர் நேர் நேர் - மா வாழ் கான்

நிரை நேர் நேர் - புலி வாழ் கான்

நிரை நிரை நேர் - புலி வரு கான்

நேர் நிரை நேர் - மா வரு கான் ] - வெண்பா உரிச்சீர்

நேர்பு நேர்பு நேர் - ஆற்று நோக்கு கான்

நிரைபு நிரைபு நேர் - வரகு தவிடு கான்

நேர்பு நிரைபு நேர் - ஆற்று வரவு கான்

நேர்பு நிரை நேர் - ஆற்று மடை கான்

நிரைபு நிரை நேர் - குளத்து மடை கான்

நேர்பு நேர் நேர் - ஆற்றுக் கால் கான்

நிரைபு நேர் நேர் - குளத்துக் கால் கான்

நேர் நேர்பு நேர் - மாங் காடு கான்

நிரை நேர்பு நேர் - களங் காடு கான்

நேர் நிரைபு நேர் - பாய் குரங்கு கான்

நிரைபு நிரைபு நேர் - கடி குரங்கு கான்

மேலே காட்டிய சான்றுகளின் இறுதியில் உள்ள நேர் என்ற அசைக்கு மாற்றாக 'நிரை' என்ற அசையினைச் சேர்க்கக் கிடைக்கக் கூடிய மூவகைச் சீர் 16 ஆகும்.

ஈரசைச் சீர்கள் 16 உடன் நேர்பு நிரைபு என்பதனைச் சேர்த்தால் கிடைக்கக் கூடிய மூவகைச் சீர்கள் மொத்தம் 32.

எ.டு

1. நேர் நேர் நேர்பு - முதல்

நிரைபு நிரைபு நேர்வு - வரை = 16

2. நேர் நேர் நிரைபு - முதல்

நிரைபு நிரைபு நிரை- வரை = 16

மூவகைச் சீர்கள் மொத்தம் 4 X 16 = 64

இந்த 64 சீர்களில் வெண்பா உரிச்சீர் நான்கை நீக்கினால் எஞ்சிய 60ம் வஞ்சி உரிச்சீர் எனப்படும். 'நேர்' ஈற்று வஞ்சி உரிச்சீர் = 12, 'நிரை' ஈற்று வஞ்சி உரிச்சீர் = 16. மொத்தம் = 60.

**சீர்கள் பாவில் இடம் பெறுதல் :**

ஒவ்வொரு பாவிலும் அதற்கென சீர்கள் இடம் பெறுவதுண்டு

**வஞ்சிப்பா :**

21. வஞ்சிப் பாவிற்கு உரிய சீர் எது?

மேற்காட்டப்பட்ட வஞ்சி உரிச்சீர் 60ம் வஞ்சிப்பாவிற்கு உரியனவாகும். வஞ்சிப்பாவைத் தவிர வேறு பாக்களில் வாரா.

மேலும் வஞ்சிப் பாவினுள் ஒழிந்த உரிச்சீர்களும் வரப்பெறும். (21)

'நேர்' ஈற்று இயற்சீர் வஞ்சிப்பாவின் ஈற்றில் வராது. ஆனால் அடியின் முதற்கண் வரும். 25

22. வெண் பாவில் எந்த உரிச்சீர் இடம் பெற்றது?

**வெண்பா :**

வெண்பா உரிச்சீரும் ஆசிரிய உரிச்சீரும் ஆகிய இவ்விரண்டும் ஒருங்கு கூடி வெண்பாவினது நேரடிக்கண் ஒருங்கு நிற்றல் இல்லை. (22)

எ.டு

*"தனக்குவமை யில்லாதான் தாள் சேர்ந்தார்க்கல்லால்*
*மனக்கவலை மாற்ற ரிது."*

இக்குறள் வெண்பாவில் வெண்பா உரிச்சீர்கள் வந்தனவே தவிர ஆசிரிய உரிச்சீர்கள் வரவில்லை.

**கலிப்பா :**

கலிப்பாவிற்கு உரிய கலித்தளை வருமிடத்தில் வெண்பா உரிச்சீரும், ஆசிரிய உரிச்சீரும் ஒருங்கு நிற்கவும் பெறும்.

மேலும் கலிப்பாவின் கலித்தளைக் கண் நேரீற்று இயற்சீர் வராது.

**ஆசிரியப்பா :**

இனிய ஓசை பொருந்தி வருவதனால் ஆசிரியப்பாவில் வெண்பா உரிச்சீர் வரப்பெறும். (29) மேலும் ஒரோவிடத்தில் வஞ்சி உரிச்சீரும் வரும். (30)

**ஓரசைச்சீர் :**

ஓசைநிலை நிரம்ப நிற்பதாயின் ஓர் அசையும் சீராம் தன்மையை நீக்கார். (26)

அவை : நாள், மலர், காசு, பிறப்பு.

ஓரசைச் சீரைத் தளைவகை சிதையாத் தன்மை வேண்டுமிடத்து இயற்சீர் போலக் கொள்ள வேண்டும். (27)

வெண்சீர் ஈற்றசை, தளைவழங்கு மிடத்து, இயற்சீரசையாக நிரையீறு போலக் கொள்ள வேண்டும். (28)

### 8.5 அடி

அசைகள் இணைந்த சீர் ஆவதைப் போல், சீர்கள் இணைந்து அடி ஆகும்.

*"நாற்சீர் கொண்டது அடியெனப் படுமே"* (31)

நான்குசீர் ஒருங்கு தொடுத்து வருவது 'அடி' என்று சொல்லப்படும்.

முன்னர்க்கூறிய நாற்சீரடியுள் தளையும் தொடையும் உள்ளன. (32)

தளையும் தொடையும் நாற்சீரடியின் கண் வருதலின்றி அவ்வடியின் நீங்கி வருவதில்லை. (33)

23. '________ கொண்டது அடியெனப் படுமே'

*"அடியின் சிறப்பே பாட்டெனப் படுமே"* (34)

அடியின் சிறப்பினால் அது பாட்டென்று கூறப்பெறும். செய்யுளுக்கு அடி இன்றியமையாததாகும். பாட்டாவன வெண்பா. ஆசிரியம், கலி, வஞ்சி என்பன.

24. 'அடியின் சிறப்பே ________ படுமே'

**குறளடி :**

நாலெழுத்து முதலாக ஆறெழுத்து ஈறாக அமைந்த நிலத்தை உடையது குறளடி ஆகும். (4,5,6 ஆகிய எழுத்துக்களைக் கொண்டது) அஃதாவது ஓர் அடியில் வரும் எழுத்துக்களை எண்ணுங்கால் மெய்யெழுத்து, குற்றியலுகரம், குற்றியலிகரம் இவற்றைக் கணக்கிடாமல் எஞ்சியவை 4 முதல் 6 எழுத்துக்கள் வரை இருந்தால் குறளடி எனப்படும்.(35)

25. குறளடிக் கான எழுத்து எண்ணிக்கை யாது?

எ.டு

பேர்ந்து பேர்ந்து சார்ந்து சார்ந்து - 4

நேர்ந்து நேர்ந்து மூசி நொந்து - 5

வண்டு சூழ விண்டு வீங்க" - 6

இதில் மெய்யெழுத்து, குற்றியலுகரம் நீங்க 4,5,6 எழுத்துக்கள் காணப்படுகின்றன.

**சிந்தடி :**

26. சிந்தடிக் கான எழுத்து வரையறை யாது?

*"ஏழெழுத் தென்ப சிந்தடிக் களவே*
*ஈரெழுத் தேற்றம் அல்வழி யான"* (36)

சிந்தடிக்கு ஏழு எழுத்து முதல் ஒன்பது எழுத்துவரை என்பர்.

எ.டு

"நீர்வாய் கொண்டு நீண்டநீல - 7

நீர்வா பூதைவீச ஊர்வாய் - 8

மணியேர் துண்டோ டொல்கிமாலை - 9

இதில் மெய்யெழுத்து, குற்றியலுகரம் நீங்க 7,8,9 எழுத்துக்கள் காணப்படுகின்றன.

**அளவடி :**

27. அளவடி யின் மற்றொரு பெயர் யாது?

*"பத்தெழுத் தென்ப நேரடிக் களவே*
*ஒத்த நாலெழுத் தேற்றலங் கடையே"* (37)

பத்தெழுத்து முதலாகப் பதினான்கெழுத்து ஈறாக அமைவது அளவடியாகும். இதற்கு நேரடி என்றும் பெயர்.

எ.டு

"நன்மணங் கமழும் பன்னெல் லூர - 10

வளையேர் மென்றோ ளயெரி நெடுங்க - 11

ணிணையீ ரோதி யேந்தின வனமுலை - 12

யிறும்பன மலரிடை யெழுந்த மாவி - 13

னறுந்தழை துயில்வரூஉஞ் செறிந்தேந்தல்குல் - 14

**நெடிலடி :**

*"மூவைந் தெழுத்தே நெடிலடிக் களவே*
*ஈரெழுத்து மிகுதலும் இயல்பென மொழிப"* (38)

பதினைந்து முதலாகப் பதினேழு ஈறாக அமைந்தது நெடிலடி எனப்படும்.

"அணிநடை யசைஇய உரியமை சிலம்பின் - 15

மணிமருள் வணர்குரல் வளரிளம் பிறைநுத - 16

லொறிநிலவு வயங்கிழை யருவுடை மகளிரொடு- 17

**கழிநெடிலடி :**

*"மூவா றெழுத்தே கழிநெடிற் களவே*
*ஈரெழுத்து மிகுதலும் இயல்பென மொழிப"* (39)

பதினெட்டு முதலாக இருபதெழுத்து ஈறாக அமைந்தது கழிநெடிலடி எனப்படும்.

எ,டு

"நலிமுழவு முழங்கிய வணிநிலவு மணிநக - 18

நிருந்தளவு மலரளவு கரும்புலவு நறுந்தொடைக்- 19

கலனளவு கலனளவு நலளவு நலனளவு - 20

**சீர்நிலை :**

'நேர்' என்ற வாய்பாட்டினை இறுதியிற் கொண்ட சீரில், ஐந்து எழுத்துக்கு மேற்படாது. நிரையசை என்பதனை இறுதியிற் கொண்ட வஞ்சியுரிச்சீர் இருந்தால் ஆறு எழுத்தும் வரலாம். எனவே இருபது எழுத்துக்க மிகுந்து வராது. (40)

மேற்சொல்லப்பட்ட அடிகள் பல தொகுக்குங்காலத்து ஓரடிக்கு ஓரடி எழுத்தளவு குறைந்து வந்தாலும் வரலாம். ஆனால் சீர்நிலை நான்கைவிட மிகுந்தோ குறைந்தோ இல்லை. (41)

அடிகளுக்குரிய எழுத்துக்களையும் கணக்கிடுங்கால் ஒற்று, மெய்யெழுத்து, ஆய்தம் குற்றுகரம் ஆகியன எழுத்தாக எண்ணப்படா. இவை மூன்றும் எழுத்து எனப்படினும் ஒருவாற்றால் உயிர்க்குந் திறமுடையவாயினும் அவ்வுயிர்க்கும் திறம் ஈண்டுச் செய்யுட்பாற் படுங்கால் உபகார்பட இயங்குமாறு இல்லையாதலின் எண்ணப்படா. எனவே எண்ணப்படுவன உயிரும், உயிர் மெய்யும் ஆகி ஒரு மாத்திரையிற் குறையாதன. (42)

**ஐவகை அடியின் விரி :**

நாற்சீரடியை எழுத்தளவு பற்றி வகுக்கப்பட்ட குறளடி, சிந்தடி, அளவடி, நெடிலடி, கழிநெடிலடி என்ற அடியினை விரித்துரைத்தால் 625 ஆகும் என்பர் தொல்காப்பியர்.

*"ஐவகை அடியும் விரிக்குங் காலை*
*மெய்வகை அமைந்த பதினேழ் நிலத்தும்*
*எழுபது வகைமையின் வழுவில வாகி*
*அறுநூற் றிருபத் தைந்தா கும்மே"* (48)

இந்நூற்பாவின்கண் உள்ள 'மெய்' என்பது அசையும், சீரும் தோன்றுவதற்கு இடமாகிய எழுத்து. மெய்வகை அமைந்த பதினேழ் நிலத்து

என்பது எழுத்து அமைந்த 4 எழுத்து முதல் 20 எழுத்து ஈறாகச் சொல்லப்பட்ட 17 நிலத்தும் (பார்க்க : குறளடி முதல் கழிநெடிலடி வரை)ள

சீர்கள் மொத்தம் 84. அவை ஓரசைச் சீர் : 4. ஈரசைச் சீர் : 16, மூவகைச்சீர் : 64 இவற்றுள் இரண்டு சீர் தம்முள் புணரும் புணர்ச்சி 70 வகையாம்.

எழுபது வகைப்பட்ட உறழ்ச்சியின் வழுவுதலின்று வருவன 624 ஆகும். அசைச்சீர், இயற்சீர், ஆசிரிய உரிச்சீர், வெண்சீர், வஞ்சி உரிச்சீர் என்னும் ஐந்தினையும் நிறுத்தி இவ்வைந்து சீரும் வருஞ்சீராக உறழும் வழி 25 விகற்பமாம். அவ் 25 இன் கண்ணும் மூன்றாவது ஐந்து சீரையும் உறழ 125 விகற்பமாம். அவ் 125 உடன் நான்காவது ஐந்து சீரையும் உறழ 625 ஆகும்.

இவ்வாறு அடிவகைகளை விரித்தால் எல்லையற்றனவாக விரியும் என்று உணர்ந்தவர்கள் கூறுவர். (40)

### 8.5.1 தளை

தத்தம் சீர்நிலை வகையானும் தளைநிலை வகையானும் இனிய ஓசை வேறுபாட்டினை உடைய ஐந்தடிக்கும் உரிய தன்னுடைய சீர் உள்ள இடத்தில் தளை வேறுபாடு கொள்ளுதல் வேண்டியதின்று. எனவே சீர் தானே ஓசையைத் தரும். (52)

இத்தளை ஏழு வகைப்படும். அவை

28. தளை எத்தனை வகைப்படும்?

**1. நேரொன்றாசிரியத் தளை :**

இயற்சீர் நிற்க, வருஞ்சீர் முதலசை நேராய் ஒன்றுவது/மாமுன் நேர்

**2. நிரையொன்றாசிரியத் தளை :**

இயற்சீர் நிற்க, வருஞ்சீர் முதலசை நிரையாய் ஒன்றுவது/விளமுன் நிரை

**3. இயற்சீர் வெண்டளை :**

மாமுன் நிரையும், விளமுன் நேரும் என மாறுபட்டு வருவது.

**4. வெண்சீர் வெண்டளை :**

வெண்சீர் நிற்க, வருஞ்சீர் முதலசையோடு ஒன்றுவது/காய்முன் நேர்

**5. கலித்தளை :**

வெண்சீர் நிற்க, வருஞ்சீர் முதலசை நிரையாக வருவது/காய் முன் நிரை.

**6. ஒன்றிய வஞ்சித் தளை :**

வஞ்சியுரிச்சீர் நிற்க, வருஞ்சீர் முதலசையோடு ஒன்றுவது/கனிமுன் நிரை

7. ஒன்றா வஞ்சித்தளை :

வஞ்சியுரிச்சீர் நிற்க, வருஞ்சீர் முதலசை நேராக வருவது/களிமுன் நேர்.

42. ‘ ______ ______ முரணுதல் முரணே’

### 8.5.2 வஞ்சிப்பாவின் இலக்கணம்

1. வஞ்சிப்பா இரு சீர்களைக் கொண்டது. 42

2. வஞ்சியுரிச்சீரின் சிறுமை 3 எழுத்து ஆகும். எனவே ஒரு சீரில் 3 முதல் 6 எழுத்து வரை வரலாம். 43

3. வஞ்சியடி மூன்று சீர்களால் வருகின்ற இடமும் உண்டு. எனவே இரு சீரடியானும் முச்சீரடியானும் வரலாம். 44

4. மேற்சொல்லப்பட்ட இரு சீரடி, முச்சீரடி ஆகிய இரண்டிலும் அசையே கூனாக வரும் இடனும் உண்டு. 45

5. குறளடி முதலாக அளவடியளவும் வஞ்சியுரிச்சீர் வந்து உறழும் நிலை இல்லை. அங்ஙனம் உறழ்ந்தால் இவ்வடிகள் இயற்சீரும் ஆசிரிய உரிச்சீரும் ஆகும். 46

6. வஞ்சிப்பாவின் இறுதி ஆசிரியப்பாவின் இயல்புடையது. ஈற்றயலடி முச்சீராலும், நாற்சீராலும் வரும். 47

*“வஞ்சித் தூக்கே செந்தூக் கியற்றே”* *68*

### 8.5.3 ஆசிரியப்பாவின் இலக்கணம்

1. ஆசிரியப்பா நாற்சீரால் வரும்.

2. அங்ஙனம் வருமிடத்துக் குறளடி முதலான ஐவகையடியும் உரித்தாகும். (50)

3. மேற்சொல்லப்பட்ட ஐவகை அடியும் தனித்தனியாக ஆசிரியப்பாக்களில் வருதலோடன்றி ஒரே பாட்டில் விரவி வருவதும் தவறில்லை. 51

4. ஆசிரியப்பாவிற்கு உரிய தளை நேரொன்றாசிரியத்தளை, - சீர்கள் தம்முள் பொருந்தும்போது நிலை மொழியில் இயற்சீர் நின்று அதன்முன் நேரசை வந்து ஒன்றுவது. நிரையொன்றாசிரியத் தளை - நிரையசை வந்து ஒன்றுவது. 53

5. மாமுன் நிரையும், விளமுன் நேரும் வருவது இயற்சீர் வெண்டளையாகும். இது வெண்பாஅடி ஆகும். இது ஆசிரியப்பாவின் கண் நிற்றற்குரிய மரபோடு நிற்கவும் பெறும். 59

6. ஆசிரியப்பாவில் இயற்சீர் வெண்டளை, ஆசிரியத்தளை விரவியும் ஐஞ்சீரடியும் வருவனவும் உள 60

*எ.டு “சிறுசோற் றானு நனிபல கலத்தன் மன்னே”*

இவ் ஆசிரியப்பாவில் ஐஞ்சீரடி வந்துள்ளது.

1. சிறு/சோற்/றா/னு

நி நே நே - மாமுன் நேர் நேரொன்றாசிரியத்தளை

2. றா/னு நனி/பல - மாமுன் நிரை

நே நே நி இயற்சீர் வெண்டளை

இவ்வாறு தளை விரவி வந்தது.

7. ஆசிரியப்பாவில் நேரடிக்கு முன் அறுசீர் அடியானது ஆசிரியத்தளையோடு பொருந்தியும் வரும். 61

எ.டு "*சிறியகட் பெறினே யெமக்கீயு மன்னே*
*பெரியகட் பெறினே யாம்பாடத் தான் மகிழ்ந்துண்ணு மன்னே*"

இதில் முதலடி 4 சீராக வந்தது. அடுத்த அடி 6 சீரால் ஆசிரியத்தளையோடு பொருந்தி வந்துள்ளது.

8. முடுகிய இயலும் அடி 'முடுகியலடி' எனப்படும். முடுகியலடி என்பது ஏழு சீரால் வருவதாகும். 62. ஐஞ்சீர் அடிக்கும் அறுசீர் அடிக்கும் எழுசீர் அடிக்கும் முடுகியலை நீக்கார். 63

முடுகியலாகி வருகிற மேற்சுட்டிய மூவகை அடியும் ஆசிரியப்பாவிலும் வெண்பாவிலும் வாரா. எனவே கலிப்பாவில் வரும்.64

29.ஆசிரியப் பாவின் ஈற்றயலடி எவ்வாறு வரும்?

9. ஆசிரியப்பாவின் ஈற்றயலடி மூன்று சீராய் வரும். 65

எ.டு

*முதுக்குறைந் தனளே முதுக்குறைந் தனளே*
*மலையன் ஒற்போற் கண்ணி*
*முலையும் வாரா முதுக்குறைந் தனளே*"

ஈற்றயலடி முச்சீராய் வந்தது.

ஆசிரியப்பாவில் இடையிலும் முச்சீர் வரப்பெறும். 66

எ.டு

"*நீரின் தண்மையுந் தீயின் வெம்மையுஞ்*
*சாரச் சார்ந்து தீரத் தீரும்*
*சாரல் நாடண் கேண்மை*
*சாரச் சாரச் சார்ந்து*
*தீரத் தீரத் தீர்பொல் லாவே*"

இதில் 3,4 ஆவது அடிகளில் முச்சீர் வந்தது.

10. ஆசிரியப்பாவில் சீர் முழுவதும் கூனாகி வருதல் உண்டு.

"*சீர்கூன் ஆதல் நேரடிக் குறித்தே*" 47

எ.டு

"*அவரேகேடில் விழுப்பொருள் தருமார் பாசிலை*

*வாடா வள்ளியங் காடிறற் தோரே”*

இதில் ‘அவரே’ என்ற சீர் முழுவதும் கூனாகி வந்தது.

### 8.5.4 வெண்பாவின் இலக்கணம்

1. அளவடியும் சிந்தடியும் வெண்பாவிற்கு உரியனவாம். இது தளை வகை பொருந்தாத் தன்மைக்கண்.

30. வெண் பாவிற்கு உரிய தளை எது?

மாமுன் நிரை, விளமுன் நேர் பெறும் இயற்சீர் வெண்டளை பெறும். (இது தளை பொருந்தாத் தன்மை)

காய்முன் நேர் வரும் வெண்டளை நெடிலடியும் சில வரும். (இது தளை பொருந்தும் தன்மை) 55

எ.டு

*“அகர முதல வெழுத்தெல்லாம் ஆதி*
*பகவன் முதற்றே யுலகு”*

அக/ர முத/ல - மா முன் நிரை

நி நே நி - இயற்சீர் வெண்டளை

வெழுத்/தெல்/லாம் ஆ/தி - காய் முன் நேர்

நி நே நே நே வெண்சீர் வெண்டளை

2. முடுகியலாக வரும் 5,6,7 சீரடி ஆகிய இம்மூவகை அடியும் வெண்பாவில் நிற்கமாட்டா. 64

*3. “வெண்பா ஈற்றடி முச்சீர்த் தாகும்*
*அசைசீர்த் தாகும் அவ்வழி யான” 69*

வெண்பாவின் ஈற்றடி மூன்று சீராய் வரும். இதன்கண் இறுதிச்சீர் அசைச்சீராய் வரும்.

4. இறுதிச்சீரின் அயற்சீர் ‘நேரீற்று இயற்சீராக இருந்தால் நிரை அல்லது நிரைபு என்ற அசையுடன் ஒன்றும். 70

5. இறுதிச்சீரின் அயற்சீர் நிரையீற்று இயற்சீராக இருந்தால் நேர் அல்லது நேர்பு என்ற அசையுடன் ஒன்றும் 71

எ.டு

*“நன்றி மறப்பது நன்றன்று நன்றல்ல*
*தன்றே மறப்பது நன்று”*

மறப்/பது நன்று நிரையீற்றியற் சீர்முன் நேர்பு வந்தது.

நி நி நேர்பு

6. இறுதிச் சீரின் அயற்சீர் வெண்பா உரிச்சீராக இருந்தால் நேர் அல்லது நேர்பு அசையுடன் ஒன்றும்.

எ.டு

*"பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்*
*இறைவ னடிசேரா தார்"*

னடி / சே / ரா தார் — வெண்பா உரிச்சீர்முன் நேரசை வந்தது.

நி நே நேர் நேர் — சீர் முன் நேரசை வந்தது.

7. வெண்பாவில் சீர் முழுவதும் கூனாகி வருதல் உண்டு. 47

### 8.5.5 கலிப்பாவின் இலக்கணம்

31. கலிப்பா விற்குரிய தளை யாது?

1. *"அளவடி மிகுதி யுளப்படத் தோன்றி*
*இருநெடில் அடியுங் கலியிற்குரிய"* 56

ஐவகை. அடியில், அளவடியில் மிகுதியான எண்ணிக்கையினை கொண்டதாகவும் (13,14 எழுத்துக்கள்) நெடிலடி மற்றும் கழி நெடிலடியைக் கொண்டதாகவும் கலிப்பா அமையும்.

எ.டு *"நிலங்கிளையா நெடிதுயரா நிறைதளரா நிறைதொடியான்"*

இதில் மெய்யெழுத்து நீங்க 20 எழுத்துக்கள் உள்ளன.

32. கலிப் பாவில் இடம் பெறுகின்ற பிற தளைகள் யாவை?

2. வெண்பா உரிச்சீர் நிற்ப அதன் முன் நிரைமுதல் வெண்சீர் வந்து அதன்கண் நிரையாய்த் தளைத்து வருதல் கலியடிக்கு வரைநிலை இல்லை. எனவே கலித்தளை இதற்கு உண்டு. 57

3. "விராஅய தளையும் ஒரூஉ நிலை இன்றே" 58

பிறவாகிக் கலந்த தளையும் நீக்கப்படுவதில்லை. அஃதாவது வெண்டளையும் ஆசிரியத்தளையும் விரவி வரும்.

எ.டு

*"அயனின்ற விதைமொழியா....."*

அய/னின்/ற விதை/மொழி யா

நி நே நே நி

புளிமாங்காய் முன் நிரை வந்தமையால் கலித்தளை அனது.

எ.டு

*"இமையவில் வாங்கிய ஈர்ஞ்சடை அந்தணன்*
*உமையமர்ந் துயர்மலை இருந்தணன் ஆக"*

ஐயிரு தலையின் அரக்கர் கோமான் (கலித்)

இமை/யவில் வாங்/கிய - கருவிளமுன் நேர் வந்தமையால்

நி நி நே — இயற்சீர் வேண்டளை

அந் / தணள் உமை/ யமர்ந் - கூவிளமுன் நிரை வந்தமையால் இது

நே நி நி — நிரையொன்றாசிரியத்தளை.

இவ்வாறு கலிப்பாவில் பிற தளைகளும் விரவி வந்தன. (32)

4. முடுகியலாக வரும் ஐஞ்சீரடி, அறுசீரடி, எழுசீரடி என்னும் மூன்று கலிப்பாவில் நிற்கப்பெறும். 64

5. "எழுசீர் இறுதி ஆசிரியங் கலியே" 72

கலிப்பாவின் ஈற்று அயலடி ஆசிரியப்பாவைப் போல் மூன்று சீரால் வரும். சில விடத்து ஈற்றயலடி நான்கு சீராக வருதலும் உண்டு.

எ.டு

"............................................
*தொல்கவின் தொலைதல் அஞ்சியென்*
*சொல்வரைத் தங்கினர் காத லோரே"* (கலித்)

6. கலிப்பா, வெண்பாச் சுரிதகமாக முடியவும் பெறும். 73

எ.டு

"............................................
*மேனின்று மெய்கூறுங் கேளிர்போல் நீ*
*கானந் தகைப்பச் செலவு"* - செல்லங்

**8.6 யாப்பு**

33. யாப்பு எத்தனை வகைப்படும்?

யாப்பு என்ற சொல்லுக்குக் 'கட்டுதல்' என்று பொருள். எழுத்து, அசை, சீர், தளை, அடி, தொடை முதலிய உறுப்புகளால் ஆன பாவுக்கு 'யாப்பு' எனறு பெயர். யாப்பு என்பது அடிதோறும் பொருள் பெறச் செய்வதொரு செய்கை எனப் பேராசிரியரும் நச்சினார்க்கியரும் சுட்டுகின்றனர்.

*"எழுத்து முதலா ஈண்டிய அடியில்*
*குறித்த பொருளை முடிய நாட்டல்*
*யாப்பென மொழிப யாப்பறி புலவர்"* 74

எழுத்து முதலான அசை, சீர், அடி என இவ்வியலிற் சொல்லப்பட்ட அடியினால் தான் குறித்த பொருளை இறுதியடி அளவும் முடிபு பெற நிறுத்தல் யாப்பென்று சொல்லுவர் புலவர்.

யாப்பின் ஏழு பகுதிகள் :

*"பாட்டுரை நூலே வாய்மொழி பிசியே*
*அங்கதம் முதுசொல் அவ்வேழ் நிலத்தும்*
*வண்புகழ் மூவர் தண்பொழில் வரைப்பின்*
*நாற்பே ரெல்லை அகத்தவர் வழங்கும்*
*யாப்பின் வரிய தென்மனார் புலவர்.* 74

பாட்டு, உரை, நூல், வாய்மொழி, பிசி, அங்கதம், முதுசொல் எனப்பட்ட ஏழு நிலத்தினும் வளவிய புழையுடைய சேரன், பாண்டியன்,

சோழன் என்னும் மூவரது தமிழ் நாட்டகத்தவர் வழங்கும் தொடர் மொழிக்கண் வரும் மொழியே யாப்பாகும் என்று கூறுவர் புலவர்.

**மரபு :**

*"மரபே தானும்*
*நாற்சொல் லியலான் யாப்புவழிப் பட்டன்று" 76*

குறித்த பொருளை முடியச் சொல் தொடுக்குங்கால் இயற்சொல். திரிசொல், திசைச்சொல், வடசொல் என்னும் நால்வகைச் சொல்லின் இயற்கையால் புணர்ப்பது யாப்பின் மரபாகும். இயற்சொல்லாகிய பெயர், வினை, இடை உரியானும் ஏனைய திரிசொல் திசைச்சொல், வடசொல்லானும் எழுவகை வழுவும் படாமல் புணர்க்க வேண்டும்.

## 8.7 பாவுக்குரிய தூக்கு / ஓசை

தொல்காப்பியர் வகுத்த ஆசிரியப்பா. வெண்பா, கலிப்பா, வஞ்சிப்பா என்ற ஒவ்வொரு பாவும் எத்தகைய ஓசையில் பாடவேண்டும் என்ற நெறிமுறையும் காணப்படுகின்றது.

**அகவலோசை :**

34.ஆசிரியப் பாவிற்குரிய ஓசை யாது?

*"அகவ லென்ப தாசிரி யம்மே" 77*

அகவலோசை ஆசிரியப்பாவிற்குரியதாகும். அகவல் என்பது ஆசிரியன் இட்டதோர் குறி என்கிறார் இளம்பூரணர்.

எ.டு

*"செங்களம் படக்கொன் றவுணர்த் தேய்த்த*
*செங்கோல் அம்பின் செங்கோட்டி யானை*
*கழல்தொடி சேய் குன்றங்*
*குருதிப் பூவின் குலைகாந் தட்டே" (குறுந் : 1)*

இது அகவலோசையாய் வந்தது.

**செப்பலோசை :**

35. '________ வெண்பா யாப்பே'

*'அஃதன் றென்ப வெண்பா யாப்பே" 78*

மேற்கூறிய அகவலோசையின்றிச் செப்பிக் கூறும் ஓசையெல்லாம் வெண்பா எனப்படும். அதாவது செப்பலோசை பெற்று வருவது வெண்பா வாகும்.

**துள்ளலோசை :**

*'துள்ள லோசை கலியென மொழிப' 79*

துள்ளலோசை கலிப்பாவிற்காகும். 'துள்ளதலாவது ஒழுகுநடைத் தன்றி இடையிடை உயர்ந்து வருதல். கன்று துள்ளிற்று என்றாற் போலக் கொள்க' என்பர் பூரணர்.

**தூங்கலோசை :** 36. வஞ்சிப் பாவிற்குரிய ஓசை யாது?

*"தூங்க லோசை வஞ்சி யாகும்"* (80)

தூங்கல் ஓசை வஞ்சிப்பாவிற்குரியதாகும். இஃது அறுதியற்ற ஓசைத்தாகி வரும்.

**மருட்பா :**

மருட்பாவிற்கு ஓசை இது என்னும் தன்மை இல்லை. அதற்கு வெண்பாவும் ஆசிரியப்பாவும் உறுப்பாக இவ்விரண்டின் ஓசையே அதற்கு ஓசையாம். இவ்விரு ஓசையும் வருங்கால் செப்பலோசை முன்னும் அகவலோசை பின்னுமாக நிலைபெறும். (81) 37. மருட் பாவின் உறுப்புகள் யாவை?

எ.டு

*"திருநுதல் வேரரும்பத் தேங்கோதை வாடும்*
*இருநிலனுஞ் சேவடி யெய்தும் அரிபரந்த*
*போகிதழ் உண்கண் இமைக்கும்*
*ஆகு பற்றிவர் அகலிடத் தணங்கே"* (புறம். வெ. மாலை)

இம்மருட்பா முன்னிரண்டடிகள் செப்பலோசை பெற்றும் பின்னிரண்டு அடிகள் அகவலோசை பெற்றும் வந்தது.

மேற்சொல்லப்பட்ட ஓசைவகையால் அல்லது பாட்டின்கண் வேறு பா கூறப்படாது. அஃதாவது அகவற்பா, வெண்பா, கலிப்பா, வஞ்சிப்பா, மருட்பா எனப் பெயர் பெற்ற பாக்கள் தவிரப் பரிபாடல் முதலான பாக்களும் உளவன்றே. இத்தகு பாக்கட்கும் மேற்கூறிய நால்வகை ஓசையே தவிர வேறில்லை என்பதாம். (82)

*"தூக்கியல் வகையே ஆங்கென மொழிப"* 83

தூக்கியலும் மேற் சொல்லப்பட்ட நால்வகையே அன்றிப் பிறிதில்லையாம்.

### 8.8 தொடை

பூக்களால் தொடுக்கப்படுவது தொடையல் ஆகும். அதுபோல எழுத்து, சொல், பொருள் ஆகியவற்றால் தொடுக்கப்படும் செய்யுள் உறுப்பும் தொடையாகும். செய்யுளின் ஓசைக்கும் இனிமைக்கும் 'தொடை' இன்றியமையாதாகும். அதன் பொருட்டே 'தொடையற்ற பாட்டு நடையற்றுப் போகும்' என்ற பழமொழியும் தோன்றியது. 38. தொடை எத்தனை வகைப்படும்?

**தொடை வகை :**

*"மோனை எதுகை முரணே இயைபென*
*நானெறி மரபின தொடைவகை என்ப"* (84)

தொடை வகை நான்காகும். அவை மோனைத் தொடை, எதுகைத் தொடை, முரண் தொடை, இயைபுத் தொடை என்பனவாம்.

*"அளபெடை தலைப்பெய ஐந்தும் ஆகும்.* (85)

மேற்கூறிய நால்வகைத் தொடையுடன் அளபெடைத் தொடையினையும் சேர்த்தால் ஐந்தாகும்.

இவைதவிரப் பொழிப்புத் தொடை. ஒரூஉத் தொடை. செந்தொடை என்னும் பிற தொடைகளும் உண்டு. (86)

நிரல் நிரைப் பொருள் வகையால் தொடுக்கும் தொடையும் இரட்டைத் தொடையும் ஆகிய இவ்விரண்டும் முற்கூறிய தொடைவகையின் பாற்படும் என்பர். (87)

39. முதல் எழுத்து ஒன்றி வரத் தொகுப்பது

**மோனைத் தொடை :**

*"அடிதொறும் தலையெழுத் தொப்பது மோனை"* (88)

அடிதோறும் முதற்கண் ஓரெழுத்தே ஒத்து வரத்தொடுப்பது மோனைத் தொடையாகும்.

எ.டு

*கண்டற் கானற் குறுகின மொலிப்பக்*
*கரையா டலவ ளளைவயிற் செறிய* (அகம் :)

**எதுகைத் தொடை :**

40. எதுகைத் தொடை எவ்வாறு வரும்?

அடிதொறும் முதல் எழுத்து ஒன்றாமல் இரண்டாம் எழுத்து ஒன்றின் எதுகைத் தொடையாகும். (89)

எ.டு

"..............................
*துடியடிக் கயந்தலை கலக்கி சின்னீரைப்*
*பிடியூட்டிப் பின்னுண்ணுங் களிறெனவும் உரைத்தனரே"*
(கலி :)

செய்யுளின் கண் முதல் எழுத்தும் ஒன்றி இரண்டாம் எழுத்தும் ஒன்றி வந்தால் 'மோனைத் தொடை' என்றே பெயரிடலாம் என்பார் இளம்பூரணர்.

*"ஆயிரு தொடைக்கும் கிளையெழுத் துரிய"* (90)

மோனைத் தொடைக்கும் எதுகைத் தொடைக்கும் வந்த எழுத்தே வருதலன்றி வரும் எழுத்தும் உரியனவாம்.

எ.டு

*"பகலே பல்பூங் கானல் கிள்ளை யோப்பியம்*
*பாசிலைக் குளவியொடு கூதளம் விளைகிய*
*பின்னுப்பிணி அவிழ்ந்த நன்னெடுங் கூந்தல்*
*பீர்ங்கப் பெய்து தேம்படக் கருதி"*

ப,பா,டா,டீ என்ற வருக்க எழுத்துக்களால் வந்த வருக்க மோனை.

*"ஆறறி அந்தணர்க் கருமறை பலபகர்ந்து*
*தேறுநீர் சடைக்கரந்து திரிபுரம் தீமடுத்துக்*
*கூறாமற் குறித்தன்மேல் செல்லுங் கடுங்கூறி*

*மாறாப்போர் மணிமிடற் றெண்கையாய் கேளினி"*

ற,று,றா,றா என்ற வருக்க எழுத்துக்களால் வந்த வருக்க எதுகை.

**முரண் தொடை :**

41. '________ முரணுதல் முரணே'

*"மொழியினும் பொருளினும்" முரணுதல் முரணே"* (91)

சொல்லோ, பொருளோ மாறுபடத் தொடுப்பது முரண் தொடையாகும். அடிதோறும் வந்த சொல்லினான் ஆதல், பொருளினான் ஆதல் மாறுபடத் தொடுப்பது அடிமுரண் தொடை என்பர் இளம்பூரணர்.

எ.டு

*"சிறுகுடிப் பரதவா மடமகள்*
*பெருமதர் மழைக்கண்ணும் உடையவால் அணங்கே"*

இது சொல் முரண்

*"இரும் பின் அன்ன கருங்கோட்டுப் புன்னை*
*பொன்னின் அன்ன நுண்தா துறைக்கும்"*

இது பொருள் முரண்.

**இயைபுத் தொடை :**

42. இயைபுத் தொடை எவ்வாறு வரும்?

*"இறுவாய் ஒப்பினஃதியைபென மொழிப"* (92)

அடிதோறும் ஈற்றெழுத்து ஒன்றிவரின் அஃது இயைபுத் தொடை என்று சொல்லுவர் புலவர்.

எ.டு

*"அவரோ வாரார் கார்வந் தன்றே*
*கொடிதரு முல்லையுங் கடிதரும் பின்றே"* (குறுந்)

இது இறுதி எழுத்து மட்டும் ஒன்றி வந்தமையால் எழுத்து இயைபுத் தொடையாம்.

*"பரவை மாக்கடற் தொகுதிரை வரவும்*
*பண்டைச் செய்தி யின்றிவள் வரவும்*

இஃது இறுதி சொல் மட்டும் ஒன்றி வந்த சொல் இயைபுத் தொடையாம்.

**அபெடைத் தொடை :**

அடிதோறும் அளபு எழத் தொடுப்பின் அஃது 'அளபெடைத் தொடை' யாகும். 93

*"ஓஒ இனிதே எமக்கிந்நோய் செய்தகண்*
*தாஅம் இதற் பட்டது"*

43.பொழிப்புத் தொடை எவ்வாறு வரும்?

**பொழிப்புத் தொடை :**

ஒருசிர் இடையிட்டு எதுகையாய வரின் அது பொழிப்புத் தொடையாம். 94

எ.டு *'அரிக்குரற் கிண்கிணி அரற்றுஞ் சீரடி"*

இதில் முதல் சீரிலும் மூன்றாம் சீரிலும் முதல் எழுத்தாக 'அ' வந்தமையால் இது பொழிப்பு மோனை ஆகும்.

'பன்னருங் கோங்கின் நன்னலங் கவற்றி' இதில் முதல் சீரிலும் மூன்றாம் சீரிலும் இரண்டாம் எழுத்தாக 'ன்' வந்தமையால் இது பொழிப்பு எதுகை.

*'சுருங்கிய நுசுப்பிற் பெருகு வடந் தாங்கி'*

இதில் முதல் சீரில் 'சுருங்கி' என்றும் மூன்றாம் சீரில் 'பெருகு' என்றும் வந்தமையால் இது பொழிப்பு முரண்

*"பூஉங் குவளைப் போஒ தருந்தி"*

இதில் முதல் சீரிலும் மூன்றாம் சீரிலும் அளபெடை வந்தமையால் இது பொழிப்பு அளபெடை ஆகும்.

**ஒரூஉத் தொடை :**

44. ________ ________ ஒரூஉ என மொழிப'

*"இருசீர் இடையிடின் ஒரூஉஎன மொழிப"* 95

இரண்டு சீர் இடையிட்டு, மோனை முதலாயின வரத் தொடுப்பது ஒரூஉத் தொடை ஆகும்.

எ.டு *"அம்பொற் கொடிஞ்சி நெடுத்தேர் அகற்றி"*

இதில் முதல் சீரிலும் நான்காம் சீரிலும் 'அ' என்ற எழுத்து மோனையாக வந்தமையால் இது ஒரூஉ மோனை.

*'மின்னிவ ரொளிவடந் தாங்கி மன்னிய"*

இதில் முதல் சீரிலும் நான்காம் சீரிலும் 'அ' என்ற எழுத்து மோனையாக வந்தமையால் இது ஒரூஉ மோனை.

*'மின்னிவ ரொளிவடந் தாங்கி பன்னிய"*

இதில் முதல் சீரிலும் நான்காம் சீரிலும் 'ன்' என்ற எழுத்து எதுகையாக வந்தமையால் இது ஒரூஉ எதுகை.

*"குவிந்து சுணங்கரும்பி கொங்கை விரிந்து"*

இதில் முதல் சீரில் குவிந்து என்பதும் நான்காம் சீரில் விரிந்து என்பதும் வந்தமையால் ஒரூஉ முரண்.

*"நிழலே இனியத னயலது கடலே"*

இதில் முதல் சீரிலும் நான்காம் சீரிலும் 'லே' என்ற எழுத்து ஒன்றி வந்தமையால் இது ஒரூஉ இயைபு.

*"காஅய் செந்நெற் கறுத்துப் போஒண்"*

இதில் முதல் சீரிலும் நான்காம் சீரிலும் அளபெடை வந்தமையால் இது ஒரூஉ அளபெடை.

**செந்தொடை :**

முன் சொல்லப்பட்ட தொடையும் தொடை விகற்பமும் போலாது வேறுபடத் தொடுப்பது செந்தொடை எனப்படும். (96)

எ.டு

*"பூத்த வேங்கை வியன்சினை யேறி*
*மயிலனம் அகவும் நாடன்*
*நன்னுதற் கொடிச்சி மனத்தகத் தோனே"*

இதில் முன் சொல்லப்பட்ட மேலினை முதலான தொடை விகற்பம் இல்லாமையில் இது செந்தொடை ஆயிற்று.

**நிரல் நிறைத் தொடை :**

பொருளைச் சேர நிறுத்திப் பயனையும் சேர நிறுத்துவது நிரல்நிறைத் தொடை.

எ.டு

*"கொடி குவளை கொட்டை நுசுப்புண்கள் மேனி*
*மதிபவளம் முத்த முகம்வாய் முறுவல்*
*பிடிபிளை மஞ்ஞை நடைநோக்குச் சாயல்*
*வடிவினளே வஞ்சி மகள்"*

இதனை கொடி நுசுப்பு, குவளை உண்கண், கொட்டை மேனி என நிறுத்திப் பொருள் கொள்ள வேண்டும்.

**இரட்டைத் தொடை :**

ஓரடி முழுவதும் ஒரு சொல்லே வருவது இரட்டைத் தொடை ஆகும்.

எ.டு

*"ஒக்குமே ஒக்குமே ஒக்குமே ஒக்குமே*
*விளக்கினிற் சீறெரி ஒக்குமே ஒக்குமே*
*குளக்கொட்டிப் பூவின் நிறம்"*

இதில் வந்த சொல்லே திரும்பத் திரும்ப வந்தமையால் இரட்டைத் தொடையானது.

**இத்தொடை வகைகள் :**

| | | |
|---|---|---|
| மோனைத் தொடை | - | 1019 |
| எதுகைத் தொடை | - | 2473 |
| முரண் தொடை | - | 2 |
| இயைபுத் தொடை | - | 182 |
| அளபெடைத் தொடை | - | 159 |
| பொழிப்புத் தொடை | - | 654 |
| ஒரூஉத் தொடை | - | 654 |
| செந்தொடை | - | 8556 |
| ஆகத் தொடை விகற்பம் | -13,699 | ஆகும். (97) |

மேற்சொல்லப்பட்ட தொடையினை ஆராய்ந்து விரிக்கத் தொடங்கினால் வரம்பு இல்லாமல் விரிந்து போகும். (98)

| | |
|---|---|
| "அணிமலர் அசோசின் தளிர்நலங் கவற்றி | - இணை மோனை |
| பொன்னின் அன்ன பொறி சுணங் கேந்தி | - இணை எதுகை |
| சீரடிப் பேரகல் அல்குல் ஒல்குபு | - இணை முரண் |
| மொய்த்துடன் தவழு முகிலே வெழிலே | - இணை இயைபு |
| தாஅட்டா அமரை மலர் உழக்கி | - இணை அளபெடை |
| அகன்ற அல்குல் அந்நுண் மருங்குல் | - கூழை மோனை |
| நன்னிற மென்முலை மின்னிடை வருந்த் | - கூழை எதுகை |
| சிறிய பெரிய நிகர்மலர்க் கோதைகள் | - கூழை முரண் |
| மாதர் நகிலே வல்பல இயலே | - கூழை இயைபு |
| மாஅத்தாஅண் மோஒட் டெருமை | - கூழை அளபெடை |
| அயில்வேல் அனுக்கி அம்பலைத்து அமர்ந்த | - முற்று மோனை |
| அரும்பிய கொங்கை அவ்வளை அமைத்தோள் | - மேற்கதுவாய் மோனை |
| அவிர்மதி அனைய திருநுதல் அரிவை | - கீழ்க்கதுவாய் மோனை |

*"உலகுடன் விளங்கும் ஒளிதிகழ் அவிர்மதி*
*மதிநலன் அழிக்கும் வளங்கெழு முக்குடை*
*முக்குடை நிழல் பொற்புடை ஆசனம்*
*ஆசனத் திருந்த திருந்தொளி அறிவன்"*

- அந்தாதித் தொடை

எழுத்தான் வேறுபடுதல், சொல்லான் வேறுபடுதல் பொருளான் வேறுபடுதல் என முன்பு சொல்லப்பட்ட பாகுபாடுகளையுடைய தொடை வகை' என்பதாம்.

### 8.9 நோக்கு

*"மாத்திரை முதலா அடிநிலை காறும்*
*நோக்குதற் காரணம் நோக்கெனப் படுமே"* (100)

மாத்திரை முதலாக அடிநிலையளவும் நோக்குதலாகிய கருவி நோக்கென்று சொல்லப்படும்.

யாதானும் ஒன்றைத் தொடுக்குங் காலத்துக் கருதிய பொருளை முடிக்குங்காறும் பிறிது நோக்காது அது தன்னையே நோக்கி நிற்கும் நிலை. அடிநிலைகாறும் என்றதனால் ஓரடிக்கண்ணும், பலவடிக் கண்ணும் நோக்குதல் கொள்க. அஃது ஒரு நோக்காக ஓடுதலும், பல நோக்காக ஓடுதலும், இடைபாட்டு நோக்குதலும் என மூன்று வகைப்படும் என்கிறார் இளம்பூரணர்.

எ.டு

*"அறுசுவை உண்டி அமர்ந்தில்லாள் ஊட்ட*
*மறுசிகை நீக்கியுண் டாரும் - வறிஞராய்ச்*
*சென்றிருப்பர் ஓரிடத்துக் கூடுழனின் செல்வமொன்*
*றுண்டாக வைக்கற்பாற் றன்று"*

இதில் செல்வம் நிலையாமை என்று கருதிய ஒரு பொருளே தொடுக்கப்பட்டதாதலின் இஃது ஒரு நோக்காக ஓடியது என்பதாம்.

## 8.10 பா வகை

'தொடை என்பதனை வைத்து அதற்குப் பின்னர் பா வகையினை வைத்துள்ளார் தொல்காப்பியர். ஏனெனில் தொடை நயங்கள் 'பாவி நடப்பது பா' எனப்படும். இப்பாவினது வகையினைத் தொல்காப்பியர் கீழ்க்கண்டவாறு குறிப்பிடுகின்றார்.

45. பா வகைகள் எத்தனை?

*"ஆசிரியம் வஞ்சி வெண்பாக் கலியென*
*நாலியற் றென்ப பாவகை விரியே"* (101)

பாவினது வகையினை ஆசிரியப்பா, வஞ்சிப்பா, வெண்பா, கலிப்பா என்ற நான்கு வகையாகச் சொல்லுவர் புலவர்.

இப்பாக்கள் நான்கும் பொதுவாக நின்றவிடத்து அறம், பொருள், இன்பம் என்னும் மூன்று முதற் பொருட்கும் உரிய என்பர். (102)

மேற் சொல்லப்பட்ட நான்கு பாவும் ஆசிரியப்பா, வெண்பா என்று இரண்டு பாவினுள் அடங்கும் என்பர். (103)

*"ஆசிரிய நடைத்தேவஞ்சி யேனை*
*வெண்பா நடைத்தே கலியென மொழிப"* (104)

ஆசிரியம் போன்ற நடையை உடையது வஞ்சிப்பா. வெண்பா போன்ற நடையை உடையது கலிப்பா என்று கூறுவர்.

46. ஆசிரிய நடைத்தே ______

47. வெண்பா நடைத்தே ______

### 8.10.1 வாழ்த்துக்குரிய பாக்கள்

மேற் சொல்லப்பட்ட நான்கு வகைப் பாவும் அறம், பொருள், இன்பம் என்ற மூன்றுக்கும் உரியனவாக வருவதோடு வாழ்த்துக்கும் உரியனவாம்.

48. வாழ்த்துக் குரிய பாக்கள் எத்தனை?

*"வாழ்த்தியல் வகையே நாற்பாக்கும் உரித்தே"* (105)

வாழ்த்தியல் வகை நான்கு வகைப்பாக்களுக்கும் உரியதாகும். வகை என்று கூறினமையால் கடவுளும் முனிவரும் பசுவும் பார்ப்பாரும். அரசரும் மழையும் நாடும் என்ற அறுமுறை வாழ்த்து வருதலே பெரும்பான்மை. அங்ஙனம் வாழ்த்தும் போதும் தனக்குப் பயன்படுதல், படர்க்கைப் பொருட்டும் பயன்படுதல் என இருவகையாம். அன்றியும் முன்னிலையாகவும் படர்க்கையாகவும் வாழ்த்து வரும்

இவ்வாழ்த்து இருவகைப்படும். 1. புறநிலை வாழ்த்து 2. வாயுறை வாழ்த்து.

49. வாழ்த்து எத்தனை வகைப்படும்?

**புறநிலை வாழ்த்து :**

*"வழிபடு தெய்வம் நிற்புறங் காப்பப்*
*பழிதீர் செல்வமொடு வழிவழி சிறந்து*
*பொலிமி னென்னும் புறநிலை வாழ்த்தே*
*கலிநிலை வகையும் வஞ்சியும் பெறாஅ"* (106)

நீ வழிபடும் தெய்வம் நின்னைப் புறத்தே நின்று காப்பக் குற்றம் தீர்ந்த செல்வத்தோடு வழிவழியாகச் சிறந்து பொலிமின் என்று வாழ்த்துவது புறநிலை வாழ்த்தாம். இது கலிப்பா வகையினும், வஞ்சிப்பா வகையினும் வரப்பெறாது. எனவே வெண்பாவினும் ஆசிரியப்பாவினும் இவ்விரண்டும் கலந்த மருட்பாவினும் வரப்பெறும் தெய்வத்தைப் புறம் நிறுத்தி வாழ்த்துதலிற் புறநிலை வாழ்த்து ஆயிற்று.

எ.டு

*"திங்கள் இளங்கதிர்போன் றெந்திங்களூர்த் தேவன்*
*மைந்தர் சிறப்ப மகிழ்சிறந்து - திங்கட்*
*கலைபெற்ற கற்றைச் சடைக்கடவுள் காப்ப*
*நிலைபெற்ற வாழியரோ நீ"*

இதில் கற்றைச் சடைக்கடவுள் காப்ப மைந்தர் சிறப்ப வாழியரோ நீ, என வந்தமையான் புறநிலை வாழ்த்தாயிற்று. இது வெண்பாவால் ஆனது.

**வாயுறை வாழ்த்து :**

50. வாயுறை, அவையடக்கியல், செவியறிவுறூஉ எத்தகு பாக்களில் வரப்பெறும்.

*"வாயுறை வாழ்த்தே வயங்க நாடின்*
*வேம்புங் கடுவும் போல வெஞ்சொல்*
*தாங்கதல் இன்றி வழிநனி பயக்குமென்று*
*ஒப்படைக் கிளவியின் வாயுறுத் தற்றே"* (108)

வாயுறை வாழ்த்தை விளங்க ஆராயின் வேம்பையும் கடுவையும் போன்ற வெஞ்சொல்லைச் சேர்க்காது இனிய நற்சொல்கள் அமைத்தும் பயனுள சொல்லில் பாதுகாப்புச் சொற்களைக் கூறுதலுமாம். வாயுறை என்பது சொல் மருந்து.

**அவையடக்கியல் :**

அவையடக்கியலாவது குற்றமற ஆராயின் அறியாதன சொல்லினும் பாகுபடுத்திக் கோடல் வேண்டும் என எல்லா மாந்தர்க்கும் தாழ்ந்து கூறுதல் ஆகும். (109)

*செவியறிவுறூஉ/செவியுறை*
*"செவியுறை தானே*
*பொங்குத லின்றிப் புரையோர் நாப்பண்*
*அவிதல் கடனெனச் செவியுறுத் தன்றே"* (110)

பெரியோர் நடுவில் வெகுள்தலின்றித் தாழ்ந்து ஒழுகுதல் கடன் எனச் செவியறிவுறுத்தல் செவியறிவுறூஉ/செவியுறை ஆகும்.

எ.டு

> "*பணிவுடைய னின்சொல னாத லொருவற்*
> *கணியல மற்றுப் பிற*" (குறள்)

இது வெண்பாவால் வந்த செவியறிவுறூஉ

> "*காய்நெல் லறுத்துக் கவளம் கொளினே*
> *மாநிறை வில்லதும் பலநாட் காகும்*
> *நூறுசெறு வாயினும் தமித்துப்புக் குளினே*
> *வாய்புகு வதனினும் கால்பெரிது கெடுக்கும்*
> ........................................
> *யானை புக்க புலம் போலத்*
> *தானும் உண்ணான் உலகமுங் கெடுமே* (புறம்)

வாயுறை வாழ்த்தும், அவையடக்கியலும் செவியறிவுறூஉவும் கலியினும் வஞ்சியினும் வரப்பெறா. ஆசிரியப்பாவினும், வெண்பாவினும் வரப்பெறும். (107)

51. மருட்பாவில் வருகின்ற வாழ்த்துக்கள் எவை?

புறநிலை வாழ்த்தும், வாயுறை வாழ்த்தும் செவியறிவுறூஉம் ஆசிரியப்பா, வெண்பா இணைந்து தோன்றிய மருட்பாவில் வரப்பெறும்.(154)

### 8.10.2 வெண்பாவின் வகைகள்

> "*நெடுவெண் பாட்டே குறுவெண் பாட்டே*
> *கைக்கிளை பரிபாட் டங்கதச் செய்யுளோ*
> *டொத்தவை யெல்லாம் வெண்பா யாப்பின*" (114)

52. பஃறொடை வெண்பா எத்தனை வகைப்படும்?

நெடுவெண்பாட்டு, குறுவெண்பாட்டு, கைக்கிளை, பரிபாடல், அங்கதச் செய்யுள் ஆகிய இவை ஒத்த பிறவும் எல்லாம் வெண்பா யாப்பினை உடைய.

நெடுவெண் பாட்டு :

அளவடியின் நெடிய பாட்டு ஐந்து அடி முதல் பன்னிரண்டு அடிவரை வரும். இது பஃறொடை வெண்பா 2. இன்னிசைப் பஃறொடை வெண்பா.

**1. நேரிசைப் பஃறொடை வெண்பா**

ஒரூஉத் தொடை பெற்று வருவது.

எ.டு

> "*பன்மாடக் கூடல் மதுரை நெடுந் தெருவில்*
> *என்னோடு நின்றார் இருவர் அவருள்ளும்*
> *பொன்னோடை நன்றென்றாள் நல்லளே - பொன்னோடை*
> ........................................
> *திருந்தார்நன் றென்றேன் தியேன்*"

இதில் மூன்றாம் அடியில் 'பொன்னோடை' என்பதற்கு ஏற்பப்

பொன்னோடை' என்ற தனிச்சொல் ஒரூஉத் தொடை பெற்றது. இஃது ஆறடியால் வந்த நேரிசைப் பஃறொடை வெண்பா.

**2. இன்னிசைப் பஃறொடை வெண்பா**

ஒரூஉத் தொடையின்றி வருவது.

*எ.டு "சேற்றுக்கால் நீலம் செருவென்ற வேந்தன்வற்*

*.........................................*

*வேற்படை இன்றியே யொத்தன மாவேடர்*

*ஆற்றுக்கா லாட்டியர் கண்"*

இப்பாடலில் ஒரூஉத் தொடை வரவில்லை.

*"ஒரு பொருள் நுதலிய வெள்ளடி இயலான்*

*திரிபின்றி முடிவது கலிவெண் பாட்டே"* (147)

இப் பஃறொடை வெண்பாவில் புணர்தல் முதலான பொருள்களுள் யாதானும் ஒரு பொருளைக் குறித்துத் திரிபின்றி முடிவனவற்றைக் கலிவெண்பா என்பர்.

ஈற்றடியளவும் ஒருபொருளைக் குறித்து வெள்ளடி இயலால் திரிபின்றி முடிவது கலிவெண்பாட்டாம்.

**குறு வெண்பாட்டு :**

53. குறள் வெண்பா எத்தனை வகைப்படும்?

அளவடியிற் குறுகிய பாட்டு. இஃது இரண்டு அடியாலும் மூன்று அடியாலும் வரும். இரண்டடியால் வருவது குறள் வெண்பா. இஃது இரண்டு வகைப்படும். 1. குறள் வெண்பா 2. விகற்பக் குறள் வெண்பா.

**1. குறள் வெண்பா :**

இரண்டு அடியும் எதுகைத் தொடையும் பெற்று வருவது.

எ.டு

*"மலர்மிசை யேகினான் மாணடி சேர்ந்தார்*

*நிலமிசை நீடுவாழ் வார்"*

**2. விகற்பக் குறள் வெண்பா :**

எதுகை முதலான தொடை வராமல் தொடுப்பது/வருவது விகற்பக் குறள் வெண்பா.

54. சிந்தியல் வெண்பா எவ்வாறு வரும்?

எ.டு

*"உருவுகண் டெள்ளாமை வேண்டு உருள் பெருந்தேர்க்*

*கச்சாணி யன்னா ருடைத்து"*

மூன்றடியால் வருவது சிந்தியல் வெண்பா. இஃது இரண்டு வகைப்படும். 1. இன்னிசைச் சிந்தியல் வெண்பா 2. நேரிசைச் சிந்தியல் வெண்பா.

55. சிந்தியல் வெண்பாவின் வகைகள் யாவை?

**1. இன்னிசைச் சிந்தியல் வெண்பா :** மூன்று அடியும் எதுகைத் தொடையும் பெற்று வருவது.

எ.டு

*"நறுநீல நெய்தலும்கொட்டியுந் தீண்டப்*
*பிறநாட்டுப் பெண்டிர் முடிநாறும் பாரி*
*பிறநாட்டுப் பெண்டிர் அடி"*

2. நேரிசைச் சிந்தியல் வெண்பா : வேறுபட்ட தொடையில் வருவது.

எ.டு

*"சுரையாழ அம்மி மிதப்ப வரையனைய*
*யானைக்கு நீத்து முயற்கு நிலையென்ப*
*கானக நாடன் சுனை"*

நான்கடியால் வரும் வெண்பா இரண்டு. 1. நேரிசை வெண்பா2. இன்னிசை வெண்பா

1. நேரிசை வெண்பா : நான்கடியாய் இரண்டாம் அடியின் இறுதி ஒரூஉத் தொடை பெற்று வருவது.

2. இன்னிசை வெண்பா : நான்கடியாய் இரண்டாம் அடியின் இறுதி ஒரூஉத் தொடை பெறாது வருவது.

**கைக்கிளை வெண்பா :**

கைகிளைப் பொருள் பற்றி வருவது.

*"கைக்கிளை தானே வெண்பா வாகி*
*ஆசிரிய இயலான் முடியவும் பெறுமே"* (115)

கைக்கிளைப் பாடல் முதல் இரண்டடி வெண்பாவாகிக் கடைசி இரண்டடி ஆசிரியமாகி முடிவுறும்.

எ.டு

*"உரவொலி முந்நீர் உலாய்நிமிர்ந் தன்ன*
*கரவரு காமங்கலை - இரவாதிர*
*முள்ளெயி றிலங்கு முனிணகை*
*வெள்வளை நல்காள் வீடுமென் உயிரே"*

(புறப்.வெண். மாலை)

**பரிபாடல் :**

பரிபாடலாவது தொகைநிலை வகையால் 'பா' இஃது என்று சொல்லப்படும் இலக்கணம் இன்றி எல்லாப் பாவிற்கும் பொதுவாய் நிற்றற்கும் உரித்து என்று சொல்லுவர். 116

எ.டு

*"மண்ணார்ந் திசைந்த முழவொடு கொண்டதோள்*
*கண்ணோ டெனவிழுஉங் காரிகை கண்டார்க்குத்*
*தம்மொடு நிற்குமோ நெஞ்சு"*

வெண்பா உறுப்பாகப் பரிபாடல் வந்தது.

**அங்கதம் :**

56. அங்கதம் எத்தனை வகைப்படும்? யாவை?

*"அங்கதந் தானே அரில்தப தெரியிற்*
*செம்பொருள் கரந்த தென விரு வகைத்தே"* (120)

அங்கதம் என்பதனை ஆராய்ந்தோமேயானால் அது செம்பொருள் அங்கதம் பழிகரப் பங்கதம் என இருவகைப்படும்.

57. செம் பொருளாயின ______

*"செம்பொரு ளாயின வசையெனப் படுமே"* (121)

வாய் காவாது சொல்லப்பட்ட வசையே செம்பொருள் அங்கதம் ஆகும்.

*"மொழிகரந்து மொழியினது பழிகரப் பாகும்"* (122)

தான் மொழியும் மொழியை மறைத்து மொழியின் அது பழிகரப்பங்கதம் ஆகும்.

58.'செய்யுள் தாமே இரண்டென மொழிப' - எவை?

சொல்லப்பட்ட செய்யுளை "செய்யுள் தாமே யிரண்டென மொழிப"(123) என்று சொல்லுவர் புலவர். அவை 1. செவியுறைச் செய்யுள் 2. **அங்கதச் செய்யுள்**

புகழொடும் பொருளொடும் உணரவரின் செவியுறைச் செய்யுள் என்று புலவர் கூறுவர். (124)

நசையொடும் வசையொடும் புணர்ந்த செய்யுள் அங்கதச் செய்யுள் என்பர். (125)

### 8.10.3 கலிப்பாவின் வகைகள்

கலிப்பா நான்கு வகைப்படும்.

59. கலிப்பா எத்தனை வகைப்படும்?

*"ஒத்தா ழிசைக் கலி கலிவெண் பாட்டே*
*கொச்சகம் உறழொடு கலிநால் வகைத்தே"* (126)

ஒத்தாழிசைக் கலிப்பா, கலிவெண்பாட்டு, கொச்சகக் கலிப்பா, உறழ்கலிப்பா என்பன கலிப்பாவின் வகைகளாம்.

**ஒத்தாழிசைக் கலிப்பா :**

60.ஒத்தாழி சைக்கலி எத்தனை வகைப்படும்? யாவை?

ஒத்தாழிசை என்னும் உறுப்புடைத்தாதலின் ஒத்தாழிசைக் கலிப்பா என்னும் பெயர் பெற்றது. இவ் 'ஒத்தாழிசைக் கலி' இரண்டு வகைப்படும்.127

இவ் ஒத்தாழிசைக் கலிப்பா தாழிசை, தரவு, சுரிதகம், தனிச்சொல் என்ற நான்கினை உறுப்பாகப் பெற்று வரும். (128)

ஒத்தாழிசைக் கலிப்பா முன்னிலை இடத்துத் தேவரைப் பராவும் பொருண்மையினை உடையது. (133)

61.ஒருபோடு எத்தனை வகைப்படும்? யாவை?

இவ் ஒத்தாழிசைக் கலி இருவகைப்படும். 1. வண்ணக ஒத்தாழிசை 2. ஒருபோகு (134)

வண்ணக ஒத்தாழிசை, தரவும், தாழிசையும், எண்ணும், சுரிதகமும்

என்று சொல்லப்பட்ட 4 உறுப்பினை உடையது. (135)

'ஒருபோகு' என்னும் கலி இரண்டு வகைப்படும். (141)

அவை 1. கொச்சக ஒரு போகு 2. அம்போதரங்க ஒருபோகு ஆகும். 142

கொச்சக ஒருபோகு : தரவு முதலான உறுப்புகளில் தரவு இல்லாமல் தாழிசை முதலான உறுப்புகள் பெற்று வரும். தாழிசையின்றித் தரவு முதலான உறுப்புகள் பெற்றும், எண்ணாகிய உறுப்புகளை இடையிட்டுத் தனிச்சொல் இல்லாமல் வரும். சுரிதமின்றித் தரவு மட்டும் நிமிர்ந்து ஒழுகி முடியும். ஒத்தாழிசையின் யாக்கப்பட்ட யாப்பினும் அதற்கு உரித்தாக ஓதப்பட்ட கடவுள் வாழ்த்துப் பொருண்மையின்றிக் காமப் பொருளாகவும் வரும். இவ்வாறு வருவது கொச்சக ஒரு போடு ஆகும்.(143)

*"ஒருபான் சிறுமை இரட்டியதன் உயர்பே"* (144)

இக் கொச்சக ஒருபோகு 10 அடிச் சிறுமையாகவும் 20 அடிப் பெருமையாகவும் வரும்.

**அம்போதரங்க ஒரு போகு :**

அம்போதரங்க ஒரு போகுக்கு 60 அடி பெருமை. 30 அடி சிறுமை. (145)

**கலிவெண்பா** : (முன்னரே விளக்கப்பட்டது) (147)

கொச்சகக் கலிப்பா : தரவாகிய உறுப்பும் சுரிதகமாகிய உறுப்பும் முதலும் முடிவும் வருதலின்றி இடையிடை வந்து தோன்றும். ஐஞ்சீரடி பல வரும். தரவு, தாழிசை, தனிச்சொல், சுரிதகம், சொற்சீரடி, முடுகிலடி என்ற ஆறு உறுப்புகளை உடைத்தாகியும் இல்லாதாகியும் வெண்பாவின் இயல்பினால் புலப்படத் தோன்றும். இத்தகு பாநிலை வகையே கொச்சகக் கலியாகும் என்பர். இலக்கணமறிந்த புலவர். (148)

**உறழ்கலி** : கூற்றும் மாற்றமும் விரவி வந்து சுரிதகமின்றி முடிவது உறழ்கலியின் இலக்கணமாகும். (149)

### 8.10.4 ஆசிரியப்பாவின் வகைகள்

வெண்பா, கலிப்பாவிற்கு உரிய வகைகளை விளக்கிய தொல்காப்பியர் ஆசிரியப்பா, வஞ்சிப்பாவிற்குரிய வகைகளைச் சுட்டவில்லை. மண்டிலங்குட்டம் (113) என்ற நூற்பாவிற்கு உரை கூறவந்த இளம்பூரணர் இவ்விருபாக்களின் வகைகளைக் கூறுகிறார்.

62.ஆசிரியப்பா எத்தனை வகைப்படும்?

ஆசிரியப்பாக்கள் அடிநிலையில் பெயரிட்டு வழங்கப்படும். அவை

**1. நேரிசை ஆசிரியப்பா**

ஈற்றயலடி முச்சீராய் வருவது.

*"முதுகுறைந் தனளே முதுக்குறைந் தனளே*
*மலையன் ஒள்வேற் கண்ணி*
*முலையும் வாரா முதுக்குறைந் தனளே"*

ஈற்றயலடி மூன்று சீரால் வந்தது.

2. **இணைக்குறளாசிரியப்பா :** முதல் சீரும் இறுதிச் சீரும் அளவொத்து இடையிடையே குறைந்து வருவது.

*"நீரின் தன்மையும் தீயின் வெம்மையும்*
*சாரச் சார்ந்து தீரத் தீரும்*
*சாரல் நாடன் கேண்மை*
*சாரச் சாரச் சார்ந்து*
*தீரத் தீரத் தீர்பொல் லாவே"*

**3. நிலை மண்டில ஆசிரியப்பா**

எல்லா அடியும் அளவொத்து வருவது நிலைபண்டில ஆசிரியப்பா.

எ.டு

*"வேரல் வேலி வேர்க்கோட் பலவின்*
*சாரல் நாட செவ்வியை யாகுமதி*
*யாரஃ தறிந்திசி னோரே சாரற்*
*சிறுகோட்டுப் பெரும்பழந் தூங்கி யாங்கிவள்*
*உயிர்தவச் சிறிது காமமோ பெரிதே"*

**4. அடிமறி மண்டில ஆசிரியப்பா**

ஓர் அடியை முன்னும் பின்னும் மாற்றி அமைத்தாலும் ஓசையும் பொருளும் மாறாமல் வருவது அடிமறிமண்டில ஆசிரியப்பாவாகும்.

எ.டு

*"சூரல் பம்பி சிறுகான் யாறே*
*சூரர மகளிர் ஆரணங் கினரே*
*வாரவை எனினே யானஞ் சுவலே*
*சாரல் நாட நீவர லாறே"*

இதில் எந்த ஓர் அடியை முன்னும் பின்னுமாக எங்கு மாற்றிப் போட்டாலும் ஓசையும் பொருளும் மாறாது.

இவை தவிர 1. அடிமயங்கு ஆசிரியப்பா 2. வெள்ளடி மயங்கு ஆசிரியப்பா 3. வஞ்சியடி மயங்கு ஆசிரியப்பா என்பனவும் உண்டு.

1. முச்சீரடி முதல் அறுசீரடி ஈறாக மயங்கி வரும் ஆசிரியப்பா அடிமயங்கு ஆசிரியப்பா எனப்படும்.

2. வெண்பா அடிமயங்கிய ஆசிரியப்பா வெள்ளடி மயங்கு ஆசிரியப்பா எனப்படும்.

3. வஞ்சியடி மயங்கிய ஆசிரியப்பா வஞ்சியடி மயங்கு ஆசிரியப்பா எனப்படும்.

### 8.10.5 வஞ்சிப்பாவின் வகைகள்

63.வஞ்சிப்பா எத்தனை வகைப்படும்?

வஞ்சிப்பா இருவகைப்படும். 1. இரு சீரடி வஞ்சிப்பா 2. முச்சீரடி வஞ்சிப்பா.

வஞ்சிப்பாவின் இலக்கணமாகிய வஞ்சியுரிச் சீரானும் ஏனைச் சீரானும் தூங்கலோசையானும் வந்து தனிச்சொல் பெற்று ஆசிரியச் சுரிதகத்தால் முடியும். இரு சீரடியால் வருவது இரு சீரடி வஞ்சிப்பா எனப்படும்.

எ.டு

*"பூந்தாமரைப் போதலமரத்*
*தேம்புனலிடை மீன்திரிதரும்"*

2. வஞ்சிப்பாவின் இலக்கணம் பெற்று முச்சீரடியால் வருவது முச்சீரடி வஞ்சிப்பா எனப்படும்.

### 8.10.6 பாக்களின் உறுப்புகள்

பரிபாடலுக்கும் கலிப்பாவிற்கும் உறுப்புகள் உண்டு.

**பரிபாடல் உறுப்புகள் :**

*"கொச்சகம் அராகஞ் சுரிதகம் எருத்தொடு*
*செப்பிய நான்கும் தனக்குறுப் பாகக்*
*காமங் கண்ணிய நிலைமைத் தாகும்* (117)

கொச்சகம், அராகம், சுரிதகம், எருத்து என்ற இந்நான்கு உறுப்புகளைக் கொண்டு காமங்கண்ணிய நிலைமைத்தாக வரும். இது அறத்தினும் பொருளினும் வராது.

**கொச்சகம்** : கொச்சகம் என்பது ஐஞ்சீரடுக்கி வரும். ஆசிரிய அடி, வெண்பா அடி, வஞ்சியடி, களயடி, சொற்சீரடி, முடுகியலடி என்னும் அறுவகை அடியாலும் அமைந்த பாக்களை உடைத்தாகி வெண்பா இயலால் புலப்படத் தோன்றும்.

**அராகம்** : ஈரடியானும் பலவடியானும் குற்றெழுத்து நெருங்கிவரத் தொடுப்பது. இதன் பெருமைக்கு எல்லை ஆறடி. சிறுமைக்கு எல்லை இரண்டடி.

**சுரிதகம்** : ஆசிரிய இயலான் ஆதல், வெண்பா இயலான் ஆதல் பாட்டிற் கருதிய பொருளை முடித்து நிற்பது.

**எருத்து** : இதன் பெருமைக்கு எல்லை 10 அடி. சிறுமைக்கு எல்லை 2 அடியாக வரும்.

இந்த நான்கு உறுப்புகளில் சுரிதகம் இல்லாமலும் பரிபாடல் முடியும். இந்த நான்கு உறுப்புகள் தவிர சொற்சீரடியும், முடுகியலடியும் உறுப்புகளாக வரும்.

**சொற்சீரடி** : சொல்லே சீராம் தன்மை பெற்று நிற்பது சொற்சீரடி

எனப்படும். பாட்டின்றித் தொகுக்கப்பட்டு வரும் வகையில் அஃதாவது கட்டுரை வகையால் ஈரடியால் பலவாகியும், ஓரடியால் பலவாகியும் வரும். முச்சீரடியாலும் இரு சீரடியாலும் வரும். ஒழிந்த அசையினை உடைத்தாகி வரும். எனவே இறுதிச்சீர் ஒன்றும் இரண்டும் அசை குறையப் பெறும். ஒரு சீரின் கண்ணே பிறிதொரு சீர் வரத் தொடுக்காது ஒழியிசை வரத் தொடுப்பது சொற்சீரடியாகும். (119)

**முடுகியலடி :** ஐந்தடியானும், ஆறடியானும், ஏழடியானும் குற்றெழுத்துப் பயிலத் தொடுப்பது முடுகியலடி எனப்படும். (118)

இவை அனைத்தும் பரிபாடலுக்கு உரிய உறுப்புகள் ஆகும்.

**கலிப்பாவின் உறுப்புகள் :**

1. ஒத்தாழிசைக் கலிப்பா உறுப்புகள் : தாழிசை, தரவு, சுரிதகம், அடைநிலைக் கிளவி என்ற 4 உறுப்புகளைக் கொண்டது ஒத்தாழிசைக் கலிப்பா ஆகும். (128)

64. அடை நிலைக்கிளவி என்பது என்ன?

**தனிச்சொல் :** அடைநிலைக் கிளவி எனப்படும் தனிச்சொல், தாழிசைக்குப் பிறகு வரும் என்பர் புலவர். ஆயினும் சிறுபான்மை தாழிசைக்கு முன்னர் வருதலும் உண்டு. (131)

65.சுரிதகத்தின் வேறு பெயர் என்ன?

**சுரிதகம் :** சுரிதகம் என்பதற்கு வைப்பு என்ற பெயரும் உண்டு. இது தரவுக்குச் சமமான அளவு உடையதாகவும் அதனைவிடக் குறைந்த அளவினை உடையதாகவும் குற்றம் தீர்ந்த பாட்டின் இறுதி நிலையை உரைக்கும் தரவிற்குச் சமமான அளவு என்பது சிறுமை 4 அடியாகவும் பெருமை 12 அடியாகவும் வருதல். அடிகைப்படுத்தலாவது சிறுமை 3 அடியாகவும் 2 அடியாகவும் வருதல் உண்டு. இச்சுரிதகம் ஆசிரியம், வெண்பா இவற்றாள் வரும். (132)

**2. வண்ணக ஒத்தாழிசைக் கலிப்பா :** இத தரவு, தாழிசை, எண், சுரிதகம் என்ற 4 உறுப்புகளைக் கொண்டதாகும்.

பொதுவாக ஒத்தாழிசைக் கலியின் தரவு 4 அடி சிறுமையாகவும், 12 அடி பெருமையாகவும் வரப்பெறும். (129)

இடைநிலைப்பாட்டு என்னும் தாழிசை தரவில் சுருங்கி வரும். நான்கடியின் மிகாது. மூன்றடியானும் இரண்டடியானும் வரப்பெறும்.(130)

**தரவு :** வண்ணக ஒத்தாழிசைக் கலிப்பாவிற்குத் தரவு நான்கும், ஆறும், எட்டும் ஆகிய அளவடியினாலே வரும். (136)

**தாழிசை :** தாழிசை தம்முள் அளவொத்து மூன்றாகி வரும். தரவினைவிடச் சுருங்கித் தோன்றும். (137)

**சுரிதகம் :** ‘அடக்கியல் வரும் தரவோடொக்கும்” (138)

அடக்கியலாகிய சுரிதகம் தரவுக்குச் சமமான இலக்கணமுடையது.

**எண் :** முதலில் தொகுத்த உறுப்புப் பெருகிப் பின் தொடுக்கும் உறுப்புச் சுருங்கி வருவது ‘எண்’ ஆகும். (139)

இவ் 'எண்ணானது' தனிச்சொல் என்ற உறுப்பு வந்த போது இடைஒழியாமல் வருதல் வேண்டும். தனிச்சொல் என்ற உறுப்பு இல்லாத போது இடை ஒழிந்து வரலாம். (140)

ஒருபோகு : ஒத்தாழிசைக் கலிப்பாவிற்குச் சொல்லப்பட்ட உறுப்புகளில் ஒன்றும் இரண்டும் குறைந்து வரும். 1. தரவு இல்லாமல் தாழிசை முதலான உறுப்புகள் பெற்று வரும். 2. தாழிசை இல்லாமல் தரவு முதலான உறுப்புகள் பெற்று வரும். 3. 'எண்' ஆகிய உறுப்புகளை இடைபாட்டுத் தனிச்சொல் வராமலும் போகும். 4. சுரிதகம் இல்லாமல் தரவு நிமிர்ந்து ஒழுகி முடியும்.

அம்போதரங்கத்தின் உறுப்புகள் : எருத்து, கொச்சகம், அராகம், சிற்றெண், அடக்கியல், வாரம் என்ற 5 உறுப்புகளைப் பெற்று வருவது. அப்போதரங்க ஒரு போகு ஆகும். எருத்து என்பது தரவு. (146)

கொச்சகக்கலி உறுப்புகள் : தரவும் சுரிதகமும் இடையிடை வந்து தோன்றவுங் கூடும். தரவு, தாழிசை, தனிச்சொல், சுரிதகம், சொற்சீரடி, முடுகியலடி என்ற உறுப்பினைப் பெற்றும் வரும். (148)

### 8.10.7 பாக்கள் சிலவற்றின் இயல்பு

ஒத்தாழிசைக் கலிக்கு உறுப்பாகிய ஒத்தாழிசையும் ஆசிரியப்பாவின்கண் நிலைமண்டிலம் அடிமறிமண்டிலம் என்பனவும் ஒத்தாழிசைக்கும் கொச்சகத்திற்கும் பொதுவாகிய குறைந்து வரும் குட்டமும் நாற்சீரடிக்கும் பொருந்தின என்பர். (111)

*'குட்டம் எருத்தடி யுடைத்து மாகும்''* (112)

தரவு என்னும் கலிப்பாவின் முதல் உறுப்பின் ஈற்றயலடி முச்சீரால் வரவும் பெறும்.

மண்டிலமாகக் கூறப்படும் பாவும் குட்டமெனக் கூறப்படும் பாவும் அகவலோசையின் தன்மையைக் கொண்டவை. இப்பாவிற்கு ஈற்றெழுத்து வரையறுத்து உணர்த்தாமையின் எல்லா ஈறும் ஆகும். (113)

### 8.10.8 பாக்களின் அடிவரையறை

ஒவ்வொரு பாக்களுக்கும் சிற்றெல்லை, பேரெல்லை என அடிவரையறை செய்கிறார்.

66. ஆசிரியப் பாவிற்கு பேரெல்லை யாது?

**ஆசிரியப்பா :**

ஆசிரியப்பாவிற்குப் பேரெல்லை 1000 அடி. சிற்றெல்லை மூன்றடி.(150)

எ.டு *நீலமேனி வாலிழை பாகத்து*
*ஒருவன் இருதாள் நீழற்கீழ்*
*மூவகை யுலகு முகிழ்த்தன முறையே*

(ஐங்குறுநூறு : கடவுள் வாழ்த்து)

இது மூன்றடியால் வந்த ஆசிரியப்பா.

பத்துப்பாட்டு, சிலம்பு முதலானவை பல அடிகளில் வந்துள்ளன.

**வஞ்சிப்பா :**

'ஆசிரிய நடைத்தே வஞ்சி' 104 என்று கூறினமையால் மேற்சுட்டிய ஆசிரியப்பாவிற்குரிய அடிவரையறை வஞ்சிப்பாவிற்கு உரியதாகும்.

**வெண்பா :**

*"நெடுவெண் பாட்டே முந்நான் கடித்தே*
*குறுவெண் பாட்டிற் களவேழ் சீரே"* (151)

வெண்பாவில் நெடுவெண் பாட்டிற்கு எல்லை 12 அடி. குறுவெண்பாட்டிற்கு அளவடியும் சிந்தடியுமாகிய இரண்டடியாம்.

எ.டு

*"அவிசொரிந் தாயிரம் வேட்டலி னொன்றன்*
*உயிர்செகுத் துண்ணாமை நன்று"* (குறள்)

இஃது இரண்டடியால் வந்த குறு வெண்பாட்டு.

*"துகடீர் பெருஞ்செல்வம் தோன்றியக்கால் தொட்டுப்*
*பகடு நடந்த கூழ் பல்லாரோ டுண்க*
*அகடுற யார்மாட்டும் நில்லாது செல்வஞ்*
*சகடக்கால் போல வரும்"* (நாலடி)

இது நான்கடியால் வந்த வெண்பா.

**அங்கதப்பா :**

அங்கதப் பாட்டாகிய வெண்பாவிற்கு எல்லை சிறுமை 2 அடி. பெருமை 12 அடி. (152)

**கலிப்பா :**

கலி வெண்பா கைகிளைப் பொருளைப் பற்றிய பா. செவியுறை வாழ்த்து, வாயுறை வாழ்த்து, புறநிலை வாழ்த்து என்னும் பொருண்மைக் கண் வரும் வெண்பாக்கள் எல்லாம் அடியளவு வரையறுக்கப்படா. பொருள் முடிவு பெறும் வரை வேண்டிய அளவானே அடிகள் வரப்பெறும். (153)

**பரிபாடல் :**

பரிபாடலுக்கும் பெருமை 400 அடி. சிறுமை 25 அடி ஆகும்.

**பண்ணத்தி :**

*"பாட்டிடைக் கலந்த பொருள வாகிப்*
*பாட்டி னியல பண்ணத் தியே"* (173)

பண்ணைத் தோற்றுவிக்கும் செய்யுட்கள், பாட்டினிடத்துக் கலந்த பொருளை உடையனவாகிப் பாட்டுக்களின் இயல்பை உடையனவாம். அவை சிற்றிசையும் பேரிசையும் முதலாக இசைத் தமிழில் ஓதப்படுவன.

இப்பண்ணத்தி பிசியோடொத்த அளவினை உடையதாரும். பிசி என்பது இரண்டடி அளவின் கண்ணே வருவதனால் இதுவும் இரண்டடியில் வரும்.(174)

எ.டு "கொன்றை வேந்தன் செல்வன் அடியினை
என்று மேத்தித் தொழுவோம் நாமே"

"அடிநிமிர் கிளவி ஈரா றாகும்
அடியிகந்து வரினுங் கடிவரை யின்றே" (174)

பாவினம் 12 ஆகும். ஆசிரியம், வஞ்சி, வெண்பா, கலி என்ற நான்கு பாக்களொடும் தாழிசை, துறை, விருத்தம் என்ற மூன்றும் உறழப் பன்னிரண்டாகும்.

ஈண்டுச் சொல்லப்பட்ட அளவியல் சொல்லிய முறைப்படி வருமே தவிரப் பிறதில்லை என்பதாம். (156)

## 8.11 அடிவரையறை இல்லாதன

"எழுநிலத் தெழுந்த செய்யுட் டெரியின்
அடிவரை யில்லன ஆறென மொழிப" (157)

பாட்டு, உரை, நூல், வாய்மொழி, பிசி, அங்கதம், முதுசொல் என்ற ஏழு நிலங்களுள் பாட்டு நீங்கலான ஆறும் அடிவரையறையில்லாதனவாம். 67. அடிவரை யறையில்லாதன எத்தனை?

"அவைதாம்
நூலினான உரையி னான
நொடியொடு புணர்ந்த பிசியினான
ஏது நுதலிய முதுமொழி யான
மறைமொழி கிளர்ந்த மந்திரத் தான
கூற்றிடை வைத்த குறிப்பி னான" (158)

அடிவரையறையில்லாதன ஆறு. அவை நூல், உரை, நொடித்தன் மாத்திரையாகிய பிசி, ஒருமொழிக் கேதுவாகி வரும் முதுமொழி, மறைத்துச் சொல்லுஞ் சொல்லாற் கிளந்த மந்திரம், சொல்லுகின்ற பொருளை இடைகரந்து சொல்லும் குறிப்பு என்பனவாம்.

**நூல் :**

நூல் என்று சிறப்பித்துச் சொல்லப்படுவது முன்னும் பின்னும் மாறுபடாமல் கருதிய பொருளைத் தொகுத்தும் வகுத்தும் பொருள் காட்டித் தன்னுள்ளே அடங்கி நின்று, விரிந்த உரையோடு பொருந்தப் பெற்று நுட்பமாக விளக்குவதாம். (159) 68. நூல் எத்தனை வகைப்படும்?

"அதுவே தானும் ஒருநால் வகைத்தே" (160)

இந்நூல் நான்கு வகையினை உடைத்தாம். அவை 1. ஒரு பொருள் நுதலிய சூத்திரம் 2. இனமொழி கிளந்த ஒத்து 3. பொதுமொழி கிளந்த படலம் 4. மூன்று உறுப்பு அடக்கிய பிண்டம் என்பனவாகும். (161)

**சூத்திரம் :**

நால்வகை நூல்களுள் சூத்திரம் என்பது கண்ணாடியின் நிழல்போல விளங்கத் தோன்றி ஆராயாமற் பொருள் நனி விளங்குமாறு யாப்பின் கண்ணே தோன்ற யாப்பதாகும். (162)

**ஓத்து/இயல்**

*"நேரின மணியை நிரல்பட வைத்தாங்கு*
*ஓரினப் பொருளை ஒருவழி வைப்பது*
*ஓத்தென மொழிப உயிர்மொழிப் புலவர்"* (163)

ஒரே வகையான மணியை வரிசையாகச் சேர்த்து வைத்தது போல், ஒரே வகையான பொருளை ஓரிடத்தே அமைத்து வைத்தலை உயர்ந்த மொழிகளையுடைய புலவர் ஓத்து என்பர்.

**படலம் :**

ஓரினமாகிய நெறியின்றி, பல வகையான பொருள்களும் கலந்து பொது மொழியால் தொடர்புபடின் 'அது படலம்' ஆகும். (164)

**பிண்டம் :**

மூன்று உறுப்பினையும் அடக்கிய தன்மையுடைத்தாயின் அதனைப் புலவர் 'பிண்டம்' என்பர். (165)

அவற்றுள் சூத்திரத்தால் பிண்டமானது இறையனார் களவியல். ஓத்தினால் பிண்டமானது பன்னிருபடலம். அதிகாரத்தால் பிண்டமானது தொல்காப்பியம்.

**உரை :**

69. உரை எத்தனை வகைப்படும்?

*"பாட்டிடை வைத்த குறிப்பி னானும்*
*பாவின் றெழுந்த கிளவி யானும்*
*பொருண்மர பில்லாப் பொய்ம்மொழி யானும்*
*பொருளொடு புணர்ந்த நகைமொழி யானுமென்று*
*உரைவகை நடையே நான்கென மொழிப"* (166)

உரை நான்கு வகைப்படும். அவை 1. பாட்டிடை வைத்த குறிப்பு 2.பாவின்று எழுந்த கிளவி 3. பொருள் மரபில்லாப் பொய்ம்மொழி 4. பொருளொடு புணர்ந்த நகை மொழி என்பனவாம்.

அது மைந்தர்க்கு உரைப்பவை, மகளிர்க்கு உரைப்பவை என இரண்டு வகைப்படும். (167)

மகளிர்க்கு உரைக்கும் உரை செவிலிக்கும் உரியது. மைந்தர்க்கு உரைக்கும் உரை எல்லார்க்கும் உரியது. (168)

70. பிசி எத்தனை வகைப்படும்?

**பிசி :**

பிசி இருவகைப்படும். அவை 1. ஒப்பொடு புணர்ந்த உவமத்தால் வருவது. 2. தோன்றுவது கிளந்த துலைவினால் வருவது. (169)

எ.டு அச்சுப் போல பூப்பூக்கும்

இது உவமைபற்றி வந்த பிசி.

**முதுமொழி :**

நுண்மை விளங்கவும், சுருக்கம் விளங்கவும், ஒளியுடைமை விளங்கவும் மென்மை விளங்கவும் என்று இன்னோரன்ன விளங்கவும் தோன்றிக் கருதின பொருளை முடித்தற்கு வருவனவற்றை முதுமொழி என்று சொல்லுவர். (170)

**மந்திரம் :**

*"நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த*
*மறைமொழி தானே மந்திரம் என்ப"* (171)

நிறைந்த மொழியையுடைய மாந்தர் தமது ஆணையிற் சொல்லப்பட்ட மறைச்சொல் மந்திரம் ஆகும்.

**குறிப்பு :**

எழுத்தோடும் சொல்லோடும் புணராதாகிச் சொல்லினால் உணரப்படும். பொருளின் புறத்ததவே குறிப்புமொழி. (172)

இங்கு சொன்ன வகையினாற் சொல்லப்பட்டனவற்றை ஆராயுங்காலத்து அளவியல் வகை அத்துணைப் பாகுபடும். (176)

## 8.12 திணை

'திணை' என்பது ஒழுக்கம். இது குறித்து முன்னரே விளக்கப்பட்டது.

*"கைக்கிளை முதலா ஏழ்பெருந் திணையும்*
*முற்கிளந் தனவே மறைவயி னான"* (177)

திணையாவது கைக்கிளை, முல்லை, குறிஞ்சி, பாலை, மருதம், நெய்தல், பெருந்திணை என்பன. அவை முறைமையினால் முன்னர்க் கூறப்பட்டன.

## 8.13 கைகோள்

'கைகோள்' என்பது ஒழுக்கங்கோடல் என்பர் பேராசிரியர். அகத்திணை களவு, கற்பு என இரண்டு கைகோளாகப் பிரியும். அகத்திணை ஒழுக்க விகற்பமாகிய களவு, கற்பு என்னும் பாகுபாடுகளை அறியச் செய்தல் கைகோள் என்னும் உறுப்பாம்.

71. கைகோள் வகையாவை?

**களவு :**

களவு நால்வகைப்படும். அவை 1. இயற்கைப் புணர்ச்சி 2.இந்தலைப்பாடு 3. பாங்கற்கூட்டம் 4. தோழியிற் கூட்டம் என்பனவாம். இந்நான்கு வகையானும் இவற்றைச் சார்ந்து வரும் சொல்லானும் களவொழுக்கம் இது என்று கருதுமாற்றால் செய்யுள் செய்தல் 'மறையோர்' எனப்படும். (178)

72. களவு எத்தனை வகைப்படும்?

**கற்பு :**

கற்பு என்பது இருவகைப்படும். 1. களவு வெளிப்படுதல் / மறை வெளிப்படுதல். 2. தமரிற் பெறுதல் / களவொழுக்கமின்றித் தமரானே (உறவினர்) பெறுதல். இவ் இரண்டும் முதலாகிய இயற்கை நெறியில் தப்பா மகிழ்தலும் புலத்தலும், ஊடலும், ஊடல் தீர்த்தலும், பிரிதலும் என்று சொல்லப்பட்ட இவற்றோடு கூடிவருவது கற்பு என்று சொல்லப்படும். (179)

**கைகோள் வகை :**

*"மெய்பெறும் அவையே கைகோள் வகையே"* (180)

மேற்சொல்லப்பட்ட பொருள்பெற வந்த களவு, கற்பு என்னும் இரண்டு கைகோள் வகையாகும்.

**8.14 கூற்று**

'கூற்று' என்பதனைப் 'பொருள் வகை' என்று இளம்பூரணர் கூறுவார். தாம் எண்ணுகின்ற கருத்தினை வெளியில் சொல்பவர் கூற்று நிகழ்த்துபவர் ஆவார்.

**களவில் கூற்று நிகழ்த்துதற்கு உரியோர் :**

73. களவில் கூற்று நிகழ்த்துதற்கு உரியோர் எத்தனை பேர்?

களவொழுக்கத்தில் கூற்று நிகழ்த்துவதற்கு உரியவர்கள் பார்ப்பான், பாங்கன், தோழி, செவிலி, கிழவன், கிழத்தி அறுவர் ஆவர். (181)

எ.டு

*'ஏனல் காவ லிவளு மல்லள்*
*சொல்லு மாடுப கண்ணினானே'*

என்பது தோழி கூற்று.

**கற்பில் கூற்று நிகழ்த்துதற்கு உரியோர் :**

74. கற்பில் கூற்று நிகழ்த்துதற்கு உரியோர்

பாணன், கூத்தன், விறலி, பரத்தை அறிவர். கண்டோர் என்ற அறுவருடன் களவில் கூற்று நிகழ்த்துகின்ற பார்ப்பான், பாங்கன், தோழி, செவிலி, தலைவன், தலைவி என்ற அறுவரும் இணைந்து பன்னிருவர் கற்பில் கூற்று நிகழ்த்துதற்கு உரியவர்கள் ஆவர். (182)

**கூற்று நிகழ்த்துதற்குரியரல்லாதார் :**

களவு, கற்பு என்ற இரண்டிலும் ஊரில் உள்ளவர்களும், அயல்மனையில் உள்ளவர்களும், சேரியில் உள்ளவர்களும் தலைவியின் நோயினைக் குறிப்பினால் அறிவோரும், தந்தையும், தமையனும் ஆகிய இவ் அறுவகையோரும் கூற்று நிகழ்த்துதற்குரியரல்லாதார் ஆவார். இவர் கூற்றாகப் பிறர் கொண்டு கூறினல்லது இவர் தாமே கூறினாராச் செய்யுள் செய்தல் இல்லை. (183)

**நற்றாய் மரபு :**

*"கிழவன் தன்னொடும் கிழத்தி தன்னொடும்*
*நற்றாய் கூறல் முற்றல் தோன்றாது"* (184)

தலைவனோடும், தலைவியொடும் நற்றாய் கூறியதாகக் கூறும் வழக்கம் மிகுதியாக இல்லை. எனவே நற்றாய் ஏனையோரை நோக்கியே கூறுவாள் என்பது பெறப்படும்.

**கண்டோர் மரபு :**

ஒண்டொடி மாதர் எனப்படும் நற்றாய், தோழி, செவிலி இவர்களொடும் தலைவனோடும் தலைவியோடும் வழியிடைக் கண்டோர் உரையாடுதல் உலகியலிற் கண்ட வழக்கம் ஆகும். எனவே ஏனையோருடன் உரையாடுதல் இல்லை. (185)

எ.டு

*"வில்லோன் காலன கழலே தொடியோள்*
*மெல்லடி மேலன சிலம்பே"*

**தலைவன் மரபு :**

தலைவியை உடன் கொண்டு போகும் இடைச்சுரத்தின் கண்ணே தலைமகள் உலகியல் நெறியை உளங்கொண்டு தனது ஆற்றல் தோன்ற ஆணை மொழியை எடுத்துரைத்தற்கும் உரியன். எனவே மெல்லிய காமம் நிகழுமிடத்து வன்மொழியாகிய ஆணையினைத் தலைமகளிடம் கூறுதல் பொருந்தாதாயினும் உலகியல் கருதி அவ்விடத்துக் கூறுதல் தவறாகாது.(186)

எ.டு

*"அழிவிலர் முயலு மாரீவ மாக்கள்*
*வழிபடு தெய்வம் கட்கண் டாஅங்கு*
*அலிமரல் வருத்தம் தீர*
*வருந்தா தேடுமதி வாலெயிற் றோயே (நற் : 9)*

இது நின்னை விடுதல் எனக்கு அறனென்று மெல்லெனச் செல்க எனத் தலைவன் தலைவியை மருட்டிக் கூறியது.

**தலைமக்கள் அல்லாதார் மரபு :**

கற்பில் கூற்று நிகழ்த்துதற்குரிய பார்ப்பான், பாங்கன், தோழி, செவிலி, தலைவன், தலைவி, பாணன், கண்டோர், வத்தன், விறலி, பரத்தை, அறிவர் என்கின்ற பன்னிருவருள் தலைவன், தலைவி ஒழிந்த பதின்மரும் அத்தலைவனோடும் தலைவியோடும் மேற்கூறிப் போந்த மரபினால் இடமும் காலமும் கருதி உரைநிகழ்த்துவதற்கு உரியவராவர்கள். (187)

## 8.15 கேட்போர்

*"மனையோள் கிளவியும் கிழவன் கிளவியும்*
*நினையுங் காலைக் கேட்குநர் அவரே" (188)*

மேலே சொல்லப்பட்ட பதின்மரும் தலைமகன் மொழியையும் தலைமகள் மொழியையும் கேட்பதற்கு உரியவராவர்.

75. தலைவன் தலைவி கூற்றைக் கேட்போர் எத்தனை பேர்?

எ.டு

*"ஞாயிறு காயும் வெவ்வறை மருங்கில்*
*கையில் ஊமன் கண்ணில் காக்கும்*
*வெண்ணெய் உணங்கல் போல*
*.........................................."* (குறுந்)

இது தலைமகன் கூற்று பாங்கன் கேட்டது.

பார்ப்பார், அறிவர் என்று சொல்லப்பட்ட இவ் இருவர் கூற்றையும் எல்லோரும் கேட்கப் பெறுவர். (189)

பரத்தையும் வாயில்களும் என்ற ஈரிடத்தும் தலைமகளைச் சுட்டாத கூற்றுப் பயனில்லை. (190)

வாயில்கள், உசாவுமிடத்துக் கிழத்தியைச் சுட்டாது தம்முள் உசாவுதலும் உரிமையாகும். (191)

*"ஞாயிறு திங்கள் அறிவே நாணே*
*கடலே கானல் விலங்கே மரனே*
*புலம்புறு பொழுதே புள்ளை நெஞ்சே*
*அவையில் பிறவும் நுதலிய நெறியால்*
*சொல்லுந போலவும் கேட்குந போலவும்*
*சொல்லியாங் கமையும் என்மனார் புலவர்"* (192)

ஞாயிறு, திங்கள், அறிவு, நாண், கடல், கானல், விலங்கு, மரன், உணர்வை மிகுதிப்படுத்தும் பொழுது, பறவை, நெஞ்சு ஆகிய இப்பதினொன்றும் இவை போன்ற பிறவும் தாம் கருதிய நெறியினால் ஒன்றைச் சொல்லுந போலவும் கேட்பன போலவும் சொல்லி அமையப்பெறும் என்பர் புலவர்.

எ.டு

*"மாதர் முகம் போல் ஒளிவிட வல்லையேற்*
*காதலை வாழி மதி"* (குறள் : 1118)

இதில் திங்கள் கேட்பது போல் உரைக்கப்பட்டது.

### 8.16 களன் முதலிய சிறப்புறுப்புகள்

செய்யுளின் சிறப்புறுப்புகளாக களன், காலம், பயன், மெய்ப்பாடு, எச்சம், முன்னம், பொருள், துறை, மாட்டு என்பன அமைகின்றன.

**களன் :**

*"ஒருநெறிப் பட்டாங் கோரியன் முடியும்*
*கரும நிகழ்ச்சி இடமென மொழிப"* (193)

**ஒருநெறிப்படுதலாவது** : அகமாயினும் புறமாயினும் ஒரு பொருள்மேல் வருதல். ஓரியல் முடிதலாவது அகத்தின்கண் களவு என்றோ கற்பு என்றோ அல்லது களவின் விரிவாகிய இயற்கைப் புணர்ச்சி,

இடந்தலைப்பாடு முதலியவற்றுள் ஒன்றோ கற்பின் விரிவாகிய மறைவெளிப்பாடு, தமரிற் பெறுதல் முதலியவற்றுள் ஒன்றோ வருதல். புறத்தின்கண் நிரை கோடல், மீட்டல், மேற்சேறல், எயில் வளைத்தல் முதலியவற்றுள் யாதானும் ஓர் இயல்பு பற்றி வருதல். கருமநிகழ்வாவது : அப்பொருளைப் பற்றி யாதானும் ஒரு வினை நிகழும் இடம். 'வினை' செய்யிடம் தரும் நிகழ்ச்சி என்றதனால் தன்மை, முன்னிலை, படர்க்கை என்ற மூவிடத்தையும் குறிக்கும் எனலாம்.

76. கரும நிகழ்ச்சி என்பது எவ்விடத்தைக் குறிக்கும்?

எ.டு

*"நெடும்புனலுள் வெல்லு முதலை அடும்புனலி*
*னீங்கி னதனைப் பிற"* (குறள் : 495)

இது இடனறிதல் ஆகும்.

**காலம் :**

இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம் என மூன்று காலத்திலும் நிகழ்கின்ற பொருளை ஆராய்ந்துணருமாறு செய்யுளுள் தோன்றச் செய்யின் அது காலமாகும். 194

எ.டு

*"வில்லோன் காலன கழலே தொடியோள்*
*மெல்லடி மேவும் சிலம்பே.......*
*வேய்பயி லமுவம் முன்னி யோரே"* (குறுந் : 17)

இதில் வில்லோனும் தொடியோளும் பொருள் எனப்படும். வேய்பயில் அழுவம் முன்னியோரே என்பது இறந்தகாலம் ஆகும்.

**பயன் :**

*"இதுநனி பயக்கும் இதன்மா றென்னுந்*
*தொகுநிலைக் கிளவி பயனெனப் படுமே"* (195)

யாதானும் ஒரு பொருளைக் கூறியவழி இதன் பின்பும் இதனைப் பயக்கும் என விரித்துக் கூறாது முற்கூறிய சொல்லினாலேயே தொகுத்துக் கூறும் உறுப்பு பயன் எனப்படும்.

எ.டு

*"மாறாக் காதலர் மலைமறந் தனரே*
*யாறாக் கட்பனி வரலானாவே*
*வேறா மென்றோள் விளைநெகி ழும்மே*
*கூறாய் தோழியாம் வாழு மாறே"*

இது தோழியைத் தூது விடுதல் பயனாக வந்தது.

**மெய்ப்பாடு :**

*"உய்த்துணர் வின்றித் தலைவரு பொருண்மையின்*
*மெய்ப்பட முடிப்பது மெய்ப்பா டாகும்"* (196)

யாதானும் ஒன்றைக் கூறியவழி அதனை ஆராய்ந்து உணர்ந்தலின்றிச் செய்யுளிடத்து வந்த அப்பொருள் தானே வெளிப்பட்டுத் தோன்றினாற் போலக் கண்ணீர் அரும்பல் மெய்ம் மயிர் சிலிர்த்தல் முதலிய மெய்ப்பாடு தோன்றுமாற்றால் வெளிப்படச் செய்வது மெய்ப்பாடு ஆகும்.

இம்மெய்ப்பாடு நகை முதலான எண்வகை மெய்ப்பாட்டு நெறியினையும் முன்பு மெய்ப்பாட்டியலில் சொல்லப்பட்ட இலக்கணத்தை உடையதாம். (197)

**எச்சம் :**

77. எச்சம் எத்தனை வகைப்படும்?

பிறிதோர் சொல்லினாலும் பிறிதோர் குறிப்பினாலும் எஞ்சி நின்று பின் கொணர்ந்த முடிக்கப் பெறும் இயற்கையைப் பொருந்துவது எச்சம் ஆகும். இவ் எச்சம் சொல்லெச்சம், குறிப்பெச்சம் என இருவகைப்படும்.(198)

**சொல்லெச்சம்** : ஒரு தொடரில் ஒரு சொல்லானது முன்னோ பின்னோ எஞ்சி நின்று பொருள் தருவது சொல்லெச்சம் ஆகும். (எச்சவியல் : 45)

எ.டு 'உயர்திணை என்மனார்' இதில் 'ஆசிரியர்' என்ற சொல் முன்னார் எஞ்சி வந்தது.

தங்குறிப்பிற் பற்றிய எச்சத்தானே முடிவு கூறப்படுவது குறிப்பெச்சம் எனப்படும். (எச்சவியல் : 44)

**முன்னம் :**

*"இவ்விடத் திம்மொழி இவரிவர்க் குறியவென்*
*றவ்விடத் தவரவர்க் குரைப்பது முன்னம்"* (199)

இவ்விடத்து இம்மொழியை இவர்க்குச் சொல்லத்தகும் எனக் குறித்து அவ்விடத்து அவர்க்கு அம்மொழியை உரைப்பது முன்னம் ஆகும். எனவே இடமும் காலமும் உணர்ந்து கேட்போர்க்குத் தக்கவாறு மொழிதலும் செய்யுள் உறுப்பாம்.

**பொருள் :**

இன்பமும் துன்பமும் புணர்வும் பிரிவும் ஒழுக்கமும் என்று சொல்லப்பட்டவை வழுவு நெறியில்லாமல், இத்திணைக்குரிய பொருள் இப்பொருள் என்னாது, எல்லாப் பொருட்கும் பொதுவாகி நிற்கும் பொருளே 'பொருள்வகை' என்பர் புலவர். (200)

**துறை :**

ஐவகை நிலத்தில் உயிர் எனப்படும் பல்வேறு வகைப்பட்ட மக்களும் மாவும், புள்ளும் மரம் முதலாயினவும் நிலம், நீர், தீ, வளி முதலாயினவும் செய்யுளில் வருமிடத்துந் திறப்பாடுடையதாக ஆராய்ந்து தத்தமக்கேற்ப பண்போடும் பொருந்திய மரபோடும் முடிந்தால் அவ்வாறு திறப்பாடுடைத்தாய் வருவது 'துறை' என்று கூறப்படும். (201)

எ.டு

*"பாரி பாரி யென்று பல ஏத்தி*

*ஒருவற் புகழ்வர் செந்நாப் புலவர்*
*பாரி ஒருவனு மல்லன்*
*மாரியும் உண்டீண் டுலகுபுரப் பதுவே* (புறம் : 107)

இது புறத்திணைப் பாற்பட்டுக் கொடுப்போர் 'ஏத்தல்' என்ற துறையாகும்.

**மாட்டு :**

"*அகன்று பொருள் கிடப்பினும் அணுகிய நிலையினும்*
*இயன்று பொருள் முடியத் தந்தனர் உணர்த்தல்*
*மாட்டென மொழிப பாட்டியல் வழக்கின்*" (202)

செய்யுளில் பொருள் கொள்ளுங்கால் அகன்று பொருள் கிடப்பச் செய்யினும் அணுகிக் கிடப்பச் செய்யினும் இவ்விரு வகையானும் சென்று பொருள் முடியுமாற்றால் கொண்டு வந்து கூட்டியுரைப்பச் செய்தல் 'மாட்டு' என்னும் உறுப்பாகும்.

இஃது இருவகைப்படும். 1. அண்மைநிலை மாட்டேறு. 2. சேய்மை நிலை மாட்டேறு

78. 'மாட்டு' எத்தனை வகைப்படும்? யாவை?

எ.டு

"*முட்டாச் சிறப்பின் பட்டினம் பெறினும்*
*வாரிருங் கூந்தல் வயங்கிழை யொழிய*
*வாரேன் வாழிய நெஞ்சே*" (பட்.பா : 218-220)

பின்னர்

"*மேலினும் வெய்ய கானமவன்*
*கோலினுந் தண்ணிய தடமென் றோளே*"(பட்.பா: 300-301)

என நெடுந்தொலைவு இடையீடுபட்டுச் சேய்த்தாகச் சென்று பொருள் கோடலின் இது 'சேய்மை நிலை மாட்டே'' எனப்படும்.

மேற்கூறிய எச்சமும் மாட்டும் நிலைபெறுத்தல் இன்றியும் அச்செய்யுளுட்கிடந்தவாறே பொருள் அமையுமாறு செய்யுள் செய்யப் பெறும். (203)

## 8.17 வண்ணம்

பாவின்கண் நிகழுகின்ற ஓசை விகற்பமாகிய சந்த வேறுபாடு 'வண்ணம்' ஆகும். பேராசிரியர் இவ்வண்ண வகைகள் செய்யுள் முழுவதுமே அமைவனவாகக் கூறல் இயலாது. ஒரு பாடலில் சில அடிகளில் ஒரு வண்ணம் வரப்பெறும். ஒரே பாடலில் பல வண்ணம் வரக்கூடும் என்று குறிப்பிடுகின்றார். ஆனால்- இளம்பூரணர் கொடுக்கக் கூடிய சான்றுகளில் பாடல் முழுவதுமே இவ்வண்ணம் பெரும்பான்மையாக வரவேண்டும் என்று கருதியதாக எண்ண வேண்டியுள்ளது.

இத்தகு வண்ணம் இருபது என்று கூறுவார்கள்.

"*வண்ணந் தாமே நாலைந் தென்ப*" (204)

79. வண்ணம் எத்தனை வகைப்படும்? அவையாவை?

அவை பாஅவண்ணம், தாஅவண்ணம், வல்லிசை வண்ணம், மெல்லிசை வண்ணம், இயைபு வண்ணம், அளபெடை வண்ணம், நெடுஞ்சீர் வண்ணம், குறுஞ்சீர் வண்ணம், சித்திர வண்ணம், நலிபு வண்ணம், அகப்பாட்டு வண்ணம், புறப்பாட்டு வண்ணம், ஒழுகு வண்ணம், ஒரூஉ வண்ணம், எண்ணு வண்ணம், அகைப்பு வண்ணம், தூங்கல் வண்ணம், ஏந்தல் வண்ணம், உருட்டு வண்ணம், முடுகு வண்ணம் என்பனவாம். 205

**பாவண்ணம் :**

*"அவற்றுள்*
*பாஅ வண்ணம்*
*சொற்சீர்த் தாகி நூற்பால் பயிலும்* (206)

சொற்சீரடி பெற்று வருவது பாஅவண்ணம் ஆகும். சொல்லே சீராகி வருவது சொற்சீர் எனப்படும். இஃது இலக்கண நூலில் பயின்று வரும்.

எ.டு *"வடவேங்கடந் தென்குமரி"* (*தொல். பாயிரம்*)

வடவேங்கடம் என்ற சொல்லே சீராகி வந்தது. வட வேங்கடந்தென் குமரி என வாராமல் 'வடவேங்கடம்' என்ற சொல்லே சீராக வந்துள்ளது.

**தாஅவண்ணம் :**

*"தாஅ வண்ணம்*
*இடையிட்டு வந்த எதுகைத் தாகும்"* (207)

தாஅவண்ணம் என்பது எதுகை இடையிட்டு வருவதாகும்.

எ.டு

*"தோடார் எல்வளை நெகிழ நாளும்*
*நெய்தல் உண்கண் பைதல் கலுழ*
*வாடா அவ்வரி ததைஇப் பசலையும்"*

இதில் முதல் அடி முதல் சீரிலும் அடையிட்டு மூன்றாம் அடி முதல் சீரிலும் இரண்டாம் எழுத்து ஒன்றி வந்தமையால் தாஅ (தாவுதல்) வண்ணம் ஆகும்.

**வல்லிசை வண்ணம் :**

*"வல்லிசை வண்ணம் வல்லெழுத்து மிகுமே"* (208)

80.'வல்லிசை வண்ணம் ________ மிகுமே'

வல்லிசை வண்ணம் வல்லின எழுத்து மிகுதியாகப் பயின்று வருவது.

எ.டு

*"வட்டொட்டி யன்ன வளமுடைப் புன்னைக்கீழ்க்*
*கட்டிட்டுக் கண்ணி தொடுப்பவர் தாழைப்பூ*
*விட்டொட்டி நீங்காதே ஒட்டு"*

வல்லெழுத்து மிகுதியாகப் பயின்று வந்தது.

**மெல்லிசை வண்ணம் :**

*"மெல்லிசை வண்ணம் மெல்லெழுத்து மிகுமே"* (209)

மெல்லிசை வண்ணம் மெல்லெழுத்து மிகுதியாகப் பயின்று வருவது. 81.'மெல்லிசை வண்ணம் ______ மிகுமே'

எ.டு

*"பொன்னின் அன்ன புன்னைநுண் தாது*
*மணியின் அன்ன நெய்தலங் கழனி*
*நன்மா பேணி நயந்தனை எனினே"*

று,ஞ,ண,ந,ம,ன என்ற மெல்லெழுத்துக்கள் மிகுதியாக வந்துள்ளன.

**இயைபு வண்ணம் :**

*"இயைபு வண்ணம் இடையெழுத்து மிகுமே"* (210) 82. இயைபு வண்ணம் ______ மிகுமே'

இயைபு வண்ணம் இடையின எழுத்து மிகுதியாகப் பயின்று வருவது.

எ.டு

*"வால்வெள் ளருவி வரைமிசை இழியவும்*
*கோள்வல் உழுவை விடரிடை இயம்பவும்*
*யாரோ தேலதி வாழ்கிற் போரே"*

இதில் ய,ர,ல,வ,ழள என்ற இடையின எழுத்துக்கள் மிகுதியாக வந்துள்ளன.

**அளபெடை வண்ணம் :**

அளபெடை வண்ணம் அளபெடை பயின்று வருவது ஆகும். (211) 83.அளபெடை வண்ணம் எவ்வாறு வரும்?

எ.டு

*"தாஅட் டாஅ மரைமலர் உழக்கி*
*பூஉக் குவளை போஓ தருந்திக்*
*காஅய்ச் செந்நெற் களித்துப் போஓய்*
*மாஅத் தாஅள் மோஓட் டெருமை"*

இதில் அளபெடை மிகுதியாக வந்துள்ளது.

**நெடுஞ்சீர் வண்ணம் :**

நெடுஞ்சீர் வண்ணம் நெட்டெழுத்து மிகுதியாக வருவது. (212) 84.நெட் டெழுத்து மிகுதியாக வருவது ______

எ.டு

*"நீரூர் பானா யாறே காடே*
*நீலூர் காயப் பூவீ யாவே*
*பீரூர் தோளாள் பேரூரானே"*

இதில் நெட்டெழுத்துக்கள் மிகுந்து வந்துள்ளன.

**குறுஞ்சீர் வண்ணம் :**

குறுஞ்சீர் வண்ணம் குற்றெழுத்துப் பயின்று வருவது. (213)

எ.டு *"உறுபெய லெழிலி தொடுபெயல் பொழியச்*
*சிறுகொடி அவரை பொரீதளை யவிழ*
.........................

*அறியலை அரிவை கருதிய பொருளே"*

85. நெட்டெழுத்தும் குற்றெழுத்தும் சேர்ந்து வருவது

இதில் குற்றெழுத்துக்கள் மிகுதியாகப் பயின்று வந்துள்ளன.

**சித்திர வண்ணம் :**

சித்திர வண்ணம் நெட்டெழுத்தும் குற்றெழுத்தும் சார்ந்து வருவது.(214)

எ.டு

*"வாரல் எனினே யானஞ் சுவலே*
*சாரல் நாட நீவர லாறே"*

இதில் குறிலும் நெடிலும் இணைந்து வந்துள்ளமையினைக் காணலாம்.

**நலிபு வண்ணம் :**

*"நலிபு வண்ணம் ஆய்தம் பயிலும்"* 215

86. 'நலிபு வண்ணம் பயிலும்'

நலிபு வண்ணம் ஆய்த எழுத்துப் பயின்று வருவது.

எ.டு

*"அஃகாமை செல்வத்திற் கியாதெனின் வெஃகாமை*
*வேண்டும் பிறன் கைப் பொருள்" (குறள் : 178)*

இதில் ஆய்த எழுத்து வந்துள்ளது.

**அகப்பாட்டு வண்ணம் :**

ஒரு பாட்டின் இறுதி முடியாதது போல் தோன்றி முடிந்து நிற்பது அகப்பாட்டு வண்ணம் ஆகும். 216

எ.டு

*"உண்கண் சிவப்ப தெவன்கொ லன்னாய்" (ஐய் : 21)*

இதில் இறுதி 'யகர' ஒற்றுப் பெற்று முடியாமை போல் தோன்றி முடிந்து நின்றது.

**புறப்பாட்டு வண்ணம் :**

புறப்பாட்டு வண்ணம், ஒரு பாட்டின் இறுதி முடிந்தது போல் தோன்றி முடியாது நிற்பது. (217)

எ.டு

*"இன்னா வைகல் வாரா முன்னே*
*செய்நீ முன்னிய வினையே*
*முந்நீர் வரைப்பக முழுதுடன் றுறந்தே" (புறம் : 363)*

இது 'துறந்தே' என ஏகாரத்தில் முடிந்ததால் முடிந்தது போல் தோன்றும். ஆனால் முடியாது நின்றது.

**ஒழுகு வண்ணம் :**

*"ஒழுகு வண்ணம் ஓசையின் ஒழுகும்" (218)*

ஒழுகிய ஓசையாற் செல்வது ஒழுகு வண்ணம் எனப்படும்.

87. '________ ஓசையின் ஒழுகும்'

எ.டு

*"அம்ம வாழி தோழி காதலர்*
*இன்முன் பனிக்கும் இன்னா வாடையொடு*

..............................

*பொன்னணி நெடுந்தேர் பூண்ட மாவே"*

இப்பாடல் ஆற்றொழுக்கு போன்ற ஓசையைக் கொண்டு அமைந்துள்ளது.

**ஒரூஉ வண்ணம் :**

*"ஒரூஉ வண்ணம் ஓரீஇத் தொடை தொடுக்கும்"* (29)

ஒரூஉ வண்ணம் நீங்கின தொடையாய்த் தொடுப்பது ஆகும். அது செந்தொடையாம்.

எ.டு

*தொடிநெகிழ்ந் தனவே கண்பசந் தனவே*
*யான்சென் றுரைப்பின் மாண்பின் றெவனோ*

.....................................

*மணிநிலா விரியும் குன்றுகிழ வோற்கே"*

இதன்கண் ஒரூஉவண்ணம் என்ற செந்தொடை வந்துள்ளது.

**எண்ணு வண்ணம் :**

*"எண்ணு வண்ணம் எண்ணுப் பயிலும்"* (220)

எண்ணுப் பயின்று வருவது எண்ணு வண்ணம் ஆகும்.

எ.டு

*"நிலம் நீர் வளி வ்சும் பென்ற நான்கின்* (பதிற் : 14)

இதில் நிலமும், நீரும், வளியும், விசும்பும் என எண்கள் பயின்றமையால் எண்ணுவண்ணம் ஆனது.

**அகைப்பு வண்ணம் :**

*"அகைப்பு வண்ணம் அறுத்தறுத் தொழுகும்"* (221)

அகைப்பு வண்ணம் அறுத்து அறுத்து ஒழுகும் ஓசை உடையதாய் வருவது ஆகும்.

*"வாரா ராயினும் வரினும் அவர்நமக்கு*
*யாராகி யாரோ தோழி"*

இதில் 'வாராராயினும்' என நெடிலும், 'வரினும் அவர் நமக்கு' எனக் குறிலும் 'யாராகியரோ' என நெடிலும் 'தோழி' எனக் குறிலும் பயின்று வந்தமையால் இஃது அகைப்பு வண்ணம் ஆகும்.

**தூங்கல் வண்ணம் :**

*"தூங்கல் வண்ணம் வஞ்சி பயிலும்"* (222)

வஞ்சி உரிச்சீர் பயின்று வருவது தூங்கல் வண்ணமாகும்.

88. '________ வஞ்சி பயிலும்'

எ.டு

*வசையில் புகழ் வயங்கு வெண்மீன்*
*திசைதிரிந்து தெற்கே கினும்''* (பட்டி :1)

இதில் வசை யில் புகழ் - நிரை நேர் நிரை

வயங்கு வெண்மீன் - நிரைபு நேர் நேர்

என வஞ்சி உரிச்சீர் பயின்று வந்தமையால் இது தூங்கல் வண்ணமாகும்.

**ஏந்தல் வண்ணம் :**

சொல்லிய சொல்லினானே சொல்லப்பட்ட பொருள் சிறக்க வருவது ஏந்தல் வண்ணம் ஆகும். (223)

எ.டு

*"வைகலும் வைகல் வரக்கண்டும் அஃதுணரார்*
*வைகலும் வைகலை வைகும் என்று இன்புறுவர்*
*வைகலும் வைகல்தம் வாழ்நாள் மேல் வைகுதல்*
*வைகலை வைத்து உணரா தார்''*

இதில் வைகல் என்ற சொல் திரும்பத் திரும்ப வந்து பொருள் சிறக்க நின்றது.

**உருட்டு வண்ணம் :**

89. 'உருட்டு வண்ணம் ________ தொடுக்கும்'

*"உருட்டு வண்ணம் அராகம் தொடுக்கும்''* (224)

அராகம் தொடுத்து வருவது உருட்டு வண்ணம் ஆகும்.

எ.டு

*"தாதுற முறிசெறி தடமல ரிடையிடை*
*தழலென விரிவன பொழில்''*

உருட்டுகின்ற முறையில் ஓசை அமைந்தமையினால் இஃது உருட்டு வண்ணம்.

**முடுகு வண்ணம் :**

நாற்சீரடிக்கும் மேலாக வந்து அராகத்தோடு ஒத்து வருவது முடுகு வண்ணம் ஆகும். (225)

90. 'முடுகு வண்ணம் எத்தனை சீரடி பெறும்?

எ.டு

*"நெறியறி செறிகுறி புரிதிரி பறியா வறிவனை முந்துறீஇ* (கலி : 39)

இதுவும் அராகம் போல் உருட்டும் ஓசை பெற்றது.

இவ்வாறு கூறப்பட்ட வண்ணங்கள் மேற்சொல்லப்பட்ட இருபதே ஆகும். (226)

*"வண்ணந் தாமே அவையென மொழிப''* (226)

இவ்வாறு கூறப்பட்ட 20 வண்ணங்கள் எழுத்து அடிப்படையிலும் (வல்லிசை, மெல்லிசை, இயைபு, நெடுஞ்சீர், குறுஞ்சீர், சித்திர வண்ணம், நலிபு வண்ணம்), சொல் சீர் அடிப்படையிலும் (பாஅ, எண்ணு, ஏந்தல்) தொடை அடிப்படையிலும் (தாஅ, அளபெடை) ஓசை அடிப்படையிலும் (ஒழுகு, ஒரூஉ, அகைப்பு, தூங்கல், உருட்டு, முடுகு) நடை/வடிவ அடிப்படையிலும் (அகப்பாட்டு, புறப்பாட்டு) பாகுபடுத்தப்படும்.

## 8.18 தொகுப்புரை

தொல்காப்பியர் சுட்டக்கூடிய செய்யுள் உறுப்புகள் பிற்காலத்தில் தனியாக யாப்பிலக்கண நூல்கள் தோன்றுவதற்குக் காரணமாக அமைந்தன. இப்பகுதியில் 34 செய்யுள் உறுப்புகளுள் மாத்திரை முதல் வண்ணம் வரையிலானவை விளக்கப்பட்டுள்ளன. அடுத்த பகுதியில் எண்வகை வனப்புகள் விளக்கப்பட இருக்கின்றன.

**வினாவிற்கேற்ற விடைகள்**

| | | | |
|---|---|---|---|
| 1 | – | 8.1 | ஐப் பார்க்க |
| 2,3,4,5,6,7,8,9,10 | – | 8.3 | ” |
| 11,12,13,14,15,16,17,18,19,20,21,22 | – | 8.4 | ” |
| 23,24,25,26,27 | – | 8.5 | ” |
| 28 | – | 8.5.1 | ” |
| 29 | – | 8.5.3 | ” |
| 30 | – | 8.5.4 | ” |
| 31,32 | – | 8.5.5 | ” |
| 33 | – | 8.6 | ” |
| 34,35,36,37,38 | – | 8.7 | ” |
| 39,40,41,42,43,44,45 | – | 8.8 | ” |
| 46,47,48 | – | 8.10 | ” |
| 49,50,51,52 | – | 8.10.1 | ” |
| 53,54,55,56,57,58,59 | – | 8.10.2 | ” |
| 60,61,62 | – | 8.10.3 | ” |
| 63 | – | 8.10.4 | ” |
| 64 | – | 8.10.5 | ” |
| 65,66 | – | 8.10.6 | ” |
| 67 | – | 8.10.8 | ” |
| 68,69,70,71 | – | 8.11 | ” |
| 72,73 | – | 8.13 | ” |
| 74,75 | – | 8.14 | ” |
| 76 | – | 8.15 | ” |
| 77,78,79 | – | 8.16 | ” |
| 80,81,82,83,84,85,86,87,88,89,90 | – | 8.17 | ” |

**பக்க வினாக்கள்**

1. அசை என்றால் என்ன? விளக்குக.
2. தளை எத்தனை வகைப்படும்? சான்றுகளுடன் விளக்குக.
3. யாப்பு என்பது குறித்து விளக்கி எழுதுக.
4. பாக்களுக்குரிய ஓசைகள் யாவை?
5. வாழ்த்துக்குரிய பாக்கள் குறித்து எழுதுக.
6. திணை எத்தனை வகைப்படும் விளக்குக.
7. கைகோள் குறித்து எழுதுக.
8. களவிலும் கற்பிலும் கூற்று நிகழ்த்துவோர் யாவர்? விளக்குக.
9. 'முன்னம்' குறித்து எழுதுக.
10. மாட்டு குறித்து எழுதுக.
11. 'களன்' என்றால் என்ன? விளக்குக.

**கட்டுரை வினாக்கள்**

1. சீர் குறித்து விளக்கிக் கட்டுரை வரைக.
2. அடி எத்தனை வகைப்படும்? பாக்களுக்கான அடிவரையறை குறித்து விளக்கி எழுதுக.
3. 'பாக்கள்' குறித்துக் கட்டுரைக்க
4. தொடை நயங்கள் பற்றி எழுதுக.
5. அடிவரையறை இல்லாதன யாவை? விளக்கிக் கட்டுரைக்க
6. வண்ணம் குறித்து எழுதுக.

# அலகு - 9

# செய்யுளில் - செய்யுள் உறுப்புகள்

**அறிமுகம்**

செய்யுள் உறுப்புகள் என்னும் இப்பகுதியில் தொல்காப்பியர் செய்யுளியலின் கடைசி உறுப்புகளாகக் கூறுகின்ற எண்வகை வனப்புகளான அம்மை, அழகு, தொன்மை, தோல், விருந்து, இயைபு, புலன், இழைபு என்ற எட்டு குறித்து விளக்கப்பட இருக்கின்றன.

**நோக்கம் :**

இப்பாடத்தைப் பயில்வதன் விளைவாக மாணவர்கள் வனப்பு என்றால் என்ன என்பது குறித்தும் அதன் வகைபாடுகளான எண்வகை வனப்பு குறித்த அறிவினைப் பெறுகிறார்கள்.

**பாடம் - 9 செய்யுள் உறுப்புகள்**

**பொருளடக்கம்**

9.1 வனப்பு

9.2 அம்மை

9.3 அழகு

9.4 தொன்மை

9.5 தோல்

9.6 விருந்து

9.7 இயைபு

9.8 புலன்

9.9 இழைபு

9.10 தொகுப்புரை

# பாடம் - 9

## செய்யுள் உறுப்புகள்

செய்யுளின் 34 உறுப்புகளுள் 26 உறுப்புகள் சென்ற பாடத்தில் விளக்கப்பட்டன. இப்பகுதியில் மீதம் உள்ள 8 உறுப்புகள் விளக்கப்படுகின்றன. அவை செய்யுளுக்கு இன்றியமையாதனவாகும். எண்வகை வனப்புகள் எண்ணு அழைக்கப்படுகின்ற அம்மை, அழகு, தொன்மை, தோல், விருந்து, இழைபு, புலன், இயைபு என்பனவாம்.

### 9.1 வனப்பு

1. வனப்பு என்றால் என்ன?

தொல்காப்பியர் 34 செய்யுள் உறுப்புகளை இருவகையாகப் பாகுபடுத்துகின்றார். முதல் 26 ஒரு வகையாகவும் அடுத்த 8 ஒருவகையாகவும் பிரிக்கப்பட்டுள்ளன. மாத்திரை முதல் வண்ணம் வரையிலான உறுப்புகளைப் பொருந்தக் கூறிய எட்டோடும் என்றும்; அவை தனிச் செய்யுட்குரியன, பின்னர் உள்ள எண்வகை வனப்பும் தனிநிலைச் செய்யுட்கு அன்றிக் 'காவியம்' எனப்படும் தொடர்நிலைச் செய்யுட்கு உரியன.

2. முதல் வனப்பு எது?

செய்யுள் அழகு வனப்பென்பது பெரும்பான்மையும் பல உறுப்பும் திரண்டவழிப் பெறுவதோர் அழகாதலின் அவ்வாறு கோரும் என்பர். இது பெரும்பான்மை பல செய்யுள் உறுப்பாய்த் திரண்டு பெருகிய தொடர்நிலைக்குப் பெறுவதோர் அழகு என்பதூஉம், சிறுபான்மை தனிச் செய்யுட்கு இவ்வழகு கொள்ள வேண்டும் என்பதூஉம் 26 உறுப்பும் அங்ஙனம் திரண்ட செய்யுட்கும் உரித்து என்பதும், உணர்த்துதற்குத் தொகைச் சூத்திரத்தைப் பிரித்தோதிப் பின்னும் ஓரினப்படுத்தி ஒரு சூத்திரமாகவே ஓதினார் என்றுணர்க என்கிறார் உரையாசிரியர். இதன் வாயிலாக இவ் எண்வகை வனப்புப் பெரும்பாலும் தொடர்நிலைச் செய்யுளில் வருவது சிறப்பு என அறிய முடிகிறது.

### 9.2 அம்மை

3.அம்மைக்குச் சான்று தருக.

வனப்பு எட்டனுள் முதலாய் இடம் பெறுவது அம்மை.

*"சின்மென் மொழியால் சீர்புனைந்தியாப்பின்*
*அம்மை தானே அடிநிமிர் வின்றே"* (227)

சிலவாய் மெல்லியவாகிய சொற்களினால் தொகுக்கப்பட்ட அடிநிமிர்வு இல்லாத (அதாவது) குறைந்த அடிகளை உடைய செய்யுள் 'அம்மை' எனப்படும்.

எ.டு *"அறிவினா னாகுவ துண்டோ பிறிதினோய்*
*தன்னோய் போற் போற்றாக் கடை"* (குறள் : 315)

இது சிலவாய் மெல்லியவான சொற்களால் தொகுக்கப்பட்டது. குறைந்த அடியினை உடையவாதலின் அம்மை ஆயிற்று.

### 9.3 அழகு

எண்வகை வனப்பில் இரண்டாவதாய் அமைவது அழகு.

*"செய்யுள் மொழியால் சீர்புனைந்து யாப்பின்*
*அவ்வகை தானே அழகெனப் படுமே"* (228)

செய்யுட்குரிய சொல்லினால் சீர்புணர்ந்துத் தொகுப்பின் அவ்வகைப்பட்ட செய்யுள் அழகு எனப்படும்.

4.இரண்டாவது வனப்பு எது?

எ.டு

*"துணியிரும் பரப்பகம் குறைய வாங்கி*
*மணிகிளர் அடுக்கல் முற்றிய எழிலி*
*வல்லியம் வழங்கும் கல்லதர் நெறியே"*

இது செய்யுள் மொழியால் சீர் புனைந்து யாக்கப்பட்டது. ஆதலின் அழகு எனப்படும்.

*"இயற்சொல் திரிசொல் திசைச்சொல் வடசொல்லென்*
*றனைத்தே செய்யுள் ஈட்டச் சொல்லே"* (எச்ச : 1)

இதன்படி இயற்சொல், திரிசொல், திசைச்சொல், வடசொல் என்று அத்தனையும் செய்யுளைக் கட்டுதற்குரிய சொற்கள் என அறியலாம். இவ்வகையில் வருவது அழகு எனப்படும்.

5. செய்யுள் கட்டுதற்குரிய சொற்கள் எவை?

### 9.4 தொன்மை

மூன்றாவதாக இடம்பெறும் வனப்பு தொன்மை ஆகும்.

*"தொன்மை தானே சொல்லுங் காலை*
*உரையொடு புணர்ந்த பழமை மேற்றே"* (229)

உரையொடு பொருந்திப் போந்த பழமைத்தாகிய பொருள்மேல் வருவது தொன்மையாம்.

6.தொன்மைக்கு சான்றாக உள்ள நூல் ஒன்றைக் குறிப்பிடுக.

எ.டு

இராம சரிதம் (அதாவது இராமாயணம்); பாண்டவ சரிதம் (அதாவது பாரதம்)
உரையொடு புணர்ந்த - நெடுங்காலமாகப் பலராலும் சொல்லப்பட்டு வந்த
பழமை - பழங்கதை

### 9.5 தோல்

நான்காவதாக இடம்பெறும் வனப்பு தோல்

*"இழுமென் மொழியால் விழுமியது நுவலினும்*
*பரந்த மொழியால் அடிநிமிர்ந் தொழுகினும்*

*தோலென மொழிப தொன்னெறிப் புலவர்"* (230)

இது 'இழும்' என்னும் ஓசையினையுடைய மொழியால் விழுமிய பொருளை நுவல்வது; பரந்த மொழியால் அடிநிமிர்ந்து (மிகுதியான அடிகளால்) வருவது.

எ.டு

*"பாயிரும் பரப்பகம் புதையப் பாம்பின்*
*அயிர மணிவிளக் கழலுஞ் சேக்கைத்*
*துளிதரு வெள்ளந் துயில்புடை பெயர்க்கும்*
*ஒளியோன் காஞ்சி எளிதெனக் கூறின்*
*இம்மை யில்லை மறுமை யில்லை*
*நன்மை இல்லைத் தீமை யில்லைச்*
*செய்வோ ரில்லைச் செய்பொருளில்லை*
*அறிவோர் யாரஃதிறுவரி சிறுகென"*

இஃது 'இழும்' என் மொழியால் விழுமியது நுவல வந்தது.

### 9.6 விருந்து

7. விருந்து என்றால் என்ன?

எண்வகை வனப்பில் ஐந்தாவதாக இடம்பெறுவது விருந்து

*"விருந்தே தானும்*
*புதுவது புனைந்த யாப்பின் மேற்றே"* (231)

முன்புள்ளார் சொன்ன நெறிபோய்ப் புதிதாகச் சொன்ன யாப்பின் மேலது விருந்து ஆகும்.

8. எண்வகை வனப்பில் ஆறாவதாக உள்ளது எது?

புதிதாகப் புனைதலாவது ஒருவன் சொன்ன நிழல்வழியன்றித் தானே தோற்றுவித்தல். இது பெரும்பான்மை ஆசிரியப்பாவைக் குறித்தது என்பர் இளம்பூரணர். மரபில் ஏற்படுத்தும் புரட்சியை இவ்விருந்தில் அடக்குவர்.

பிற்காலத்தில் தோன்றிய சிந்து, கண்ணி, குறம், பள்ளு போன்றவை யாப்பில் புதியவை கருத்தில் புதுமை காட்டி பாஞ்சாலி சபதம், குயில்பாட்டு என்ற பாடினார் பாரதி சொல் புதிது, சுவை புதிது, பொருள் புதிது என்று புதுமை விரும்பினார் அவர். இலக்கிய வகையில் புதினமும் விருந்தாக முடியும்.

### 9.7 இயைபு

9. தோல் எவ்வெழுத்தைக் கொண்டு முடியும்?

எண்வகை வனப்பில் ஆறாவதாக இடம் பெறுவது இயைபு.

*"ஞகாரை முதலா னகாரை ஈற்றுப்*
*புள்ளி இறுதி இயைபெனப் படுமே"* (232)

ஞ்,ண்,ந்,ம்,ன்,ய்,ர்,ல்,வ்,ழ்,ள் என்ற 11 மெய்யெழுத்துக்களில் ஏதேனும் ஒன்றினை இறுதியாகக் கொண்டு நிற்குஞ் செய்யுள் 'இயைபு' எனப்படும்.

'தோல்' என்பதில் இருந்து இயைபு சற்று வேறுபடுகிறது. தோல் என்பது உயிரெழுத்தை ஈற்றில் கொண்டு முடியும். இயைபு மேற் சொல்லப்பட்ட மெய்யெழுத்துக்களைக் கொண்டு முடியும்.

10.மெய்யெழுத்துக்களைக் கொண்டு முடியும் வனப்பு எது?

**9.8 புலன்**

ஏழாவதாக இடம்பெறும் வனப்பு 'புலன்' ஆகும்.

*"தெரிந்த மொழியாற் செவ்விதிற் கிளந்து*
*தேர்தல் வேண்டாது குறித்தது தோன்றின்*
*புலனென மொழிப புலனுணர்ந் தோரே"* (233)

வழக்குச் சொல்லினாலே தொகுக்கப்பட்டு ஆராய வேண்டாமல் பொருள் தோன்றுவது 'புலன்' என்ற செய்யுளாம்.

எ.டு

*"பாற்கடல் முகந்த பருவக் கொண்மூ*
*வார்ச் செறி முரசின் முழங்கி ஒன்னார்*
*பெருங்காடு மருத்த காமர் களிறே"*

11. ஆராயமல் பொருள் தோன்ற நிற்பது எது?

இது வழக்குச் சொல்லினால் தொகுக்கப்பட்டு ஆராய வேண்டாமலே பொருள் தோன்ற நிற்பதால் 'புலன்' ஆயிற்று.

**9.9 இழைபு**

வனப்பில் இறுதியானது இழைபு

*"ஒற்றொடு புணர்ந்த வல்லெழுத் தடங்காது*
*குறளடி முதலா ஐந்தடி ஒப்பித்து*
*ஓங்கிய மொழியான் ஆங்கவண் மொழியின்*
*இழைபின் இலக்கணம் இயைந்த தாகும்"* (234)

12. இழைபில் இடம்பெறும் எழுத்துக்களின் வரையறை யாது?

இஃது ஒற்றுடன் கூடிய வல்லெழுத்து (அதாவது க்,ச்,ட்,த்,ப்,ற் என்பன) வரலாகாது. ஆசிரியப்பாவிற்குச் சொல்லப்பட்ட 4 எழுத்து முதல் 20 எழுத்துக்கள் வரை (அதாவது குறளடி முதல் கழிநெடிலடி வரை) வரப்பெறும். ஓங்கிய சொற்களால் அமையும்.

எ.டு

*"பேர்ந்து பேர்ந்து சார்ந்து சார்ந்து*
*தேர்ந்து தேர்ந்து மூசி நேர்ந்து*
*தொருநீ மறைப்ப ஒழுகுவ தன்றே"*

இதன்கண் க்,ச்,ட்,த்,ப்,ற் என்ற வல்லொற்று மிகுதியாக வரவில்லை. மாறாக ர்,ந் முதலான பிற மெய்கள் வந்துள்ளன. முதலடியால் மெய்யெழுத்தினையும் குற்றியலுகரத்தையும் நீக்கிக் கணக்கிட்டால் 4 எழுத்தே வந்து குறளடி ஆயிற்று. இவ்வாறே பிற அடிகளையும் கணக்கிட்டால் ஐவகை அடிகளும் வந்தமை காணலாம். இப்பாடல் ஓங்கிய சொற்களால் ஆனது. எனவே 'இழைபு' ஆனது.

இறுதியாகச் செய்யுளியலுக்குப் புறனடை கூறும் தொல்காப்பியர் செய்யுளிடத்துப் பொருள் பெற ஆராய்ந்து செய்யப்பட்ட இலக்கணத்தில் சொல்ல விடுபட்டுத் தவறிப் போயின உள என்றாலும் முன் சொல்லப்பட்ட இலக்கணத்தை வைத்துக் கொண்டு திரியாமல் முடித்துக் கோடல் அறிவுடையோர் கடனாம்" என்று குறிப்பிடுகின்றார். (235)

## 9.10 தொகுப்புரை

மாணவர்களுக்கு இவ்வனப்பின் மூலம் எழுத்து, சொற்கள், அடிகள், பொருள், புனைவு முறை, வடிவம் என்பனவற்றால் இலக்கியம் பெறும் அழகு உணர்த்தப்படுகிறது. இவற்றை அம்மை இலக்கியம், அழகு இலக்கியம், தொன்மை இலக்கியம், தோல் இலக்கியம், விருந்திலக்கியம் என வகைப்படுத்துவதை இலக்கியவகைக் கொள்கையாகவும் கருதலாம்.

**வினாவிற்கேற்ற விடைகள்**

| | | |
|---|---|---|
| 1 | - | 9.1 ஐப் பார்க்க |
| 2,3 | - | 9.2 " |
| 4,5 | - | 9.3 " |
| 6 | - | 9.4 " |
| 7 | - | 9.6 " |
| 8,9,10 | - | 9.7 " |
| 11 | - | 9.8 " |
| 12 | - | 9.9 " |

**பக்க வினாக்கள்**

1. அம்மை என்றால் என்ன? விளக்குக.
2. அழகு, தொன்மை குறித்து விளக்கி எழுதுக.
3. தோல் மற்றும் இயைபிற்கு இடையிலான வேறுபாட்டினை விளக்குக.
4. விருந்து என்றால் என்ன விளக்குக.
5. புலன், இழைபு செய்யுளில் எவ்வாறு கையாளப்படும்?

**கட்டுரை வினாக்கள்**

1. செய்யுள் உறுப்புகளுள் வனப்பு குறித்து விளக்கி கட்டுரைக்க.

# அலகு - 10

# மரபியல்

## அறிமுகம்

மரபியல் என்னும் இப்பகுதியில் மரபு என்பதற்கான விளக்கம் மூவகைப் பெயர்கள், உயிர்ப்பாகுபாடுகள், அரசர், அந்தணர், வணிகர் ஆகியோருக்கான தொழில் முறைகளும் இயல்பும், நூலின் இலக்கண வகைகள், சிறப்புகள், குற்றங்கள், உத்திகள் போன்றன விளக்கப்படுகின்றன.

## நோக்கம்

இப்பகுதியினைக் கற்பதன் வாயிலாக மாணவர்கள் மரபு குறித்த தெளிவான வரையறையினைப் பெறுவதோடு உலகத்தில் உள்ள உயர்திணை அஃறிணை உயிர்களின் பெயர்கள், இளமைப் பெயர்கள் குறித்த அறிவும்

ஓரறிவு முதல் ஆறறிவு வரையிலான உயிர்ப் பாகுபாடு மற்றும் மனிதர்களின் தொழில்முறைகள் முதல் நூல், வழிநூல் போன்றவற்றின் இலக்கணம் குறித்த அறிவினையும் பெறுவர்.

**பொருளடக்கம்**

10.1 இளமைப் பெயர்கள்

10.2 ஆண்பாற் பெயர்கள்

10.3 பெணபாற் பெயர்கள்

10.4 வேறு சில வழக்குகள்

10.5 உலகத்து உயிர்ப் பகுப்பு

10.5.1 ஓரறிவுயிர்கள்

10.5.2 ஈரறிவுயிர்கள்

10.5.3 மூவறிவுயிர்கள்

10.5.4 நாலறிவுயிர்கள்

10.5.6 ஆறறிவுயிர்கள்

10.6 நால்வருணத்தார்க்கு உரியன

10.7 மரபின் முதன்மை

10.8 தொகுப்புரை

# அலகு - 10

## மரபியல்

நம் முன்னோர்கள் இன்னின்ன சொல் இன்னின்ன பொருளைத்தரும் என சொற்களின் பொருளை வரையறை செய்துள்ளனர். இவ்வரையறை என்று தோற்றுவிக்கப்பட்டது என நம்மால் அளவிட்டுரைத்தல் இயலாது. நெடும் பல்லாண்டுகளாகத் தொன்று தொட்டு இருந்து வரும் இவ்வரையறையினை 'மரபு' என்ற சொல்லால் குறிப்பிடுவர்.

பண்டைக் காலத்தில் எவ்வாறு சொற்களுக்குப் பொருள் வழங்கினார்களோ அந்த மரபு கெடாது அச்சொற்களை வழங்கி வரவேண்டும்.

*"எப்பொரு ளெச்சொலின் எவ்வா றுயர்ந்தோர்*
*செப்பினர் அப்படிச் செப்புதல் மரபு"* (நன்னூல் : 388)

மரபு மாறிச் சொற்கள் வழங்குமாயின் இவ்வுலகத்துச் சொற்கள் எல்லாம் தத்தம் பொருளை இழந்து வேறு வேறாக ஆகிவிடும்.

*"மரபு நிலை திரியின் பிறிது பிறிது ஆகும்"* (மரபு : 93)

என்பர் தொல்காப்பியர். தொன்று தொட்டு உயர்ந்தோர் - அறிஞர் சொற்களை வழங்கி வந்த முறையே வழக்கு ஆகும். காரணம் உலகத்து நிகழ்ச்சிகள் யாவும் அவர்களையே நோக்கி நிற்கின்றன.

*"வழக்கெனப் படுவ துயர்ந்தோர் மேற்றே*
*நிகழ்ச்சி அவர்கட் டாக லான"* (94)

என்பதன் வாயிலாக அடிய முடிகிறது.

உயர்திணை உயிர்களான மனிதர்களுக்குள்ளே பெயர்ப்பாகுபாடு இருப்பதனைப் போலவே அஃறிணை உயிர்களுக்குள்ளும் இளமைப்பெயர்கள் ஆண்பாற் பெயர்கள், பெண்பாற் பெயர்கள் என உண்டு. அவைகளையே தொல்காப்பியர் மரபியலில் விளக்கியுள்ளார்.

### 10.1 இளமைப்பெயர்கள்

தொல்காப்பியப் பொருளதிகாரத்தின் இறுதி இயலாக விளங்குவது மரபியல். இதனைப் பொருட்குணமாகிய இளமையும், ஆண்மையும், பெண்மையும் பற்றிய வரலாற்று முறையும் உயர்திணை நான்கு குலமும் பற்றும் மரபும், அஃறிணை நான்கு குலமும் பற்றும் மரபும், அஃறிணைப் புல்லும், மரனும் பற்றிய மரபும் அதைப்பற்றி வரும் உலகியல் மரபும் நூல் மரபும் என இவையெல்லாம் மரபு எனப்படும்.

முன்பு வழக்கிலக்கணம் கூறிய ஆசிரியர் செய்யுள் இலக்கணத்தைச் செய்யுளியலிற் கூறி அவ்விரண்டிற்கும் பொதுவாகிய 'மரபு' இலக்கணத்தை

மரபியலில் கூறியுள்ளார். இதனால் செய்யுளியலை அடுத்து மரபியல் வைக்கப்பட்டது.

*"மாற்றருஞ் சிறப்பின் மரபியல் கிளப்பிற்*
*பார்ப்பும் பறழும் குட்டியும் குருளையும்*
*கன்றும் பிள்ளையும் மகவும் மறியுமென்*
*றொன்பதும் குளவியொ டிளமைப் பெயரே"*

மாற்றுவதற்கு அரிய சிறப்பினையுடைய மரபு இலக்கணம் கூறின், பார்ப்பு, பறழ், குட்டி, குருளை, கன்று, பிள்ளை, மகவு, மறி, குழவி ஆகிய ஒன்பது இளமைப் பெயர்களாம்.

அவற்றுள்

*பார்ப்பும் பிள்ளையும் பறப்பவற் றிளமை* (4)

மேற்கூறிய பார்ப்பு முதல் குழவி வரையிலான இளமைப் பெயர்களில் பார்ப்பு, பிள்ளை இரண்டும் பறவையின் இளமைப் பெயர்கள் ஆகும். ஊர்வனவற்றுக்கும் இப்பெயர்கள் பொருந்தும். (5)

எ.டு

*பறவை தன் பார்ப்புள்ள* (கலி : 119)

மூங்கா (கீரி), வெருகு (காட்டுப்பூனை, எலி, அணில் என்ற நான்கும் 'குட்டி' என்ற பெயர்க்கு உரியனவாம். (6). இந்நால்வகை உயிர்களுக்கும் 'பறழ்' என்ற இளமைப்பெயர் கூறினும் தவறில்லை. (7)

*"நாயே பன்றி புலிமுயல் நான்கும்*
*ஆயுங்காலைக் குருளை என்ப'* (8)

நாய், பன்றி, புலி, முயல் என்ற நான்கின் இளமைப் பெயர்கள் 'குருளை' ஆகும். (9)

நாய், பன்றி, புலி, முயல், நரி என்ற இவ்ஐவகை உயிர்களையும் குட்டி, பறழ் என்ற பெயர்களாலும் வழங்குதல் உண்டு. (10)

மேற்கூறிய ஐந்தனுள் 'நாய்' தவிர ஏனை நான்கிற்கும் பிள்ளை என்ற பெயரும் உரியதாகும். (11)

*"ஆடுங் குதிரையும் நவ்வியும் உழையும்*
*ஓடும் புல்வாய் உளப்பட மறியே* (12)

ஆடு, குதிரை, நவ்வி (புள்ளிமான்) உழை, புல்வாய் எனப்பட்ட ஐந்தும் 'மறி' என்னும் இளமைப் பெயரால் அழைக்கப்பெறும்.

மரக்கிளைகளிலே வாழும் குரங்கும் 'குட்டி' என்ற இளமைப் பெயரால் சுட்டப் பெறும். (13) மகவு, பிள்ளை, பறழ், பார்ப்பு என்ற நான்கும் குரங்குச் சாதியின் இளமைப் பெயர்கள் ஆகும். (14)

*"யானையும் குதிரையும் கழுதையும் கடமையும்*
*மானொ டைந்தும் கன்றெனக் குரிய"* (15)

யானை, குதிரை, கழுதை, கடமை, மான் என்ற ஐந்தும் 'கன்று' என்ற

1. பார்ப்பு பறழ் என்ப எவ்வகைப் பெயர்கள்?

2.பறவையின் இளமைப் பெயர்கள் யாவை?

3. 'குட்டி' என்ற அழைக்கப் படுவன எவை?

4. நரியின் இளமைப் பெயர் யாது?

5. 'மறி' என்னும் இளமைப் பெயரால் அழைக்கப் பெறுவன யானை?

6. குரங்கின் இளமைப் பெயர்கள் யாவை?

7.'கன்று' என்னும் இளமைப் பெயர் பெறுவன எவை?

8. குஞ்சரத்தின் இளமைப் பெயர் யாது?

இளமைப் பெயர் பெறும். இவற்றோடு எருமை, மரை (16) கவரி, காரகம் (கரடி) (17) ஒட்டகம் (18) இவை அனைத்தும் 'கன்று' என்றே அழைக்கப் பெறும்.

குஞ்சரம் (யானை) (19) ஆ, எருமை, (20) கடமை, மரை (21) குரங்கு, முசு, ஊகம் (22) என்பன அனைத்தும் 'குழவி' என்னும் இளமைப் பெயர்க்குரியன ஆகும்.

9. ஓரறிவு உயிர்களுக்கு வழங்கப்படும் பெயர்கள் யாவை?

குழவி, மகவு என்ற இருபெயர்களைத் தவிர ஏனைய பெயர்கள் மக்களுக்கு உரியனவாக வழங்கப் பெறுதல் இல்லை (23)

*"பிள்ளை குழவி கன்றே போத் தெனக்*
*கொள்ளவும் அமையும் ஓரறி வுயிர்க்கே"* (24)

10. நெல்லுக்கும் புல்லுக்கும் இளமைப் பெயர்கள் உண்டா?

பிள்ளை, குழவி, கன்று, போத்து என்ற நான்கு பெயர்களும் ஓரறிவுயிர்க்கு உரியனவாய் வழங்கும் இளமைப் பெயர்களாம். இருப்பினும் நெல், புல் ஆகிய ஓரறிவுயிர்களுக்கு இப்பெயர்கள் சொல்லப்படுவதில்லை. (25)

பரந்துபட்ட உயிர்த்தன்மையெல்லாவற்றிற்கும் இளமைப்பெயர் கூறுதல் இயலாது. ஆதலின் விடுபட்டுப் போனவற்றிற்கும் ஈண்டு சொல்லப்பட்ட இளமைப் பெயர்களுள் ஏற்பனவற்றை இலக்கணமாகக் கொள்ள வேண்டும். (26)

### 10.2 ஆண்பாற் பெயர்கள்

ஆண்பாற் பெயர்கள் குறித்துப் பதினெட்டு நூற்பாக்களில் விளக்கிச் செல்கின்றார் தொல்காப்பியர்.

11. 'ஆண்பாற்' பெயர்கள் இரண்டினைச் சுட்டுக.

*"எருதும் ஏற்றையும் ஒருத்தலும் களிலும்*
*சேவும் சேவலும் இரலையும் கலையும்*
*மோத்தையும் தகரும் உதளும் அப்பரும்*
*போந்தும் கண்டியும் கடுவனும் பிறவும்*
*யாத்த ஆண்பாற் பெயரென மொழிப"* (2)

12. களிறு என்று சுட்டப்படுவன யாவை?

எருது, ஏற்றை, ஒருத்தல், களிறு, சே, சேவல், இரலை, கலை, மோத்தை, தகர், உதன், அப்பர், போத்து, கண்டி, கடுவன் என்ற இப்பதினைந்தும் பிறவும் ஆண்பால் பற்றிய மரபுப் பெயர்களாகும்.

இவற்றுள் களிறு என்று விதந்து கூறுதல் யானைக்கு உரியதாகும் (35). பன்றியின் ஆண்பாலையும் களிறு என்று கூறுவதில் தவறில்லை. 36 (கேழல் - பன்றி)

13. பன்றியின் ஆண்பால் எங்ஙனம் சுட்டப் பெறும்?

*"புல்வாய் புலி உழை மரையே கவரி*
*சொல்லிய கராமோ டொருத்தல் ஒன்றும்"* (37)

புல்வாய், புலி, உழை, மரை, கவறி, கராம் (முதலை) என்பவைகளின் ஆண் 'ஒருத்தல்' என்று பெயர் பெறும். அவ்வாறே யானை, பன்றி (38), எருமை (39), யின் ஆண்பாலும் 'ஒருத்தல்' என்றே சுட்டப் பெறும்.

*“பன்றி புல்வாய் உழையே கவரி*
*என்றிவை நான்கும் ஏறெனக் குரிய”* 40

14. ‘ஏறு’ என்று அழைக்கப்படுவன எவை?

பன்றி, புல்வாய், உழை, கவரி என்ற நான்கின் ஆண்பாலும் ‘ஏறு’ என்று பெயர் பெறும்.

அவ்வாறே எருமை, மரை, பெற்றம் என்ற மூன்றும் (41) கடலில் வாழும் சுறவும் (42) ஆகிய ஆண்பால் ‘ஏறு’ என்றே அழைக்கப் பெறும்.

15. ‘சுறா’ எங்ஙனம் சுட்டப் பெறும்?

*“பெற்றம் எருமை புலிமரை புல்வாய்*
*மற்றிவை எல்லாம் போத்தெனப் படுமே”* (43)

பெற்றம், எருமை, புலி, மரை, புல்வாய் என்ற ஐந்தின் ஆணும் ‘போத்து’ என்று அழைக்கப்படும். இவற்றோடு நீர்வாழ் சாதி (44) மயில், எழால் (வல்லூறு) (45) என்பனவற்றின் ஆணும் போத்து என்று சுட்டப்பெறும்.

16. புல்வாய் இனத்திற்கான ஆண்பாற் பெயர்கள் யாவை?

‘இரலை’, ‘கலை’ என்ற பெயர்கள் புல்வாய் (மான்) இனத்துள் ஆண்பாலுக்குரியன (46)

இவற்றுள் ‘கலை’ என்ற பெயர் உழை, முசு ஆகியவற்றிற்கும் உரித்தாகும். (47)

*“மோத்தையும் தகரும் உதரும் அப்பரும்*
*யாத்த என்ப யாட்டின் கண்ணே”* (48)

17. ஆட்டின் ஆண்பால் பெயர்கள் யாவை?

மோத்தை, தகர், உதள், அப்பர் என்ற நான்கு பெயர்களும் ஆடுகளில் ஆண்பாலிற்கு உரியன.

சேவல் என்ற பெயர், தோகையினையுடைய மயில் அல்லாத ஏனைப் பறவையினத்துள் ஆண்பாலுக்கு எல்லாம் உரியதாகும். (49)

‘ஏற்றை’ என்ற பெயர் ஆற்றுலுடைத்தாகிய ஆண்பாலிற்கெல்லாம் பொதுவாக வழங்குவதற்குரியது என்பது தொல்காப்பியர் கருத்தாகும். (50)

உலகில் உள்ள உயிர்கள் அனைத்திலும் ஆண் என்பது ஆண்பாலாகவும், பெண் என்பது பெண்பாலாகவும் அழைக்கப் பெறும். வழக்கில் அவை அவ்வப் பிரிவைச் சார்ந்தவை. (51)

### 10.3 பெண்பாற் பெயர்கள்

பெண்பாற் பெயர்கள் பற்றி 20நூற்பாக்களில் தொல்காப்பியர் குறிப்பிடுகின்றார்.

*“பேடையும் பெடையும் பெட்டையும் பெண்ணும்*
*மூடும் நாகும் கடமையும் அளகும்*
*மந்தியும் பாட்டியும் பிணையும் பிணவும்*
*அந்தஞ் சான்ற பிடியொடு பெண்ணே”* (3)

18. ‘பிடி’ என்னும் பெயர் எதனைக் குறிப்பது?

பேடை, பெடை, பெட்டை, பெண், மூடு, நாகு, கடமை, அளகு, மந்தி, பாட்டி, பிணை, பிணவு, பிடி என்ற இப் 13 பெயர்களும் பெண்மை பற்றிய மரபுப் பெயர்களாம்.

19. புள்ளின் பெண்பால் எவ்வாறு சுட்டப் பெறும்?

20. 'அளகு' என்று குறிக்கப் பெறுவன எவை?

21. பெற்றமும் எருமையும் மரையும்

22. பெண் மக்களுக்கு உரிய பெண்கள் யாவை?

23. 'பாட்டி' என்பது எதற்குரியது.

24. கடுவன் என்பது எதனை?

25. ஏனம் என்றால் என்ன?

இவற்றுள் பிடி என்னும் பெண்பெயர் பெண் யானையைக் குறிக்கும். 52

*"ஒட்டகம் குதிரை கழுதை மரையிவை*
*பெட்டை யென்னும் பெயர்க் கொடைக் குரிய"* 53

ஒட்டகம், குதிரை, கழுதை, மறை என்ற நான்கும் பெட்டை என்ற பெண்பாற் பெயரைப் பெறும். இவற்றோடு புள்ளின் பெண்பாலும் 'பெட்டை' என்ற பெயர் பெறும். (54)

பேடை, பெடை என்னும் இரண்டு சொற்களும் ஆராயுமிடத்து பெட்டை என்பதனோடு ஒன்றும். இவை பெரும்பாலும் பரவைக்கே பொருந்தும். (55)

எ.டு

*"குயிற்பேடை, அன்னப்பெடை*
*"கோழி கூகை ஆயிரண் டல்லவை*
*சூழுங் காலை அளகெனல் அமையா"* (56)

அளகு என்ற பெண்மைப் பெயர் கோழி, கூகை, மயில் என்ற மூன்றுக்கும் உரியது.

இவற்றோடு மயிலுக்கும் 'அளகு' என்ற பெயர் உரியதாகும். (57)

புல்வாய், நவ்வி, உழையே, கவரி என்ற நான்கிற்கும் 'பிணை' என்ற பெண்மைப் பெயர் வழங்குதற்கு உரித்து (58)

"பன்றி, புல்வாய், நாய் என்ற மூன்றின் பெண்பாலும் 'பிணவு' என்று சுட்டப் பெறும். மேலும் இவைகளை 'பிணவல்' என்றும் சுட்டப் பெறும். (60)

*"பெற்றமும் எருமையும் மரையும் ஆவே"* (61)

பெற்றம், எருமை, மரை என்ற மூன்று 'ஆ' என்ற பெயரைப் பெறும்.

பெண், பிணவு என்ற பெண்பாற் பெயர்கள் மக்களில் பெண்பாலுக்கு உரியவையாக வரும். (62)

எருமை, மரை, பெற்றம் (63), நீர்வாழ் சாதியான நந்து (நத்தை) 64 ஆகிய நான்கும் (நாகு) என்ற பெண்பாற் பெயர் பெறும்.

மூடு, கடமை இவ்விரண்டும் ஆட்டின் பெண்பாலுக்குரியன. அது தவிர பிற இப்பெயர்களைப் பெறா. (65) பாட்டி என்ற பெண்மைப் பெயர் பன்றி, நாய் இரண்டிற்கும் உரியதாகும். (66). இவற்றோடு 'நரி' என்பதன் பெண்பாலையும் 'பாட்டி' என்று சுட்டுவர். (67)

மந்தி என்ற பெண்பாற் பெயர் குரங்கு, முசு, ஊகம் என்ற மூன்றிற்கும் உரிய. (68)

### 10.4 வேறு சில வழக்குகள்

தொல்காப்பியர் காலத்தில் அருகி வந்த சில வழக்குகளும் சுட்டப்படுகின்றன.

ஆண் குரங்கினைக் கடுவன் என்றலும் மரப் பொதும்பினுள் வாழும் கூகையைக் கோட்டான் என்றலும் செவ்வாய்க் கிளியை தத்தை என்றலும் வெவ்வாய் வெருகினைப் பூசை என்றலும் ஆண் குதிரையைச் சேவல் என்றலும் இருள் நிறப் பன்றியை ஏனம் என்றலும் ஆண் எருமையைக் கண்டி என்றலும் அவ்வாறு முடிந்த வழக்கு உண்மையின் கருப்பாகி அறிந்தோர்க்குக் கடியப்படா. (69)

*"பெண்ணும் ஆணும் பிள்ளையும் அவையே" (70)*

பெண், ஆண்பிள்ளை என்ற பெயர்களும் மேற்கூறியவாறு வழக்கினுள் நிலை பெற்றன என்று கூறுவர்.

### 10.5 உலகத்து உயிர்ப்பகுப்பு

உலகம் என்பது ஐம்பூதங்களினால் இயங்குகிறது. எதன் பொருட்டு எனில் உலகில் உள்ள உயிர்களின் பொருட்டு. ஆக இந்த உலகத்து உயிர்களை அவைகளின் திறன்களை அடிப்படையாகக் கொண்டு அறுவகையாகப் பாகுபாடு செய்துள்ளனர்.

*"ஒன்றறி வதுவே உற்றறி வதுவே*
*இரண்டறி வதுவே அதனொடு நாவே*
*மூன்றறி வதுவே அவற்றொடு மூக்கே*
*நான்கறி வதுவே அவற்றொடு கண்ணே*
*ஐந்தறி வதுவே அவற்றொடு செவியே*
*ஆறறி வதுவே அவற்றொடு மனனே*
*நேரிதின் உணர்ந்தோர் நெறிப்படுத் தினரே" (27)*

26. ஓரறிவு உயிரிடம் உள்ள அறிவு எது?

உலகத்து உயிர்கள் ஓரறிவு முதல் ஆறறிவு வரை பாகுபாடு செய்யப்படுகின்றன. அவற்றுள் உடம்பால் அறியக்கூடிய தொடுதல் உணர்ச்சி ஒன்றே உடையது ஓரறிவுயிர்.

தொடுதல் உணர்ச்சியோடு நாவால் உணரக்கூடிய சுவையறிதலாக உணர்ச்சியையும் உடையது ஈரறிவுயிர்.

தொடுதல் சுவையுணர்வு இவற்றோடு மூக்கினால் முகர்ந்தறிதலாகிய உணர்வும் உடையது மூவறிவுயிர்.

27. நாலறிவு உயிரிடம் உள்ள உணர்வு யாவை?

தொடுதல், சுவை, முகர்தலுணர்வு என்னும் இம்மூன்றனோடு கண்களால் கண்டறிதலாகி ஒளியுணர்வும் உடையது நாலறிவுயிர்.

தொடுதல், சுவை, முகர்தல், ஒளியுணர்வு என்னும் நான்கோடு ஓசை அரிதலாகிய செவியுணர்வும் உடையது ஐயறிவுயிர்.

தொடுதல், சுவை, முகர்தல், ஒளி, ஓசை உணர்வு என்னும் ஐந்தனோடு மனத்தால் அறியும் அறிவுடையன ஆறறிவுயிர்கள் ஆகும் என தெளிவாக உணர்ந்தவர்கள் நெறிப்படுத்தியுள்ளனர்.

### 10.5.1 ஓரறிவு உயிர்கள்

28. '_______ _______ ஓரறிவனவே'

*"புல்லும் மரனும் ஓரறி வினவே*
*பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே"* (28)

புல், மரம் இரண்டும் ஓரறிவுடையன. இவற்றுள் 'புல்' புறவுயிர்ப்பு உடையன. (86) அவை தெங்கு, பனை, கமுடு, மூங்கில் முதலாயின. மரம் உள்வுயிர்ப்பு உடையன. (87) அவை இளுப்பை, புளி, ஆச்சா, வேம்பு, தேக்கு முதலாயின.

**புல் வகையின் உறுப்புகள் :**

தோடு, மடல், ஓலை, ஏடு, இதழ், பாளை, ஈர்க்கு, குலை, முதலாயினவும் பிறவும் புல் என்பதன் உறுப்புகளாக வரும். புற வுயிர்ப்பும் உள் வுயிர்ப்பும் இல்லாதவற்றுள் ஒரு சில இத்தகு உறுப்புப் பெயர்கள் பெற்று வரும். அவை வாழை, ஈந்து, தாமரை, கமுகு முதலியன. இவைகளும் புல் வகையினவாம். (88)

**மரவகையின் உறுப்புகள் :**

இலை, முறி, தளிர், கோடு, சினை, குழை, பூ, அரும்பு, நனை என்பனவும் பிறவும் 'மரம்' என்பதன் உறுப்புகளாக வரும். புறவுயிர்ப்பும் உள் வுயிர்ப்பும் இல்லாதவற்றுள் ஒரு சில இவ்வுறுப்புப் பெயர் பெற்று வரும். அவை முருக்கு தணக்கு முதலாயின. இவைகளும் மர வகைகளாகும். (89)

29. புல், மரம் இரண்டிற்கும் பொதுவானவை எவை?

புல், மரம் இரண்டிற்கும் பொதுவானவைகளும் சில உள.

*"காயே பழமே தோலே செதிளே*
*வீழோ டென்றாங் கவையும் அன்ன"* (90)

காய், பழம், தோல், செதிள், வீழ், என்பன புல், மரம் இரண்டிற்கும் பொதுவான உறுப்புப் பெயர்களாக வரும்.

### 10.5.2 ஈரறிவு உயிர்கள்

30. '_____ _______ ஈரறிவினவே'

*"நந்தும் முரளும் ஈரறி வினவே*
*பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே"* (29)

நந்தும் முரளும் ஈரறிவாகிய உள்ளுணர்வும் நாவுணர்வும் உடையன. நந்து என்றதனால் சங்கு, நத்தை, அலகு, நொள்ளை என்பனவும். முரள் என்றதனால் சிப்பி, கிளிஞ்சல், ஈரல் என்பனவும் கொள்ளப்படும்.

31. '______ _______ மூவறிவனவே'

### 10.5.3 மூவறிவு உயிர்கள்

*"சிதலும் எறும்பும் மூவறி வினவே*
*பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே"* (31)

உற்றுணர்வும், நாவுணர்வும் என இவற்றோடு மூக்கினால் முகர்ந்தறியும் உணர்வுடைய சிதல், எறும்பு மூவறிவுடையன. இவைபோல பிறவும் உண்டு. அவை அட்டை முதலாயின.

### 10.5.4 நாலறிவுயிர்கள்

32. '______ ______ நான்கறி வினவே'

*"நண்டும் தும்பியும் நான்கறி வினவே*
*பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே"* (31)

நண்டு, தும்பி நான்கு அறிவினையுடையன. பிறவும், ஞிமிறு, சுரும்பு என்பனவும் உண்டு.

### 10.5.5 ஐயறிவுயிர்கள்

33. '______ ______ ஐயறிவினவே'

*"மாவும் புள்ளும் ஐயறிவினவே*
*பிறவு உளவே அக்கிளைப் பிறப்பே"* (32)

நாற்கால் விலங்குகளும், பறவைகளும் ஐந்தறிவு உடையனவாகும். பிற என்றதனால் பாம்பு, மீன், ஆமை முதலானவும் அடங்கும்.

### 10.5.6 ஆறறிவுயிர்கள்

34.விலங்கினுள் ஆறறிவு டையன எவை?

*"மக்கள் தாமே ஆறறிவுயிரே*
*பிறவும் உளவே அக்கிளைப் பிறப்பே"* (33)

உயிர்வாழ் சாதியுள் மக்கள் எனப்படுவார். ஐம்பொறி உணர்வேயன்றி 'மனம்' என்பதோர் அறிவினையும் உடையவர். பிற என்றதனால் தேவர், அசுரர், இயக்கர் முதலாயினோர் பிறப்புக்கள்.

விலங்கினுள் ஒரு சிலவும் ஆறறிவுடைய உயிர்களும் உண்டு. அவை கிளி, குரங்கு, யானை முதலாயின.

நிலமும் நீரும் தீயும் காற்றும் வானும் என்னும் ஐம்பெரும்பூதம் கலந்த மயக்கமே உலகமாகும். எவை முன் சொல்லப்பட்ட உயிர்ப் பொருள்களைத் திணையும் பாலும் வழுவாமல் திரிபு படாத சொல்லோடு தழுவுதல் வேண்டும். (91)

### 10.6 நால் வருணத்தார்க்கு உரியன

35. நால் வருணத்தார் யார்?

மக்களை செய்யக் கூடிய தொழிலின் அடிப்படையில் நான்காகப் பாகுபாடு செய்தனர். அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் எனப் பிரித்தனர்.

**அந்தணர், அரசர் :**

அறிவு நூல், சரகம் (கமண்டலம்), முக்கோல், மணை (இடுக்கைப்பலகை) என்பவை ஆராயும் இடத்து அந்தணர்க்கு உரியவையாம். (71)

படை, கொடி, குடி, முரசு, குதிரை, களிறு, தேர், கார், முடி ஆகிய ஒன்பதும் செங்கோலை உடைய அரசர்க்கட்கு உரியனவாம். (72)

அந்தணர்களுக்கு (நூற்பா 71)உரியன என்று மேல் சொல்லப்பட்டவற்றுள் நூல், மனை, முக்கோல் போன்றவை அரசர்களுக்கும் பொருந்தும். (73)

பரிசில் கடாநிலையும் பரிசில் விடையும் போல்வன பாடாண் திணைக்குரிய கைக்கிளைப் பொருள் பற்றியும் கொடைத் தொழில் பற்றியும் பெறும் பெயர், நெடுந்தகை, செம்மல் என்றாற் போல்வனவும் பிறவும் பொருந்தச் சொல்லுதல் அந்தணர்க்கும் உரித்தாம். (74)

நகரும், தமது இயற்பெயரும் சிறப்புப் பெயரும், தத்தம் தொழிற்கேற்ற கருவியும் எல்லாரையுஞ் சார்ந்து அவையவை வருதல் பெறும். (75)

தலைமைக்குணம் உடையராகக் கூறுதலும், தத்தமக்கேற்ற நிலைமைக்குப் பொருத்துமாறு நிகழ்த்தும் என்று கூறுவார்கள். (76)

அரசரும் வணிகரும் இல்லாதோர்க்குப் படைக்கல வகை கூறப்பெறா. (77)

**வணிகர் :**

வைசியன் வாணிகத்தினாலே வாழும் வாழ்க்கையைப் பெறுவான்.(78)

பொருள் தெரிந்த வகையால் எண் வகைக் கூலங்களான பயிறு, உளுந்து, கடுகு, கடலை, எள், கொள்ளு, அவரை, துவரை ஆகியவற்றை விளைத்தலும் இவர் கடனாம். (79)

வணிகர்களுக்கு கண்ணியும் (தலையில் சூடும் பூ) தாரும் (மாலை) உண்டு. (80)

**வேளாளர் :**

வேளாளர்களுக்கு உழுதூண் வாழ்க்கை அல்லது பிறவகையான வாழ்க்கை இல்லை என்று சொல்லுவர். (81)

வேந்தரால் ஏவப்பட்ட தொழிலினாலே படையும், கண்ணியும் வேளாளர்களுக்கு உரியவாம். (82)

**பொது :**

அந்தணர் அரசியல் பூண்டொழுகலும் விலக்கப்படாது. அஃதாவது மந்திரிபுரோகிதனாகிய வழிக் கொடியும் குடையும் கவரியும் தாரும் முதலியன அரசரால் பெற்று அவரோடு ஒரு தன்மையராக இருத்தல். (83)

*"வில்லும் வேலும் கழலும் கண்ணியும்*
*தாரும் ஆரமும் தேரும் மாவும்*
*மன்பெறு மரபின் ஏனோர்க்கு முரிய"* (84)

வில், வேல், கழல், கண்ணி, தார், மாலை, தேர், மா என்று சொல்லப்பட்டன எல்லாம் மன்னனாற் பெற்ற மரபினால் வணிகர்க்கும் வேளாளர்கட்கும் உரியனவாம்.

அவர் அத்தகைய மரபுடையோர் ஆனாலும் அவர்களுள்ளும் இழிந்த நிலையினோர்க்கு அத் தகுதிகள் இல்லை. (85)

## 10.7 மரபின் முதன்மை

மரபு என்பது தொன்று தொட்டு வருவது

*"மரபு நிலை திரிதல் செய்யுட் கில்லை*
*மரபு வழிப் பட்ட சொல்லினான"* (92)

மரபு வழிப்பட்ட சொல்லினாலேயே செய்யுள் செய்ய வேண்டுதலின், ஈண்டுச் சொல்லப்பட்ட மரபு நிலையில் திரிதல் செய்யுட் இல்லை.

**நூலின் வகை :**

36. நூல் எத்தனை வகைப்படும்? யாவை?

மரபிலிருந்து திரியாது சிறப்போடு கூடியவாகிய நூல்வகை இரண்டு. அவை முதல் நூல். வழிநூல் எனப்படும். (95)

**முதல் நூலின் இயல்பு :**

*"வினையின் நீங்கிய விளங்கிய அறிவின்*
*முனைவன் கண்டது முதனூ லாகும்"* (96)

37. வழி நூலின் வகை எத்தனை?

இருவகை வினைகளின் நின்றும் நீங்கி விளக்கம் பெற்ற அறிவினையுடைய சான்றோன் செய்தது முதல் நூல் ஆகும்.

**வழிநூலின் இயல்பு :**

வழிநூல் என்று கூறப்படுவது முனைவன் செய்த முதல்நூலின் வழியே அதனை ஒட்டிச் செய்யப்படுவதாகும். (97)

**வழிநூலின் வகை :**

வழிநூலின் நெறியானது நான்கு வகைப்படும். (98)

முதல்நூல் ஆசிரியன் விரித்துச் செய்ததைத் தொகுத்துச் செய்தலும், அவன் தொகுத்துச் செய்ததை விரித்துச் செய்தலும் அவ்விரு வகையினையும் தொகை விரியாகச் சொல்லுதலும் பிறமொழி நூலை மொழிபெயர்த்துத் தமிழினாற் செய்தலும் என வழிநூல் நான்கு வகையாகும். (99)

**நூலின் இயல்பு :**

ஒத்த சூத்திரத்தாலும், காண்டிகையாலும் பொருள் மேற்கூறிய வகையுடையதாகிப், பத்துக் குற்றமும் இல்லாமல், நுட்பமாகிய முப்பத்திரண்டு வகை தந்திர உத்தியோடு பொருந்துமாயின், நுட்பமான அறிவினையுடைய புலவர் அதனை நூலென்று கூறுவர். (100)

சூத்திரத்தின் முன்னர் உரையை விரித்துரைக்கும் இடத்தில் சூத்திரம் பொருள் விளங்கக் காண்டிகை புணர்க்குமிடத்தும் ஆசிரியன் இப்பொருள் இவ்வாறு கூறுதல் வேண்டுமென விகித்தலும், இப் பொருள் இவ்வாறு கூறப்பெறாதென விலக்கலுமாகிய இருவகையோடு பொருந்தின வகையை ஆராய்ந்து சேர்க்கப்பெறும். (101)

**சூத்திரத்தின் இயல்பு :**

மேல் தொகுத்தல், விரித்தல், தொகைவிரி, மொழி பெயர்ந்து ஒன்றாக

38. சூத்திர உத்தி எத்தனை?

அமைத்தல் என நால் வகையினோடும் சொல்லப்பட்ட பொருளோடு சிலவெழுத்தினால் இயன்ற செய்யுளாகி, உரைக்குங் காலத்து அவ்வுரையிற் பொருளெல்லாம் தன்னகத்துட் கொண்டு, நுட்பமாகிய பொருள் தன்மையோடு பொருந்திய விளக்கமுடையதாகியும் கெடுக்க முடியாத துணைச் சூத்திரங்களை உடையதாகியும் பல வகையானும் பயனைத் தருவது சூத்திரத்தின் தன்மையாகும் என்று புலவர் கூறினர். (102)

**காண்டிகை உரை :**

*"பழிப்பில் சூத்திரம் பட்ட பண்பில்*
*கரப்பின்றி முடிவது காண்டிகை யாகும்"* (103)

குற்றமில்லாத சூத்திரஞ் சொன்ன முறையோடு சூத்திரப் பொருளை மறைப்பில்லாமல் விளக்கிக் கூறுவது காண்டிகை உரையாம்.

கூறவந்த பொருள் விட்டுப் போகாமலும் தேவையற்ற அகற்சி இல்லாமல், தேவையான விரிவுடன் பொருந்தி சுட்டப்பெற்ற நூற்பா பயன் உண்டாக்கற் பொருட்டு காரண காரிய நடையில் எடுத்துக் காட்டுகளோடு கூடிய பொருள் அமைந்த நெறியுடையதாகும். (104)

**உரை :**

*"சூத்திரத் துட்பொருள் அன்றியும் யாப்புற*
*இன்றியமையா தியைபவை எல்லாம்*
*ஒன்ற உரைப்பது உரையெனப் படுமே"* (105)

சூத்திரத்து உட்பொருள் அல்லாமலும் அந்நூலினிடத்து யாப்பிற்குப் பொருந்த இன்றியமையாதன எல்லாம் கொணர்ந்து பொருந்துமாறு உரைப்பது உரையாகும்.

மறுதலைக் கேள்வியும் மறுமொழியும் உடையதாய் ஐயப்படல் மருண்டு நிற்றல் ஆகியவைகளை நீக்கித் தன் நூலினாலாவது பிற நூலினாலாவது தெளிவாக ஒரு பொருளை ஒப்புமைப்படுத்தி, இதுவே இதற்கு முடிபென்று நிற்றல் உரைக்கியல்பாம் என்று புலவர் உரைப்பர்.106

**வழிநூலில் குறை :**

மேற் கூறப்பட்ட உரையிலக்கணம் முதலியன நன்கு அமைந்திருப்பினும் முதல் நூலோடு மாறுபடின் அதனால் எல்லாச் சிறப்பும் அழிந்து போகும். (107)

ஒருவன், முதனூல் வழியாகவே நூல் செய்யினும் அறிவு மிக்கோன் செய்யாத கூறுபாட்டினைப் போன்று அந்நூலும் யாப்பினுள்ளே சிதைவுறுதல் கூடும்.

**முதல் நூலின் சிறப்பு :**

*"சிதைவில என்ப முதல்வன் கண்ணே"*
*108*

முதல்வன் இயற்றிய முதனூலாதலின் அந்நூற்கண் அழிவு ஏற்பட மாட்டாது.

**நூற்குற்றங்கள் :**

நூலின்கண் காணப்படுகின்ற குற்றங்கள் பத்து ஆகும்.

சிதைவென்று மேற்கூறப்பட்டன யாவை என்று குற்றமற ஆராய்ந்து பார்க்கில்

39. நூற் குற்றங்கள் எத்தனை?

1. முன்பு கூறியதையே பின்பும் கூறல்
2. முன்பு கூறியதற்கு முரணாகப் பின்பு கூறல்
3. முழுவதுங் கூறாமல் குறைவாகக் கூறல்
4. தேவைக்கு அதிகமாக மிகுதிபடுத்திக் கூறல்
5. பொருள் இல்லாதவைகளைக் கூறுதல்
6. படிப்போர் பொருள் மயக்கமடையும்படி கூறல்
7. பழிக்கப்பட்ட சொற்களோடு தாழ்வுண்டாகுமாறு கூறுதல்
8. கேட்போர்க்கு இனிமையில்லாத நிலையில் சொல்லுதல்
9. தானே ஒரு பொருளை எண்ணிக் கூறுதல்
10. கேட்போர், படிப்போர் மனம் கொள்ளாத வகையில் கூறுதல்

இவை போன்ற பிறவுமாம். 110

*"எதிர்மறுத் துணரின் அத்திறத்தவும் அவையே"* 111

எதிர்மறுத்து உணர்வாராயின் அதாவது மேற்கூறிய நூலின் குற்றங்கள் இல்லை என உணர்ந்தால் அவையே நூலின் குற்றங்களாகும்.

**நூலின் உத்திகள் :**

நூலின் உத்திகள் 32 ஆகும்.

40. நூலின் உத்திகள் எத்தனை?

1. கூறிய பொருளை அறிதல்
2. அதிகார முறை தொகுத்துக் கூறுதல்
3. இறுதியில் தொகுத்துக் கூறல்
4. வகைப்படுத்தி உண்மையை நிலை நாட்டல்
5. சொன்ன செய்தியைக் கொண்டு சொல்லாத செய்தியை இடர்ப்பாடின்றி முடித்தல்
6. வராததைக் கூறும் போது ஏனை வரும் என முடித்தல்
7. வந்தது கொண்டு வராததை உணர்தல்
8. முற்படி அதிகரித்த பொருளை அவ்வகையினால் கூறாது முறைபிறழக் கூறுதல்
9. பொருந்தும் வண்ணம் கூறல்
10. ஒருபக்கத்தே சொல்லுதல்/உறுதிபெறச் சொல்லுதல்
11. தன்னுடைய கொள்கையைக் கூறுதல்

12. கூற வேண்டிய முறையில் தவறாமை.

13. பிறர் உடம்பட்டதைத் தானும் ஏற்றுக் கொள்ளல்

14. முற்கூறியதைப் பாதுகாத்தல்

15. பின்வரும் விதியைப் போற்றுதல

16. தெளிவுபடுத்துவோம் எனல்

17. கூறினோம் என்றல்

18. தான் புதிதாகக் கூறுதல்

19. ஒரு சார்பு இன்மை

20. முன்னோர் முடிவைக் காட்டல்

21. அமைத்துக் கொள்க எனக் கூறல்

23. பல பொருள் இருப்பினும் அவற்றுள் நல்லதனைப் பொருளாகக் கொள்ளுதல்

24. பிறர் கொள்கைகளையும் சான்றாகக் கூறல்

26. பெரியோர் கருத்தை ஏற்றுக் கொண்டு தான் அதையே கூறல்

27. கருத்து விளக்கத்திற்கு வேறு பொருள்களையும் இடையே கூறல்.

28. மாற்றுப் பொருளை உணர்த்தல்

29. சொல்லின் குறையை நிறைவு செய்து கூறல்

30. தேவைக்குத் தகத் தன் கருத்தைத் தந்து இணைத்துக் கூறல்

32. கருத்தை உய்த்துணர்ந்து கூறல்

எனும் 32 உத்திகளோடு உண்மைபெற ஆராய்ந்து சொல்லாத பிறபொருள் அங்கு வந்தாலும் சொல்லிய வகையில் சுருங்குமாறு செய்து உள்ளத்தில் எண்ணிக் குற்றமறத் தெரிந்து கொண்டு சொல்லிய இனத்தோடு சேர்த்து நுண்ணுணர்வினையுடைய புலவர்கள் தங்களுடைய நூலினைச் செய்து உணர்த்துதல் வேண்டும். இவையே உத்திவகைகள் ஆகும்.

### 10.8 தொகுப்புரை

தொன்று தொட்டு வழங்கும் மரபு என்பது போற்றிப் பாதுகாக்கப்பட வேண்டிய ஒன்று. இந்த வகையில் நம் மொழியின் மரபு, உயிர்ப்பாகுபாடு, பெயர்கள் வழங்கும் முறை என்பனவற்றை வழிவழியாக வருகின்ற தலைமுறையினர் அறிந்து கொள்ளும் நோக்கத்தில் மரபியலை யாத்துத் தந்த தொல்காப்பியரின் திறம் போற்றத் தக்கதாகும்.

**வினாவிற்கேற்ற விடைகள்**

| | | |
|---|---|---|
| 1,2,3,4,5,6,7,8,9,10 | - | 10.1 ஐப் பார்க்க |
| 11,12,13,14,15,16,17 | - | 10.2 " |
| 18,19,20,21,22,23 | - | 10.3 " |
| 24,25 | - | 10.4 " |
| 26,27 | - | 10.5 " |
| 28,29 | - | 105.1 " |
| 30 | - | 10.5.2 " |
| 31 | - | 10.5.3 " |
| 32 | - | 10.5.3 " |
| 33 | - | 10.5.5 " |
| 34 | - | 10.5.6 " |
| 35,36 | - | 10.6 " |
| 37,38,39,40 | - | 10.7 " |

**பக்க வினாக்கள்**

1. மரபு என்றால் என்ன? விளக்குக.
2. இளமைப் பெயர்கள் குறித்து விளக்கி எழுதுக.
3. ஆண்பாற் பெயர்கள் குறித்து எழுதுக.
4. பெண்பாற் பெயர்கள் யாவை? விளக்குக.
5. ஓரறிவு, ஈரறிவு உயிர்கள் குறித்து எழுதுக.
6. ஐயறிவு உயிர்கள் யாவை? விளக்குக.
7. 'ஆறறிவு' என்பன எவை? ஆறறிவு உயிர்கள் யாவை?
8. முதல் நூல், வழிநூல் குறித்து விளக்கி எழுதுக.
9. நூலின் குற்றங்கள் யாவை?
10. வணிகர், வேளாளருக்குரிய தொழில்கள் யாவை?

**கட்டுரை வினாக்கள்**

1. உயிர்களின் இளமைப் பெயர்கள் குறித்துக் கட்டுரைக்க
2. ஆண்பால், பெண்பால் பெயர்கள் பற்றி விவரிக்க
3. உலகத்து உயிர்ப் பகுப்பினை விளக்கி கட்டுரை வரைக.
4 நால் வருணத்தார்க்கு உரியன பற்றி கட்டுரை எழுதுக.
5. நூலின் இயல்பும், குற்றங்களும் உத்திகளும் குறித்துக் கட்டுரை வரைக